நூல் : தமிழகத்தில் பண்பாட்டு நெருக்கடிகள்
(புதிய காலனியச் சூழலில்)

ஆசிரியர் : ஞானி (கி. பழனிச்சாமி)
123 காளீசுவரர் நகர் கோவை 641 009

உரிமை : ஆசிரியர்க்கு

முதற் பதிப்பு : நவம்பர் 1994

வெளியீடு : நிகழ் வெளியீடு 123 காளீசுவரர் நகர் கோவை 641 009

விற்பனை உரிமை : விடியல் பதிப்பகம்
3 மாரியம்மன் கோவில் வீதி
உப்பிலிபாளையம் கோவை 641 015

விலை : ரூ. 40.-

அச்சாக்கம் : வைகை அச்சகம்
30 பத்மநாப நகர் சூளைமேடு
சென்னை 600 094

## காணிக்கை

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு காலமானார்
என் அண்ணார் சே. சின்னையன் அவர்கள்
ஓர் ஆண்டுக்கு முன்பு காலமானார்
என் அண்ணி ராசம்மாள் அவர்கள்

அடுப்படியில் கருகினார் என் அண்ணா
கல்விப் படிக்கட்டுகளில் நான் ஏறினேன்
ஆலமரத்தைத் தாங்கும் விழுது
அண்ணாவின் வழியே நான் பார்த்தேன்.
கருணையாய் கலை உணர்வாய்
என் நெஞ்சில்
என்றும் வாழ்வார் என் அண்ணா.

இரண்டைப் பறிகொடுத்து, எட்டு குழந்தைகளை
வளர்த்து ஆளாக்கினார்
எங்கள் குடும்பத்திற்குள் வந்த அண்ணி.
கதைகளாய், பழமொழிகளாய்
விகடமாய் வினயமாய்
எங்களுக்குள் நிறைந்திருப்பவர் அண்ணி

அண்ணார் இறந்த அன்று
இரவெல்லாம் பாடல்களில்
தன்னைக் கரைத்துக் கொண்டார் அண்ணி.

இப்படி ஒரு சாவு நேர்ந்திருக்கக் கூடாது
எங்கள் அண்ணிக்கு
என்று கலங்குகிறது என் உள்ளம்

இவர்களின் நினைவாய்
இந்த நூல்

ஞானி

# பதிப்புரை/நன்றியுரை

இன்று நம்மிடையில் தமிழியற் சிந்தனைகள் ஆற்றலோடு எழுச்சி பெற்றுள்ளன. இன்றைய சூழலில் தமிழனுக்கு, தமிழ் மக்களுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடிகள்தான் இதற்குக் காரணம் என்பதில் ஐயமில்லை. தமிழக வரலாற்றில் முன் எப்பொழுதைக் காட்டிலும் இன்று தமிழனுக்கு நேர்ந்துள்ள நெருக்கடிகள் மிகக் கடுமையானவை. தமிழனை வரலாற்றிலிருந்து வெளியேற்றுவது என்ற முறையில் தமிழகத்தின் உள்ளிருந்தும் புறத்திலிருந்தும் ஆற்றல் மிக்க சக்திகள் செயல்படுகின்றன. இவற்றுக்கு எதிர் வினையாகவே தமிழ், தமிழர் இயக்கங்கள் எழுந்துள்ளன.

தமிழகத்தில் மெய்யியல் / கருத்தியல் தளத்தில் செயல்படும் நெருக்கடிகள் / சிக்கல்கள் பற்றி நான் கடந்த சில ஆண்டுகளுக்கிடையில் எழுதிய சில கட்டுரைகளை இந்த நூலில் தொகுத்துள்ளேன். மெய்யியல் / கருத்தியல் தளத்தில் நிலவும் இந்த சிக்கல்கள் உலக அளவில் கடும் நெருக்கடிகளை அண்மைக் காலத்தில் தோற்றுவித்துள்ள புதிய காலனியச் சூழலோடு நெருக்கமான உறவுடையவை.

தமிழகத்தின் வாழ்வும், வரலாறும் தமிழகத்தினுள் செயல்படும் சக்திகளோடு மட்டுமல்லாமல், உலக அளவிலான சக்திகளோடும் நெருக்கமான உறவுடையவை என்பதனால்தான் புதிய காலனியம் பற்றி, நண்பர் அறிவன் அவர்கள் சுட்டிக் காட்டியதைப் போல, நான் எல்லாக் கட்டுரைகளிலும் பலமுறை சொல்லியிருக்கிறேன்.

பெரியாரியம், தமிழியம் ஆகியவற்றினுள் செயல்படும் நெருக்கடிகள் பற்றி விரிவாக நான் எழுதியுள்ள அளவுக்கு மார்க்சியத்தினுள் செயல்படும் நெருக்கடிகள் பற்றி இந்தக் கட்டுரைகளில் எழுதவில்லை. அண்மைக் காலத்தில் விரிவாகப் பேசப்படும் பெண்ணியம், தலித்தியம் ஆகியவற்றினுள் செயல்படும் நெருக்கடிகள் பற்றி சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளேன்.

தமிழகத்தில் மெய்யியல் / கருத்தியல் நெருக்கடிகள் என்று இந்த நூலுக்குப் பெயரிடுவதுதான் பொருத்தம் என்றாலும் 'எளிமை' கருதி பண்பாட்டு நெருக்கடிகள் என குறித்திருக் கிறேன். தவிர, தமிழகத்தில் செயல்படும் மெய்யியல் அல்லது கருத்தியல் என்பனவற்றை மார்க்சியம், பெரியாரியம், தமிழியம், பெண்ணியம், தலித்தியம் என்ற அளவில் மட்டும் குறைத்து விடவும் இயலாது. அன்றியும் இத்தகைய நெருக்கடிகள் தமிழ கத்தின் / உலகத்தின் வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் வைத்து, விரிவான, ஆழமான ஆய்வுக்கு உரியவை. இத்தகைய ஆய்வுகள் தமிழின் / தமிழகத்தின் ஆக்கத்திற்குப் பெரிதாகப் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

என் வரையறைகளை நான் தெரிந்து வைத்திருக்கிறேன். வழக்கம் போலவே என் கட்டுரைகள் திறனாய்வுக்கு உரியவை. திறனாய்வின் நோக்கம் நம்மை நாமே வளமான முறையில் திரட்டிக் கொள்வதாக இருக்க முடியும்.

சில கருத்தரங்குகளில் நான் பங்குபெற வாய்ப்புகள் நேர்ந்த பொழுது, என் படிப்பறிவை மேலும் விரிவுபடுத்திக் கொள்ளவும், தொடர்ந்து என் சிந்தனைகளைத் திரட்டிக் கொள்ளவும், இதன் மூலம் என்னை நானே உருவாக்கிக் கொள்ளவும் எனக்குப் பேருதவி செய்த பெரியவர்கள் மற்றும் நண்பர்களை இங்கு நினைவு கூர்கிறேன். திரு. குறிஞ்சி, திரு. டேவிட் சித்தையா, அருள் திரு. எக்ஸ். டி. செல்வராசு, திரு. குன்றம், மு. ராம ரத்நம், திரு. கருணா மனோகரன், திரு. தமிழ்மணி (புதுவை), பேராசிரியர் தீரன், பேராசிரியர் க. ப. அறவாணன், பேரா சிரியர் சிற்பி. பாலசுப்பிரமணியம் முதலியவர்களுக்கு என் மனம் நிறைந்த நன்றிகள்.

இத்தொகுப்பில் உள்ள கட்டுரைகளை வெளியிட்ட கனவு, மறை அருவி, நிறப்பிரிகை, தாராமதி, அன்னம், இலக்கியப் பாசறை ஆகிய இதழ்களின் ஆசிரியர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகள்!

என் வேண்டுகோளை ஏற்று அணிந்துரை வழங்கிய நண் பர்கள் திரு. அறிவன், திரு. விளவை இராமசாமி, ஆகியவர் களுக்கும், என் கட்டுரைத் தொகுப்பை வெளியிடுவதற்குத் தேவையான உதவி செய்த விடியல் பதிப்பகம் தோழர் சிவ ஞானம் அவர்களுக்கும், நான் படிக்கவும் எழுதவும் எனக்கு

உற்ற துணையாக இருக்கும் நண்பர் திரு. சாந்தாராமுக்கும் என் நன்றிகள்!

நூலாக்கத்தைச் செப்பமுறச் செய்த வைகை அச்சக உரிமையாளருக்கும் ஊழியர்களுக்கும் நன்றிகள்!

நண்பர்கள் சிலரின் நிதி உதவியோடு இந்த நூல் வெளி வருகிறது. நிதி உதவி செய்த நண்பர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள் உரியவை. தமிழின், தமிழ் மக்களின் ஆக்கத்தில் ஈடுபாடு கொண்ட அனைவருமே இந்த நூலை வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை. ஆக்க முறையிலான திறனாய்வி லிருந்து மட்டுமல்லாமல், எதிர்மறை முறையிலான திறனாய்வி லிருந்தும் கற்றுக்கொள்ளும் திறன் தமிழ் ஆர்வலர்களுக்கு உண்டு என்ற நம்பிக்கையோடு நிகழ் வெளியீடாக இந்த நூல் வெளிவருகிறது.

**31-8-94** **ஞானி**

# அணிந்துரை

நண்பர் ஞானி அவர்களின் இத்தொகுப்பில் உள்ள கட்டுரை களைப் படித்தபோது ஓர் உண்மை எனக்குத் தென்பட்டது. இவரது எல்லாக் கட்டுரைகளின் ஊடேயும் புதிய காலனியம் என்ற தடம் இடைவிடாது செல்கிறது. மூன்றாம் உலக நாடு களை நவீன காலத்து ஏகாதிபத்தியம் எல்லாக் களங்களி னுள்ளும் புகுந்து உச்ச அளவில் சுரண்டுகிறது. ஏகாதிபத்தி யத்தை தமக்குள் தாங்கிச் செயல்படுத்தும் தரகர்களாக மூன்றாம் உலக நாடுகளின் முதலாளிகள் இருக்கின்றனர். பெரும்பாலான மூன்றாம் உலக நாடுகளின் அரசுகள், ஏகாதிபத்தியத்திற்குத் தான் உலகம் சொந்தம் என்பதை ஏற்றுக் கொள்கின்றன.

முன்னைய ஏகாதிபத்தியத்திலிருந்து புதிய காலனியம் என்று அழைக்கப்படும் நவீன ஏகாதிபத்தியம் பெரும்பகுதி மாறு பட்டதாக, பல மடங்கு ஆற்றல் பெற்றதாக செயல்படுகிறது. நவீன அறிவியல் தொழில் நுட்பம் என்பதனுள் புதிய காலனி யம் தங்கியிருக்கிறது. பசுமைப்புரட்சி, தொழில் துறைகள், கல்வி, மருத்துவம், திரைப்படம், கலைகள், விளையாட்டுகள் முதலிய அனைத்துக் களங்களின் வழியே ஏகாதிபத்தியம் நமக்குள் வந்து தங்கியிருக்கிறது. இது நமக்கு வாழ்க்கை முறையையும், சிந்தனையையும், கலை உணர்வையும் தீர்மானிக் கிறது. படிப்பாளிகள் என்ற முறையில் நம் வாழ்க்கையைத் தீர்மானிக்கும் சக்தியை, புதிய காலனியத்திடம் நாம் விட்டுக் கொடுத்திருக்கிறோம். நாம் இப்பொழுது நாமாக இல்லை. ஆதிக்க சக்திகள் நமக்கென தயாரித்திருக்கிற பிம்பங்களில் நாம் 'வாழ்கிறோம்.' மரபு, கலாச்சாரம், மொழி முதலியவற்றில் நம்மை இழந்திருக்கிறோம். சுய வலுவற்ற நம்மை ஆதிக்கச் சக்திகள் இனி எதுவும் செய்யலாம். நம்மிடம் எஞ்சியிருப்பது நம் தன்முனைப்பைத் தவிர வேறு இல்லை. தன்முனைப்போடு நாம் கொஞ்ச காலம் ஆடிப்பாடி பிறகு தகர்ந்து போவோம்.

புதிய காலனியம் பற்றி நண்பர் ஞானி தரும் விபரங்கள் நமக்குள் கடும் அதிர்வுகளை ஏற்படுத்துகின்றன. இது மட்டு மல்ல புதிய காலனியச் சூழலில் மார்க்சியம் தனக்குள் எவ்வாறு

சிதைந்திருக்கிறது என்பதை ஞானி விளக்குகிறார். பெரியாரியம் தன் மையத்தை இழந்து ஓரங்களில் எவ்வாறு உரக்கக் கத்துகிறது என்பதை விளக்குகிறார். புதிய காலனியச் சூழலில் தன்னை வைத்து வளர்த்துக் கொள்ளாத, புதிய காலனியச் சூழலுக்கான எதிர்வினையைத் தனக்குள் வளர்த்துக்கொள்ளாத தமிழியம் எவ்வாறு வெறும் சுவை நுகர்வுக்குள், தற்பெருமைக்குள் தகர்ந்துபோகும் என்பதை விளக்குகிறார். புதியகாலனியச் சூழலில் பெண்களின் மீதும் தலித் மக்கள் மீதும் சுரண்டலும் ஒடுக்கு முறையும் பல மடங்கு கூடுதலாகும் என்பதைச் சுட்டிக் காட்டுவதோடு, புதிய காலனியச் சூழலில் பெண்ணியமும் தலித்தியமும் எவ்வாறு தன் எல்லைகளை விரித்துக் கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி ஞானி பேசுகிறார்.

புதிய காலனியச் சூழலில், தமிழகத்தின் அனைத்துக் களங்களினுள்ளும் தொடர்ந்து ஏற்படும் நெருக்கடிகளை நோக்கி நம் கவனத்தைப் பதிய வைக்கிறார் ஞானி. புதிய காலனியத்திற்கு மார்க்சியம் முதலிய கருத்தியல்கள் எத்தகைய எதிர்வினை தர வேண்டும் என்பது பற்றியும் தன் சிந்தனைகளை முன் வைக்கிறார். மார்க்சியம் தனக்குள் இருக்கிற முதலாளியத்தைக் களைந்துக் கொள்ளவேண்டும். சாதி, மதம், பார்ப்பனியம் பற்றிய எதிர்ப்புணர்வில் மட்டும் மையம் கொள்கிற பெரியாரியம் முதலாளியப் பெரியாரியம். சமதர்மத்தில் மையம் கொள்கிற பொழுதுதான் பெரியாரியம் தனக்குள்ளிருந்து முதலாளியத்தைக் களைந்து கொள்ள முடியும். தமிழியல் ஆய்வுகளுக்குள்ளும் படைப்புகளுக்குள்ளும், படைப்பாளிகள் மற்றும் திறனாய்வாளர்களுக்குள்ளும் பதிந்திருக்கிற ஆதிக்க உணர்வை முதலாளியம் மற்றும் அரசு அதிகாரம் என்றுதான் கண்டு கொள்ளவேண்டும். ஆணாதிக்கம் என்பதனுள்ளும் தோண்டிக் கொண்டே சென்றால் நம் காலத்து ஆதிக்க சக்திகளின் வசப்பட்டிருக்கும் ஆண்களின் ஆதிக்கம் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். தலித் மக்களின் விடுதலை என்பது சாதியத்திலிருந்து விடுதலை பெறுவதாக மட்டும் இல்லை. இந்தச் சாதியம் முதலாளியத்திற்கு அரணாகவும் அமைந்திருக்கிறது. இவ்வாறெல்லாம் ஞானி விவாதிக்கிறார். மனித விடுதலை என்பது பற்றி இடையறாது பேசுகிறார். மார்க்சியர் மற்றும் பெரியாரியர் முதலியவர்கள் தமக்குள் இருக்கும் ஆதிக்கத் தடங்களைக் கண்டு கொள்வதிலிருந்து அவர்களின் விடுதலைக்கான போராட்டம் தொடங்க வேண்டும் என்கிறார் ஞானி. இது நீண்ட காலப் போராட்டம் என்பதில் ஐயமில்லை. இத்தகைய போராட்டத்தில் தான் மனிதன் தனக்

கான விடுதலையைப் பெற முடியும். எல்லாக் கட்டுரைகளிலும் ஓயாது முழங்குகிறது இந்த விடுதலைக்குரல்.

தொகுப்பின் இறுதியில் சில நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களைத் தந்திருக்கிறார். சற்று சங்கடத்தோடுதான் இந்தக் கடிதங்களைப் படிக்க வேண்டியிருக்கிறது. தமிழகத்தில் அறிஞர்கள் என்றும் சிந்தனையாளர்கள் என்றும் தம்மைக் கருதிக் கொள்கிறவர்களுக்கிடையில் உறவு இல்லை. ஆரோக்கியமான விவாதங்கள் இல்லை. தமிழ் மக்களின் நலன்களின் பால் இவர்கள் கொண்டுள்ள ஈடுபாடுகளை நாம் சந்தேகிக்க வேண்டியதில்லை. சிந்தனையாளர்களுக்கிடையில் உறவு இல்லாத நிலையில் தமிழ் மக்களின் நலன்கள் காப்பாற்றப்படும் என்பதில் நாம் நம்பிக்கை கொள்ள முடியாது. நண்பர் ஞானி வெற்றிடத்தில் தான் கத்துகிறாரோ என்ற ஐயம் ஏற்படுகிறது. இக்கடிதங்களை வெளியிடுவதன்மூலம் நண்பர் ஞானிக்கு என்ன பதில் கிடைத்து விடும்? பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

அறிவன்

# அணிந்துரை

ஏகாதிபத்தியம், முதலாளியம், எப்படி நம்மை எந்தெந்த வழிகளில் கேவலப்படுத்துகிறது, சிறுமைப்படுத்துகிறது, நம்முடைய ஆற்றல்களை அழிகிறது என ஞானி தன் கட்டுரைகளில் சொல்லும் பொழுது நம் வாழ்க்கை அனுபவங்களோடு இவை முற்றாகப் பொருந்தி, நம் கண்ணில் நாமே ஓவியமாகிறோம். கிராமங்கள் அழிந்து நகரங்கள் பெருகுவதால் வரும் தீமைகள் பற்றி இவர் சொல்லும்போது நம் மனத்தில் ஆழமாய் தைக்கிறது. வரலாறு இயங்கும் விதம், வரலாற்றில் இருந்து ஆற்றல் பெறுவது என்றெல்லாம் பேசும்போது நமக்குள் புதிய வெளிச்சம் எழுகிறது.

தமிழனுக்கு அவனுடைய நெருக்கடிகளைச் சொல்லி, அழிவைச் சொல்லி முடிவாக தமிழனுடைய வரலாறு, அது செல்லும் திசை, ஆற்றல், அதைப் பெறும் விதம், என்றெல்லாம் இவர் பேசும்போது, நம்மைப் புதுப்பிக்கும் திறன் நமக்குள் எழுகிறது. தமிழர் தலைவர்களின் முகமூடிகளை இதைவிட அழகாக யார் கிழிக்க முடியும்? வள்ளுவர், இளங்கோ, பாரதி, பெரியார், பாரதிதாசன் ஆகியவர்களைப் பற்றி இவர் சொல்லும்போது, இவர்கள் நமக்குள் கலந்து நிறைந்திருப்பதை உணர்கிறோம். ஞானியின் பார்வையில் பெரியாரின் தோற்றம் கூடுதலான பெருமிதம் கொள்கிறது.

இந்தப் புத்தகத்தில் உள்ள எல்லாக் கட்டுரைகளிலும் அடிநாதமாக ஓடுவது அன்பு. ஒரு தாய் தன் குழந்தைக்குப்பாடம் சொல்வது போல எல்லாவற்றையும் உள்வாங்கி தன் மொழியில் எளிமையாகச் சொல்லுகிறார். கட்டுரைகள் பல இடங்களில் கவிதையாகி, நமக்குள் இன்ப அதிர்வுகளை ஏற்படுத்துகின்றன.

வெறுப்பை மட்டும் மையம் கொண்ட ஒரு சமூகப் பார்வை மற்றும் அரசியல்தான் இதுவரை நடந்தது. நடந்து கொண்டும் இருக்கிறது. பலன், எதிரிகள் வெற்றி பெற்றுக் கொண்டே இருப்பதுதான். இவரிடத்தில் மார்க்சியம் பல பரிமாணங்

களோடு அழகாக ஒளி வீசுகிறது. எதிரிகளிடத்தில் கோபம் கொள்ளும்போது கூட கலை நயம் குறையாமல் விவாதிக்கிறார். மார்க்சியவாதிகளுக்கு, இன்றைய சூழலில் இந்தப் புத்தகம் மக்களோடு உரையாடுவதற்கு அருமையானதொரு வழியைக் காட்டுகிறது. இதுபோல உரையாடும் போதுதான், மக்களின் ஆற்றல்களை கட்டவிழ்க்கவும் முடியும். மார்க்சியம் இவர் மூலமாக வெளி வரும்பொழுது, அதன் விசுவரூபம் தெரிகிறது. குறுகத்தரித்த மார்க்சியத்தால் வெறுமனே கோபம்தான் கொள்ள முடியும். பார்ப்பனியம் பற்றி இன்று நடக்கும் சர்ச்சை களால் எந்தப் பயனும் இல்லை. வரலாற்றை மையம் கொண்ட ஞானியின் பார்வைதான் ஒளிச்சுடரோடு உள்ளது. எஸ். என். நாகராசன் அவர்களிடமிருந்து ஞானி கற்றுக்கொண்ட மார்க்சி யம் நன்றாகவே விளைந்திருக்கிறது. தமிழ்த்தேசிய உணர்வை வளர்த்தெடுப்பதில் இந்தப் புத்தகம் தன்னுடைய பங்கைச் சரியாகவே செய்துள்ளது. தமிழினம் உரிய வகையில் இதைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். ஞானி தன் சொந்த வாழ்க்கையில் சாதகமான அம்சங்கள் குறைந்த நிலையிலும், ஆற்றல் குறையாமலும், தன்னைப் புதுப்பித்துக் கொண்டும் இருப்பதுமே, இந்தப் புத்தகம் சொல்லும் செய்திகளுக்கு நடை முறை உதாரணம் ஆகும்.

**விளவை இராமசாமி**

# உள்ளடக்கம்

# 1

# கலாச்சாரக் களங்களில் ஒடுக்குமுறை

1. கலாச்சாரக் களங்களில் செயல்படும் ஒடுக்குமுறை என்பதை விரிந்த அளவிலான சமூகப் பரப்பில் செயல்படும் ஒடுக்குமுறைகளிலிருந்து பிரித்துப் பேச முடியாது. இத்தகைய ஒடுக்குமுறைகள் வரலாற்றில் நெடுங்காலமாகச் செயல்படுகின்றன. வரலாற்றுக்கு முன்னைய காலத்திலேயே பெண் ஒடுக்குமுறைக்கு உள்ளானாள். வர்க்க ஏற்றத்தாழ்வுகள், தனிஉடைமை, அரசு அதிகாரம் ஏற்பட்ட வரலாற்றுச் சூழலில் கைவினைஞர்கள் உழவர்கள் ஒடுக்குமுறைக்கு உள்ளானார்கள். இந்தியாவைப் பொருத்தவரை சாதிய ஒடுக்குமுறையை இங்கு குறிப்பிட்டுச் சொல்லலாம். முன்னைய காலங்களைவிட முதலாளியச் சமூக அமைப்பில் மனித விடுதலைக்கான வாய்ப்புகள் தோன்றிய அதே சமயத்தில் மனிதர்கள் மீது செலுத்தப்படும் ஒடுக்குமுறைகள் பரவலாயின. அன்றியும் அதிகரித்தன. இயந்திரங்கள் மனிதர்களை மத்திய இருட்காலத்திலிருந்து விடுவிக்க முடியும் என்ற நிலைமை தோன்றியது. விஞ்ஞானம் மனிதர்களுக்கு உலகம் பற்றிய புதிய பார்வையை வழங்கியது. அதே சமயம் ஐரோப்பாவில் தோன்றி உலக அளவில் பரவிய முதலாளியம் இந்தியா போன்ற நாடுகளைத் தம் அதிகார எல்லைக்குள் அகப்படுத்தியது. ஏகாதிபத்தியம்/நவீன காலனியாதிக்கம் என்று அறியப்படும் அதிகாரம் உலக அளவிலான சமூகப் பரப்பின் அனைத்துக் களங்களையும் தன் சுரண்டலுக்கும், அதற்கான ஒடுக்குமுறைக்கும் உள்ளாக்கி வருவது அண்மைக்கால வரலாறு. நவீன காலனி ஆதிக்கச் சூழலில் முதலாளியம் என்பது பொறுக்கித்தனமான முதலாளியம். இந்த முதலாளியம், வளர்ச்சி என்று பேசுவது உண்மையில் அழிப்புச் செயல்தான். அனைத்தையும் தன் அதிகார எல்லைக்குள் அகப்படுத்தி, உச்சஅளவில் சுரண்டி, மக்களுக்குக் கொஞ்சமும்,பெரும் பகுதியை ஏகாதிபத்தியத்திற்கும் ஒப்படைக்கிற கொடுமையைத் தான் இது துணிந்து செய்கிறது. இந்தப் போக்குக்கான புதிய பெயர்தான் சந்தைப் பொருளாதாரம். மக்கள் மீது ஒடுக்குமுறையை உச்ச அளவில் செயல்படுத்துவதற்கான அரசியல்

அதிகாரம், இராணுவத்தைப் பெருமளவு பலப்படுத்துகிறது. இதுவரையில் சனநாயகம் என்று அறியப்பட்ட அரசியல் கலாச் சாரத்தைத் தன் தேவைக்கேற்றவாறு மாற்றி வருகிறது. அரசியல் அதிகாரம், கருத்தியல் தளத்தில் தன் ஒடுக்குமுறையை நியாயப்படுத்திக்கொள்ள முனைகிறது.

2. இது பொதுப்படையான வர்ணனை. பெரும்பாலும் நம் இந்தியச் சூழலிலிருந்து தரப்படும் வர்ணனை. சில தனிக் களங்களில் நவீன காலனியாதிக்கம்/முதலாளியத்தின் சுரண்ட லும் ஒடுக்குமுறையும் எவ்வாறு செயல்படுகின்றன என்பதை இப்பொழுது பார்க்கலாம். குறிப்பாக வேளாண்மைத்துறை, அறுபதுகளில் இந்தியாவிற்கு வந்து சேர்ந்த பசுமைப் புரட்சி பற்றிய உண்மைநிலவரம் இப்பொழுது பலருக்குக் கண்கூடாகத் தெரிகிறது. வேளாண்மைத் துறையில் முதலாளியப் போக்கைப் பசுமைப்புரட்சி வெளிப்படுத்துகிறது. உணவு உற்பத்தி தொடக்கத்தில் பெருகினாலும் இன்று உணவு உற்பத்தியில் சரிவு ஏற்பட்டு வருகிறது. இந்தியாவில் வறுமையை ஒழிப்பதற் காக ஏகாதிபத்தியத்தின் பரிந்துரையோடு, உதவியோடு செயல் படுத்தப்பட்டது பசுமைப்புரட்சி. இந்தியாவின் வறுமை ஒழிய வில்லை. இதற்கு மாறாக வறுமை அதிகரித்திருக்கிறது. பன்னாட்டுத் தொழில் நிறுவனங்கள் தாம் உற்பத்தி செய்யும் இரசாயன உரம், பூச்சிக்கொல்லி மருந்துகள் ஆகியவற்றை உழவர்கள் மீது திணிப்பதன் மூலம் பெரும் இலாபத்தை ஈட்டி யுள்ளன. உழவர்கள் கடனாளிகள் ஆகியுள்ளனர். பாரம்பரிய வேளாண்மை முறை பற்றிய அறிவு இன்று அவர்களுக்குப் பயன்படாது. நவீன வேளாண்மை முறை என்பதற்காக நிபுணர் களை இன்று அவர்கள் சார்ந்து வாழ நேர்ந்திருக்கிறது. அரசு அதிகாரம், கிராமப்புறங்களில் பெருமளவு சென்றதற்குப் பசுமைப்புரட்சி ஒரு முக்கியமான காரணம். நகரங்களைப் பராமரிப்பதற்காக, உழவர்களுக்குக் கட்டுப்படியாகாத விலை யில் நெல் கொள்முதல் செய்யப்படுகிறது. நகரம் சார்ந்த தொழில்துறை உற்பத்திப் பொருட்களின் விலை, அதிகரித்த விகிதத்தில் கிராமப்புறம் சார்ந்த உணவு உற்பத்திப் பொருட் களின விலை அதிகரிக்கவில்லை. அரசு அதிகாரம், முதலாளியம், நடுத்தர வர்க்கம் முதலியவற்றின் தேவைக்காகக் கிராமப் புறங்கள் இவ்வாறு சுரண்டப்படுகின்றன. பசுமைப்புரட்சியின் தொடர்ச்சிதான் வெண்மைப்புரட்சி. நகர்ப்புறத்தின் பால் தேவையை நிறைவு செய்வதற்காக வந்ததுதான் வெண்மைப் புரட்சி. கோழிப்பண்ணை, முட்டை உற்பத்தி, ஆடுகள்

யைத் தருவதன் மூலம் ஆசிரியர் சமூகம் தன் வாழ்வுக்கான விழுமியங்களை இழந்து விடுகிறது. கல்வி மனிதனைப் படைப்ப தற்குப் பதிலாக அழிக்கிறது. மருத்துவர் புதிய நோய்களை உற்பத்தி செய்கிறார். ஏகாதிபத்தியம் இப்படிப் புதிய நோய் களை உற்பத்தி செய்து மனிதனை அழிக்கிறது. ஏழைகள் சமூகத்திற்குத் தேவையில்லை என்கிறது. முதலாளிகள் நலமாக இருக்க வேண்டும் என்று சொல்லுகிறது. தொழில் வளர்ச்சி குறைந்த நிலையில் வேலையில்லாத பலர் காவல்துறை முதலிய பணிகளில் சேருவதன் மூலம் மக்களை அழிக்கிறார்கள். தாமும் அழிகிறார்கள். அரசுப் பதவிகளை விரும்பித் தேடிச் சென்று அமர்ந்த படிப்பாளிகள், மக்கள் மீது அன்பு அற்று அதிகார வெறிக்கும், நுகர்வு வெறிக்கும் பலியாகி, தமக்குள் மனிதப் பண்பில் சிறுத்துப் போகிறார்கள். வாழ்வின் விரிந்த பரப்பு அவர்களுக்குத் தெரிவதில்லை. விஞ்ஞானிகள், அறிவாராய்ச்சி யில் தம்மை ஈடுபடுத்திக் கொள்வதன் மூலம் முதலாளியத்தின் பெருக்கத்திற்கான ஆய்வுகளைச் செய்து மக்களை அழிக்கி றார்கள். இயற்கையை அழிக்கிறார்கள். பிரபஞ்சத்தின் பேராற் றலும், இயற்கையின் கோடிக்கணக்கான அழகு நுட்பங்களும் இவர்கள் வாழ்க்கைக்குள் வருவதில்லை. இவர்கள் ஏகாதிபத் தியத்தின் கருவிகள், முதலாளிகள் பொருளுக்கும் அதிகாரத் திற்கும் தம்மை விற்றுக் கொண்டவர்கள். மனிதர் அனைவரும் சேர்ந்து உழைத்து விளைவைப் பகிர்ந்து கொள்ளும் உன்னத மான சமூகம்தான்—சோசலிச சமூகம்தான் மனித வாழ்வுக்கு மரியாதை தரும் சமூகம். இந்த அரசியலைப் பொய் என்றும் பொருந்தாது என்றும் பேசும் கட்சிகள், மனிதனை, அவன் கலாச்சாரத்தை அழிக்கின்றன. பல இலட்சம் ஆண்டுகளாக பல நூறு வரலாற்றுக் கூட்டங்களின் வழியே மனிதன் வளர்ந்து வந்திருக்கிறான். இவன் உருவாக்கிய கலைகள் எண்ணிறந் தவை. கலைகள் மூலம் மனிதன் தன் விடுதலையைப் பிரகடனப் படுத்தி இருக்கிறான். இலக்கியங்களின் மூலம் தன் இலட்சியங் களை வெளியிட்டிருக்கிறான் அன்பு, நேசம், தியாகம் ஆகிய வற்றின் மூலம் தன்னை இழப்பதில் இன்பம் உண்டு என்று காட்டியிருக்கிறான். இவன் படைத்த கடவுள் மூலம், தான் பெற வேண்டிய கருணை, பேரறிவு, ஆற்றல் முதலியவற்றை வெளியிட்டிருக்கிறான். பல்வேறு வகையான தொழில் நுட்பங் களை வளர்த்ததன் மூலம் தன் புலன்களின் நுட்பங்களை வளர்த் திருக்கிறான். இயற்கையின் மாபெரும் பரப்பையும், அதன் பல நூறு வேறுபட்ட காட்சிகளையும் தனக்குள் வண்ணங்களாய் வடிவங்களாய்ப் பதித்திருக்கிறான். இவ்வகைப் பதிவின்மூலம்

அறுவை சிகிச்சை முறைகள் இன்று பிரபலமாகி வருகின்றன. நாற்பது வயதிற்கு மேற்பட்ட பெண்கள் தம் கருப்பைச் சுமைகளை இல்லாமற் செய்துகொள்கின்றனர். கூடுதலான பொறியியல் அறிவை மாணவர் தலைக்குள் திணிக்கும் கல்லூரிகள் வழியே நுண்ணிறிவுமிக்க மாணவர்கள் மேல்நாடுகளில் குடியேறுகின்றனர். மாணவர் தலையில் உச்ச அளவில் அறிவைத் திணிக்கும் பள்ளிகளும் கல்லூரிகளும் இவற்றில் பணிபுரியும் ஆசிரியர்களும் நிர்வாகிகளும் பெரிதும் போற்றப்படுகின்றனர். நவீன அறிவியலும் தொழில் நுட்பமும் பற்றிய கல்வித்தேவைக்கான தனியார் கல்லூரிகள், மாணவர்களின் பெற்றோர்களிடமிருந்து பெறும் நன்கொடையோடு செயல்படுகின்றன. அரசியல் சட்டம் வழங்கியிருக்கும் தனி உரிமைகளைப் பயன்படுத்தி மதச் சிறுபான்மையினரை, கல்வி நிறுவனங்களின் மூலம் இந்தச் சமூகத்திற்குத் தம்மை இன்றியமையாதவர்களாக ஆக்கியுள்ளனர். மருத்துவர்கள், பொறியியலாளர்கள், கட்டிடக் கலைஞர்கள், பேராசிரியர்கள் முதலியவர்களோடு அரசு அதிகாரிகள், பெரும் வியாபாரிகள், தொழில் துறைத் தலைவர்கள், அரசியல் பிரமுகர்கள் ஆகியவர்கள் நகரத்தை அழகுபடுத்துகின்றனர். அங்கங்கே குறுகிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ள பூங்காக்களும், மிருகக்காட்சிகளும் கூட நகரத்தை அழகுபடுத்துகின்றன.

தொழிற்சாலைகளைத் தவிர நகர்ப்புறங்களில் நாள்தோறும் பெருகிவரும் பல்லாயிரக்கணக்கிலான வாகனங்கள் நகர்ப்புறங்களில் பல நூறு டன் கணக்கில் புகையை, கரியமில வாயுவைக் கொட்டுகின்றன. ஆயிரக்கணக்கில் ஆழ்குழாய்க் கிணறுகளில் நிலத்தடி நீர் இடைவிடாமல் நீரை வெளியேற்றுகின்றன. சிமெண்ட் தொழிற்சாலைகள், காகிதச் தொழிற்சாலைகள், சாயப்பட்டறைகள், ரெயான் தொழிற்சாலைகள், இன்னும் பல இரசாயனத் தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் கழிவுகள் நீர்நிலைகளையும், குறிப்பாக ஆறுகளையும், அப்புறம் நிலத்தடி நீரையும் நச்சுப்படுத்துகின்றன. புதிய வகை நோய்களால் தாக்கப்பட்ட மக்களை ஆராய்ந்து மருந்துகளைக் கொட்டி, குணமாகாதபொழுது உறுப்புகளை வெட்டி, உயிரை வெளியேற்ற மருத்துவமனைகளும் சோதனைக் கூடங்களும் இடைவிடாது செயல்படுகின்றன. காண்க்ரீட் கட்டிடம் பலவகை அறைகளுள்ள வீடு, கார் முதலிய வாகனங்கள், தொலைக்காட்சி, துவைக்கும் யந்திரம், குளிர்சாதனப்பெட்டி, அழகிய, அலங்காரமான மனைவி, அரசில் உயர் பதவி—

ஆகியவை நடுத்தரப் படிப்பாளிகளின் இன்றைய வாழ்க்கை இலட்சியங்கள். மக்கள் எந்நேரமும் முன்கூடங்களில் தம் கருணைக்காக நிற்க வைக்கிற அரசு அதிகாரிகள், இவர்களுக்கு முன் கூனிக்குறுகி நிற்கும் ஊழியர்கள்—இவர்கள் இல்லாமல் நகரம் பற்றிய வர்ணனை முற்றுப் பெறுவதில்லை. இன்னும் நிதானமாகப் பார்த்தால் நூற்றுக்கணக்கான காட்சிகளை நகர வர்ணனைப் படலத்தில் நாம் சேர்த்துக் கொள்ள முடியும். பத்திரிகை நிறுவனங்கள், தலைநகர்களில் கட்சித் தலைவரின் வீடுகள், அதிகாரிகள், அமைச்சர்கள், முதலமைச்சர், பிரதமர், ஜனாதிபதி இப்படிப் பத்தாயிரக்கணக்கில் இந்த சமூகத்தின் தலைவர்கள், நிர்வாகிகள் இவர்களின் வாழ்க்கை வசதிகள், இவர்களுக்குப் பணிசெய்யும் ஊழியர்கள், இடைத்தரகர்கள் இவை பற்றியெல்லாம் விரிவாகச் சொல்லவேண்டும். இந்த வர்ணனைகளோடு இராணுவம், காவல்துறை, புலனாய்வுத்துறை, நீதிமன்றம், சிறைச்சாலைகள், ஆயுதக்கிடங்குகள், ஆயுத உற்பத்தித் தொழிற்சாலைகள். வெளிநாட்டுத் தூதுவரின் அலுவலகங்கள், தலைநகரில் நடைபெறும் விவாதங்கள், மாபெரும் வங்கி நிறுவனங்கள், பன்னாட்டு நிறுவனங்கள், பேரங்கள், ஒப்பந்தங்கள், பொதுத்துறை நிறுவனங்கள், காப்பீட்டு நிறுவனங்கள், இவை பற்றியெல்லாம் நுட்பமாகச் சொல்லவேண்டும். இந்த வர்ணனைகள் இல்லாமல் நம்தேசம் பற்றிய சித்திரிப்பு நிறைவு பெறாது. இவற்றில் முக்கியப் பகுதிகள் போபர்ஸ் ஊழல், அர்சத்மேத்தா பற்றிச் சொல்ல வேண்டும். பழைய புராணங்களில் வர்ணிக்கிற மாதிரி இவற்றை வர்ணிக்க ஆயிரம் நாவுகள் கொண்ட நவீன ஆதிசேடன்—சூப்பர் கம்ப்யூட்டர் தேவைப்படலாம்.

4. தொழில்துறை நாகரிகமென்றும் முதலாளிய நாகரிகமென்றும் நகர நாகரிகமென்றும் பல பெயர்களில் அழைக்கப்படும் இந்த நாகரிகம்தான் கடந்த சில பத்தாண்டுக்கால அளவில் ஏகாதிபத்தியத்திற்கு முழு அளவில் தன்னை உட்படுத்திக் கொண்டதாய் மாறியிருக்கிறது. தொழில், வேளாண்மை, போக்குவரத்துச் சாதனங்கள், கல்வி, மருத்துவம், இராணுவம், அரசு அதிகாரம் ஆகிய அனைத்துக் களங்களிலுள்ளும் ஏகாதிபத்தியம் தன்னை நிறுவி வருகிறது. இதற்கு இன்னொரு பெயர் நவீன காலனி ஆதிக்கம். 150 ஆண்டுகளுக்கு மேலாக பிரிட்டன் இந்தியாவைச் சுரண்டிக் கொள்ளையடித்ததின் தொடர்ச்சி இந்த நவீன காலனியாதிக்கம். இராணுவத்திற்கும், நவீன அறிவியல் தொழில் நுட்பத்திற்கும் வேளாண்மைக்கும் கல்விக்

கும், போக்குவரத்து, ஏவுகணை, தொலைக்காட்சி ஆகிய பலவற்றுக்கும் உதவி செய்வதாக, இதன் மூலம்தான் இந்தியாவில் வளர்ச்சி சாத்தியம் என்பதாகச் சொல்ல நவீன காலனியாதிக்கம் இந்தியாவில் தன்னை நிலைநிறுத்திக் கொள்கிறது. இந்தியாவின் மூலவளங்களை மனிதவளத்தைச் சுரண்டி தன்னை மேலும் பலப்படுத்திக் கொள்கிறது. இந்தியாவில் தேசிய முதலாளிகள் என்று சொல்லக்கூடிய முறையில் யாரும் இல்லை. அரசு அதிகாரத்தில் இடம் பெறத் துடிக்கும் அரசியல் கட்சிகளைப் பொருத்தவரை தாம் அதிகாரத்தில் இருப்பதற்காக எதையும் செய்யத் துணிவு கொண்டிருக்கின்றன. கட்சித் தலைவர்கள், பொறுக்கி முதலாளிகள் என்று சொல்லக்கூடிய முறையில் பன்னாட்டு நிறுவனங்களோடு ஒத்துழைக்கும் முறையில் தரகுத்தொழில் செய்கின்றனர். தேர்தலில் எப்படியாவது வெற்றிபெற வேண்டும் என்பதற்காகவும் சேர்த்து இந்தத் தரகு வேலையைச் செய்கின்றனர். அரசியல், சட்டவிதிகளை உள்ளிருந்தே சிதைத்து அழிக்கின்றனர். நீதி மன்றங்களைக் கூட தம் நோக்கங்களுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். நீதிபதிகள் நிலைகுலைந்து தடுமாறுகின்றனர். பொதுத் துறை நிறுவனங்களில் இறுக்கமாக தன்னை அமர்த்திக் கொண்ட அதிகார வர்க்கம், முதலாளிகளின் தேவைகளுக்காகவும் தம் வாழ்வுத் தேவைகளுக்காகவும் பொதுத் துறைக்குப் பெரும் இழப்பைத் தொடர்ந்து ஏற்படுத்தி வருகின்றன. பொது மக்களின் சேமிப்புகளைத் தொகுத்து வைத்திருக்கும் வங்கிகளின் மூலம் தம்மை, நிறுவிக் கொள்கிற தனியார் துறை, தன் நிர்வாகத் திறமை பற்றியும் அறிவாற்றல் பற்றியும் பெருமை அடித்துக் கொள்கிறது. அறிவாளிகள் என்ற பெருங்கூட்டம், தனியார் பற்றியும் முதலாளியம் பற்றியும் தேவையான புரிதல் இல்லாமல் கல்விக் கூடங்களில் தம் மூளை மழுங்கடிக்கப்பட்ட நிலையில் பெருமை பேசுகிறது. சனநாயகத்தின் காவலர்கள் எனத் தமக்கு வண்ணம் பூசிக் கொள்கிற நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள் முதலாளிகளிடம் பிச்சைக்காக, நன்கொடைக்காகத் தேசிய ஒருமைப்பாடு பற்றியும் தேசப்பற்று பற்றியும் உரை நிகழ்த்துகிறார்கள்.

இவர்கள் எல்லோரும் சேர்ந்து இந்தியாவுக்குச் சோசலிசம் தேவையில்லை என்று இப்பொழுது பேசுகிறார்கள். தொழிற்சங்க வாதம் பேசிய பொதுவுடைமைக் கட்சிகள் தம் போராட்ட உணர்வைத் தொடர்ந்து கைவிட்டதன் மூலம் முதலாளியத்திற்கு, அதன் மூலம் ஏகாதிபத்தியத்திற்குச் சேவை செய்பவர்

களாக மாறினர். சோவியத் யூனியன் தகர்ந்ததைக் காரணம் காட்டி, இனி சந்தைப் பொருளாதாரம் தான் உலகுக்கு உய்வு தரும் என்று பலரும் பேசுகின்றனர். அனைத்துத் துறைகளையும் இனி தனியார் வசம் ஒப்படைத்து விடலாம் என்ற கோட்பாடும் சொல்லுகின்றனர். உழவர்களுக்கு இனி மானியம் தரத் தேவையில்லை என்று பேசுகின்றனர். வங்கிகளில் கடன் பெற்ற பெரும் தொகையைத் திருப்பிச் செலுத்தாத முதலாளிகள் பற்றி இவர்கள் பேசுவதில்லை. ஆண்டுதோறும் கோடிக்கணக்கான மக்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே தள்ளப்படுவதற்குத் தாங்கள் தான் காரணம் என்பதை இவர்கள் பேசுவதில்லை. நவீன விஞ்ஞானம் என்றும் தொழில் நுட்பம் என்றும் பெருமைப் படுத்தப்படும் அறிவுத் துறை மற்றும் இயந்திர சாதனங்கள், தொழிலாளர்களையும் உழவர்களையும், உச்ச அளவில் சுரண்டுவதற்காகவே, முதலாளிகட்கும், இன்றும் அதிக அளவில் ஏகாதிபத்தியவாதிகட்கும் பயன்படுவதை இவர்கள் மறுக்கிறார்கள். மைய அரசு அதிகாரம், மாநில அரசு அதிகாரங்கள் தொடர்ந்து பெருத்துக் கொழுத்து வருவதன் விளைவாக, உழைக்கும் அடித்தள மக்கள் அதிக அளவில் சுரண்டலுக்குள்ளாவதை இவர்கள் மறைக்கின்றனர். அரசு அதிகாரிகள், அமைச்சர்கள் முதலியவர்களின் சுகபோக வாழ்க்கை, மக்கள் மீது அதிக அளவில் சுரண்டலைத் திணிக்கிறது என்பதை இவர்கள் ஏற்பதில்லை. இந்தியாவின் தேசிய வருமானத்தில் ஒருவரது பங்கு சுமார் 300 டாலர். ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் அந்நாடுகளின் தேசிய வருமானத்தில் ஒருவர் பங்கு 25000—30000 டாலர்கள். இந்நிலையில் ஐரோப்பிய நாடுகளோடு உறவு கொண்டு வாணிகம் செய்து உதவி பெற்று 21-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவின் வாழ்க்கை தரத்தை இந்தியா பெற்றுவிடலாமென்று இவர்கள் துணிந்து பொய்யைப் பரப்பி வருகிறார்கள். அணுமின் நிலையம், ஏவுகணை, நவீன போர்ச்சாதனங்கள் இந்தியாவை அலங்கரிக்க வேண்டுமென்று இவர்கள் ஆசைப்படுகிறார்கள்.

இவர்கள் முன்னிறுத்தும் நாகரிக சமுதாயத்திற்காக இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள் மீது உச்ச அளவில் சுரண்டலை ஏற்படுத்தியிருக்கிறார்கள். சுரண்டலுக்கும் அதிகாரத்திற்கும் இயல்பாக ஏற்படும் எதிர்ப்புகளை, போராட்டங்களை இயக்கங்களைக் குரூரமாக இவர்கள் அடக்குகிறார்கள். இதற்காகக் காவல் துறையை, புலனாய்வுத் துறையை, நிர்வாகத் துறையை இறுதியாக இராணுவத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

புரட்சிகர இயக்கங்களைக் கருவிலேயே அழித்து விடவேண்டு மென்று முனைந்திருக்கிறார்கள். அரசின் கடுமையான வன் முறைக்கெதிராக வேறு வழியில்லாமல் ஆயுதம் தரித்துப் போராடுபவர்களை வன்முறையாளர்கள், சமூக விரோதிகள் என்று சொல்லி கூட்டம் கூட்டமாக அழிக்கிறார்கள். சமூக மாற்றம் பற்றிப் பேசும் சில சக்திகள்கூட இவர்கள் செயலை நியாயப்படுத்துகிறார்கள். தேசிய ஒருமைப்பாட்டுக்காக எத்தகைய கொலைச் செயலையும் இந்த அரசியல்வாதிகள் தேவை என்கிறார்கள். இந்தியம், இந்துத்துவம் என்று இவர்கள் பேசுகிறார்கள். மத நிறுவனங்கள் வெட்கம் கெட்டமுறையில் இவர்களை ஆதரிக்கின்றன. பத்திரிகையாளர்களும் அறிவாளி களும், மாணவர்களுக்கு அறிவைத் தருவதாகச் சொல்லிக் கொள்ளும் ஆசிரியர்/பேராசிரியர் கூட்டமும் மாணவர்களுக்குத் தேசபக்தி என்று சொல்லி மக்களை அழிக்கும் இந்தக் கொலைச் செயலை நியாயப்படுத்துகிறார்கள். மேற்கத்திய மோகத்திற்கு உச்ச அளவில் நடுத்தவர வர்க்கம் இரையாகிக் கொண்டிருக் கிறது. நகர வாழ்க்கை வசதிகளைப் பெறுவதற்காகவும், அனுமதிப்பதற்காகவும் நகர்ப்புறத்துப் படிப்பாளிகளும் அறி வாளிகளும் எதையும் செய்யும் துணிவுடன் இருக்கிறார்கள்.

இப்படிப் பெருகிவரும் நகர நாகரிகம்/தொழில் துறை' முதலாளிய நாகரிகம் நகரங்களில் சேரிகளை உற்பத்தி செய் கிறது. கிராமப்புறங்களில், மலைப் பகுதிகளில் இயற்கை இவர்களின் தேவைக்காகப் பெருமளவு அழிக்கப்படுகிறது நீரும் நிலமும் காற்றும் நஞ்சாகின்றன. வேளாண்மைக்குத் தகுதியற்றதென நிலங்கள் ஒதுக்கப்படுகின்றன. நிலத்தடி நீர் வற்றிப் போனதால் கிராமப்புறத்து மக்கள், நகரச் சேரிகளில் குடியேறுகிறார்கள். காய்கறிகளும், பால் முதலிய பொருள் களும் தொடர்ந்து நஞ்சாகி மக்களின் உடல்நலத்தைக் கெடுக் கின்றன. நவீன இயந்திரத் தொழில், கைத்தறித் தொழிலை அழித்து வருகிறது. பெரிய தொழிற்சாலைகள் நூற்றுக்கணக் கான சிறிய பட்டறைகளை ஆக்கிரமித்துக் கொள்கின்றன. தானியங்கி இயந்திரங்கள் ஒவ்வொரு தொழிற்சாலைகளி லிருந்து நூற்றுக்கணக்கில்/ஆயிரக்கணக்கில் தொழிலாளர்களை வெளியேற்றுகின்றன. புதிய தொழில் வாய்ப்புகள் பற்றி அமைச்சர்கள் பேசுகிறார்கள். தொழிற்சாலையில் நிரந்தரத் தொழிலாளர்களைக் காட்டிலும் நாள் கூலி பெறும் தொழிலாளர் தொகை அதிகரித்து வருகிறது. தொழிற்சங்கப் போராட்டங்கள் ஓய்ந்து வருகின்றன. தானியங்கி இயந்திரமும், இரசாயனமும்

தொழிலாளியின் உழைப்புத் திறமையைத் தேவையற்றதாக்கிய தன் மூலம் தொழிலாளர் போராட்டத்திற்கான நியாயத்தை அழித்து வருகின்றன. மது, போதைப் பொருள் வியாபாரிகள் உச்ச அளவில் சுறுசுறுப்போடு இயங்குகிறார்கள். திரைப்படத் தயாரிப்பாளர்கள், வீடியோ தயாரிப்பாளர்கள் மக்கள் தேவைகளை நிறைவு செய்ய முனைந்து செயல்படுகிறார்கள். விடுதிகளில், கேளிக்கைகளில் உணவுப் பொருட்கள் வீணாகின்றன. கடை வீதிகளில் துணிகள் அம்பாரமாய்க் குவித்து வைக்கப்படுகின்றன. துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் சில மூடப்படுகின்றன. தவணை முறைகளில் வாகனங்கள், குளிர் சாதனப் பெட்டிகள் முதலியவை தாராளமாகத் தரப்படுகின்றன. வணிகக் கலாச்சாரமும், நுகர்வுக் கலாச்சாரமும் உயர் அளவில் கைகோர்த்துச் செயல்படுகின்றன. கிராமங்கள் அழிகின்றன. இயற்கை நாசமாகிறது.

வறுமைக் கோட்டுக்குக் கீழ் மக்களில் பாதிக்கு மேல் தள்ளப் படுகிறார்கள். கடன் சுமையில் அழுந்தியிருக்கும் விவசாயியும் இந்த விவசாயிடம் அதிகக் கூலி கோரும் உழைப்பாளிகளும் எதிர்த் திசையில் நிற்கின்றனர். தாழ்த்தப்பட்டவர் ஒடுக்கப்படுகின்றனர். சமூகத்தில் பெருகிவரும் நுகர்வு வெறி, மக்கள் மனத்தில் காமவெறியைத் தூண்டுகிறது. இன்பம்தான் வாழ்க்கை எனச் சொல்ல வைக்கிறது. திரைப்படங்கள் இன்ப வெறியைத் தீவிரப்படுகின்றன. விளம்பரங்கள் ஒத்துப்பாடுகின்றன. இன்ப வெறியில் மக்கள் சிறைப்படுகிறார்கள். முதலாளிகளும், வணிகர்களும் இப்படி மக்களைச் சிறைப்படுத்துவதன் மூலம் தம்மை வளர்த்துக் கொள்கிறார்கள். மக்கட் சமூகத்தில் அனைத்துப் பகுதியினரும் இப்படி நுகர்வு வெறிக்கு இரையாவதன் மூலம முதலாளியம் தன்னைக் காத்துக் கொள்கிறது. இதன் மூலம் மக்களின் அரசியல் உணர்வு, வாழ்க்கை இலட்சியங்கள் மழுங்கடிக்கப்படுகின்றன. குறைந்த அளவுக்கே கல்வி அறிவு பெற்றுள்ள மக்கள், முதலாளியத்தையும் அதன் சுரண்டலையும் புரிந்து கொள்வதில்லை. முதலாளியத்தோடு ஒத்திசைந்தும் அரசியலையும், பத்திரிகைகளையும், அரசியல் வாதிகளையும், கட்சிகளையும் புரிந்து கொள்வதில்லை. மக்கள் நன்மைக்காகத்தான் தாங்கள் உயிர் வாழ்வதாக அரசியல் வாதிகள் ஆரவாரத்தோடு ஊர்வலத்தோடு சொல்லும்பொழுது அவர்கள் வாசகங்களை நம்புகிறார்கள். கல்வி அறிவு பெறாத மக்கள் இவர்களைப் பொருத்தவரை வாக்குச் சீட்டுகளை

அள்ளித் தரும் அமுதசுரபிகள். வெறும் சில எழுத்துக்களையும் சொற்களையும் மட்டுமே கற்பிக்கும் எழுத்தறிவு இயக்கம், இந்த அரசியல்வாதிகட்கு ஒரு வரப்பிரசாதம். முதலாளியத்திற்கு ஆதரவான முறையில் வாழ்க்கை இலட்சியங்களையும் கணக்கியல் அறிவையும், தொழில் நுட்பத்திறனையும் மாணவர் தலைக்குள் திணிப்பதன் மூலம் ஆசிரியர்களும் கல்விக்கூட நிர்வாகிகளும் முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் சேவை செய்கிறார்கள். ஆடம்பரச் சாதனங்களில் பெண்களை, வணிகர்கள் சிறைப் பிடிக்கிறார்கள். இந்த ஆடம்பரச் சாதனங்களை உற்பத்தி செய்யும் முதலாளியம் வலுப்பெறுகிறது. இந்தியாவைப் பொருத்தவரை நுகர்வுப் பொருள் உற்பத்தி என்ற தொழில் துறைதான் இன்று அதிக அளவில் முன்னேறி வருகிறது. முதலாளிகளும், பன்னாட்டு நிறுவனங்களும் நுகர்வுப் பொருள் உற்பத்தியில்தான் அதிக அளவுமூலதனத்தை ஈடுபடுத்துகிறார்கள். அடிப்படைத் தொழில்களில் மூலதனம் நுழைவது தொடர்ந்து குறைந்து வருகிறது. அரசுத்துறை குறிப்பாக இராணுவம், அரசுத்துறை நிர்வாகம் ஆகியவற்றுக்காக அன்னியக் கடன்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. அன்னியச் செலாவணியைத் திரட்டுவதற்காக அதிக அளவில் ஏற்றுமதி தேவை என்று உபதேசம் செய்யப்படுகிறது. தொழில்துறை கட்டுப்பாடுகள் தளர்த்தப்படுகின்றன. இலாபத்திற்கான வரிக் குறைப்பு அதிகரிக்கிறது. உள்நாட்டில் விலை அதிகரித்தாலும் பாதகமில்லை. வெளிநாட்டுக்கான ஏற்றுமதி அதிகரிக்க வேண்டும் என்று சொல்லுகிறது அரசு. தோல் பொருட்களும், சாயத்துணிகளும், பக்குவப் படுத்தப்பட்ட புகையிலையும், தரமான தேயிலையும், காபியும் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்தியாவில் விளைச்சல் நிலங்கள் அழிகின்றன. காடுகள் அழிக்கப்படுகின்றன. வறுமை அதிகரிப்பதன் காரணமாகக் குழந்தைகளும் கூலித்தொழிலாளிகள் ஆகின்றனர். பெண்களின் மீது வேலைச் சுமை அதிகரிக்கிறது. பெண்கள் தொடர்ந்து அடிமைத்தனத்தில் தள்ளப்படுகிறார்கள். பெண்கள் மதிப்பிழக்கிறார்கள். அண்மைக் காலத்தில் முதலாளிகள் பெறும் லாபவிகிதம் பெருமளவு அதிகரிக்கிறது. வங்கியில் வட்டி விகிதம் அதிகரிக்கிறது. நுகர்வுப் பொருட்களின் விலை இடைவிடாமல அதிகரிக்கிறது. அரசியல்வாதிகள் அதிகம் சொத்து சேகரிக்கிறார்கள். காவல்துறை தனக்கென ஒதுக்கப்பட்ட நியதிகளைத் துறந்து அரசியல்வாதிகளின் தேவைகளுக்காக அக்கிரமங்களில் ஈடுபடுகிறது. முதலாளிகள் தங்களைக் கட்டுப்படுத்தும் சக்திகள் அறவே இனி இல்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

ஏகாதிபத்தியம் தங்களை முழு அளவில் தாங்கும் என்று உண்மையாகவே நம்புகிறார்கள். சோசலிசத்திற்கு ஆதரவான சக்திகள் இனி எழ முடியாது என்று கருதி, தங்கள் வாழ்க்கை இனி பத்திரமாக இருக்குமென கருதுகிறார்கள். ஏகாதிபத்தியம் இவர்களைக் கசக்கிப் பிழிந்து, சக்கையாக்கி எறிந்துவிடும் என்பது பற்றி அறிவற்று இருக்கிறார்கள்.

5. கலாச்சாரக் களங்களில் ஒடுக்குமுறை பற்றிப் பேசும் முன் இவ்வளவும் சொல்ல வேண்டியிருக்கிறது. மேற்கண்ட விவரிப்புகளில் பல, கலாச்சாரக் களத்திற்கும் பொருந்தியவை. ஏகாதிபத்தியம், முதலாளியம், அரசு அதிகாரம், வணிகக் கலாச்சாரம் ஆகிய அனைத்தும் தொடர்ந்து செயல்படுவதன் மூலம், கலாச்சாரக் களங்கள் பெரும் பாதிப்புக்குள்ளாகியிருக் கின்றன. சுரண்டலும் ஒடுக்குமுறையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள். மக்களின் வறுமைக்கு, கடுமையான சுரண் டலுக்கு, அதற்கான ஒடுக்குமுறைக்கு தொடர்ந்து உள்ளாக்கப் படும்பொழுது, மனித வாழ்க்கை பற்றிய இலட்சியங்கள் அவர் களுக்குள் அழிக்கப்படுகின்றன. வெறும் உணவுக்காகவும் இன்பத்திற்காகவும் வாழ்வதே வாழ்க்கை என்று ஆகிவிடுகிறது. உண்பது, புணர்வது, இருப்பிடம் தேடி உறங்குவது என்ற நிலையில் மிருகத்திற்கும் மனிதனுக்கும் இடையிலான வேறு பாடு அழிகிறது. மனிதன் பண்டமாகிறான். பயன் மதிப்பு அற்றுப் போகிறான். சில சந்தர்ப்பங்களில் பரிமாற்ற மதிப்பு இவனுக்கு இல்லை. இந்நிலையில் இவன் சமூகத்திற்குத் தேவையற்றவன் ஆகிறான். அதாவது, முதலாளியத்திற்கு அதன் உற்பத்திச் செயலுக்கு இவன் தேவையில்லை. உண்ப தற்கும் உயிர் வாழ்வதற்குமான ஆதாரம் மறுக்கப்படும்பொழுது இவன் திருடனாகிறான். மனிதப் பண்பு இழக்கிறான். சிறு வயது முதற்கொண்டே பல களங்களில் ஒடுக்குமுறைக்கு உள்ளான இவன் கோழையாகிறான். அல்லது போக்கிரியா கிறான். மதத்திற்குள் தன்னைப் புதைத்துக் கொள்கிறான். சடங்கு ஆசாரங்களில் மூழ்குகிறான். சமூகத்தில் மதிப்பிழந்த இவன் தன்னகங்காரம் கொள்கிறான். சமூக உறவிலிருந்து துண்டிக்கப்பட்ட நிலையில் தனக்குள் அவலம் கொள்கிறான். தன் வாழ்க்கை அர்த்தமற்றது என நினைக்கிறான். மன நோயாளி ஆகிறான். தற்கொலை செய்துகொள்கிறான். உணவு, உடை இவற்றின் தேவைக்காகத் தன்னை விற்றுக் கொள்கி றான். அடிமையாகிறான். தரகனாகிறான். இவனிடம் கலாச் சாரம் இல்லை. ஆளுமை இல்லை. இவனிடம் மிஞ்சியிருப்பவை

கண்ணும் காதும் வாயும் வயிறும் காமநுகர்வுக்கான புலன்களும். இவன் நுகர்வு வெறியன், உடலை விற்பவன். வேசி, தன்மான மற்றவன். மரபு தெரியாதவன்; வாழ்க்கை தெரியாதவன்; வரலாறு தெரியாதவன்; இயற்கையோடு உயிர்களோடு இவனுக்கு நேசமில்லை. அழிப்பதில் இவன் இன்பம் காண்பவன். ஏகாதிபத்தியம், முதலாளியம், அரசு அதிகாரம் முதலியவை தீவிரமாகச் செயல்படும்போது இப்படி மனிதன் தன்னை இழக்கிறான். தன் வாழ்க்கை பற்றிய பார்வை கொள்வதில்லை. மெய்யியல் இவனுக்குத் தேவையில்லை. இந்நிலையில் இவன் பொருளுக்கும் அதிகாரத்திற்கும் அடிமைப்படக் கூடியவன். இவன் அடிமைப்பட்ட நிலையில் இவன் தன்னை அழித்துக் கொள்வதோடு பிறரையும் அழிக்கிறான். பிறர் வளர்ச்சிக்கு இவன் ஒத்துழைப்பதில்லை. இவன்ஒரு நல்லகணவனல்ல. ஒரு நல்ல தந்தையல்ல. இவன் ஒரு நல்ல ஆசிரியனாக இருக்க முடியாது. இவன் ஒரு நல்ல தலைவனாக இருக்க முடியாது.

இத்தகைய மனிதர்களைத் தொடர்ந்து உற்பத்தி செய்வதன் மூலம் அதாவது இப்படித் தொடர்ந்து மனிதர்களை அழிப்பதன் மூலம், முதலாளியமும் அரசு அதிகாரமும், ஆதிக்க சக்தியும், தம்மைத் தக்கவைத்துக் கொள்கின்றன. வன்முறையையும் காமவெறியையும் மனிதர்களுக்குள் தூண்டுகின்ற திரைப் படங்களைப் பரவலாக்குவதன்மூலம் மனிதர்களைச் சிறைப்பிடிக்கின்றன. மனிதனைச் சிதைத்து மலினப்படுத்தி மனஉறுதியைக் கெடுத்து, மேலும் மேலும் இத்தகைய திரைப்படங்களைத் தேடி அலைபவனாக முதலாளியம் இவனை மாற்றுகிறது. இதே செயல்பாட்டைப் பிற சாதனங்களும் செய்கின்றன. மதம் முதலாளியத்தோடு, அரசு அதிகாரத்தோடு ஒத்துழைக்கிறது. தன் சமகால வாழ்வின் ஆக்கத்திற்கான பார்வையை மதம் அழிக்கிறது. புராணத்தில் இருந்த நாயகர்களை இன்றும் உருவாக்கி வழிபடுவதன் மூலம் அவன் உய்வு பெற முடியுமென்று மதம் பேசுகிறது.

சமூக வாழ்வின் அனைத்துக் களங்களிலும் ஏகாதிபத்தியம் முதலிய சக்திகள் தீவிரமாகச் செயல்படுவதன் மூலம் மக்களின் கலாச்சார வாழ்வு கடுமையான ஒடுக்குமுறைக்கு உள்ளாவதன் விளைவுகள் இவை. கல்விக் கூடங்களில் கற்றுத் தரப்படும் வரலாறும் பொருளியலும் ஏகாதிபத்தியத்தின் அக்கிரமங்களைப் பற்றி கற்றுத் தருவதில்லை. இதற்கு மாறாக ஏகாதிபத்தியமும் முதலாளியமும் அரசு அதிகாரமும் வலுப்பெறுவதற்கான கல்வி

யைத் தருவதன் மூலம் ஆசிரியர் சமூகம் தன் வாழ்வுக்கான விழுமியங்களை இழந்து விடுகிறது. கல்வி மனிதனைப் படைப்ப தற்குப் பதிலாக அழிக்கிறது. மருத்துவர் புதிய நோய்களை உற்பத்தி செய்கிறார். ஏகாதிபத்தியம் இப்படிப் புதிய நோய் களை உற்பத்தி செய்து மனிதனை அழிக்கிறது. ஏழைகள் சமூகத்திற்குத் தேவையில்லை என்கிறது. முதலாளிகள் நலமாக இருக்க வேண்டும் என்று சொல்லுகிறது. தொழில் வளர்ச்சி குறைந்த நிலையில் வேலையில்லாத பலர் காவல்துறை முதலிய பணிகளில் சேருவதன் மூலம் மக்களை அழிக்கிறார்கள். தாமும் அழிகிறார்கள். அரசுப் பதவிகளை விரும்பித் தேடிச் சென்று அமர்ந்த படிப்பாளிகள், மக்கள் மீது அன்பு அற்று அதிகார வெறிக்கும், நுகர்வு வெறிக்கும் பலியாகி, தமக்குள் மனிதப் பண்பில் சிறுத்துப் போகிறார்கள். வாழ்வின் விரிந்த பரப்பு அவர்களுக்குத் தெரிவதில்லை. விஞ்ஞானிகள், அறிவாராய்ச்சி யில் தம்மை ஈடுபடுத்திக் கொள்வதன் மூலம் முதலாளியத்தின் பெருக்கத்திற்கான ஆய்வுகளைச் செய்து மக்களை அழிக்கி றார்கள். இயற்கையை அழிக்கிறார்கள். பிரபஞ்சத்தின் பேராற் றலும், இயற்கையின் கோடிக்கணக்கான அழகு நுட்பங்களும் இவர்கள் வாழ்க்கைக்குள் வருவதில்லை. இவர்கள் ஏகாதிபத் தியத்தின் கருவிகள், முதலாளிகள் பொருளுக்கும் அதிகாரத் திற்கும் தம்மை விற்றுக் கொண்டவர்கள். மனிதர் அனைவரும் சேர்ந்து உழைத்து விளைவைப் பகிர்ந்து கொள்ளும் உன்னத மான சமூகம்தான்—சோசலிச சமூகம்தான் மனித வாழ்வுக்கு மரியாதை தரும் சமூகம். இந்த அரசியலைப் பொய் என்றும் பொருந்தாது என்றும் பேசும் கட்சிகள், மனிதனை, அவன் கலாச்சாரத்தை அழிக்கின்றன. பல இலட்சம் ஆண்டுகளாக பல நூறு வரலாற்றுக் கூட்டங்களின் வழியே மனிதன் வளர்ந்து வந்திருக்கிறான். இவன் உருவாக்கிய கலைகள் எண்ணிறந் தவை. கலைகள் மூலம் மனிதன் தன் விடுதலையைப் பிரகடனப் படுத்தி இருக்கிறான். இலக்கியங்களின் மூலம் தன் இலட்சியங் களை வெளியிட்டிருக்கிறான் அன்பு, நேசம், தியாகம் ஆகிய வற்றின் மூலம் தன்னை இழப்பதில் இன்பம் உண்டுஎன்று காட்டியிருக்கிறான். இவன் படைத்த கடவுள் மூலம், தான் பெற வேண்டிய கருணை, பேரறிவு, ஆற்றல் முதலியவற்றை வெளியிட்டிருக்கிறான். பல்வேறு வகையான தொழில் நுட்பங் களை வளர்த்ததன் மூலம் தன் புலன்களின் நுட்பங்களை வளர்த் திருக்கிறான். இயற்கையின் மாபெரும் பரப்பையும், அதன் பல நூறு வேறுபட்ட காட்சிகளையும் தனக்குள் வண்ணங்களாய் வடிவங்களாய்ப் பதித்திருக்கிறான். இவ்வகைப் பதிவின்மூலம்

அழகு பெற்றிருக்கிறான். இத்தகைய செயல்பாடுகளின்மூலம் மனிதன் தனக்குள் விரித்துக் கொள்ள வேண்டிய வாழ்க்கைப் பரப்பை வெளிப்படுத்தியிருக்கிறான். இயற்கையோடும் சமூகத்தோடும் முழு அளவில் நேசத்தோடு வாழ்வதன் மூலமே தன்னைப் படைத்துக் கொள்ளமுடியும். தன்னை அழகுபடுத்திக் கொள்ள முடியும். வரலாற்றைத் தனக்குள் வாங்கிக் கொள்ள முடியும். உலக அளவில் சகோதரத்துவம் பேச முடியும். மனிதன் விடுதலை பெற முடியும். இவ்வாறெல்லாம் மனிதன் வரலாற்றின் வழியே தன் வாழ்வுக்கான பார்வையை, மெய்யியலைக் கொண்டவன். இத்தகைய மனிதனையும் அவன் வாழ்க்கையையும் கலாச்சாரத்தையும் முனைந்து அழிக்க முற்பட்டிருக்கிறது ஏகாதிபத்தியமும் முதலாளியமும் முதலிய பிற ஆதிக்கச் சக்திகளும். இயற்கையையும் சமூகத்தையும் அழித்துவிட்டு, தான் வெற்றி பெற விரும்புகிறது ஏகாதிபத்தியம். ஆதிக்க வெறி கொண்ட ஏகாதிபத்தியம், இவ்வாறு தன்னைத் தானே அழித்துக் கொள்வதைத்தான் தனக்கான விடுதலை என்று முனைந்து நிற்கிறது. நம் அரசியல்வாதிகள் இத்தகைய ஏகாதிபத்தியத்தின் முகத்தை அறிந்து கொள்ளவில்லை. நம் கட்சிகளுக்கு இது தெரியாது. படிப்பாளிகளுக்கு, நடுத்தர வர்க்கத்தினர்க்கு இந்த உண்மை தெரியவில்லை. நம் பெண்களுக்கு இது தெரியவில்லை. இப்படிப் பலரும், ஏகாதிபத்தியமும் முதலாளியமும் தோற்றுவித்திருக்கிற மாயைகளில் சிக்கி தம் வாழ்க்கையை அழித்துக் கொண்டிருக்கிறார்கள். அன்பையும் நேசத்தையும் மறந்து கொண்டிருக்கிறார்கள். ஒடுக்குமுறை இவ்வாறு பல கண்ணிகளில் செயல்படுகிறது.

இந்த நிலையில் மனிதன் தன்னை, வரலாற்று வழியே தான் சேகரித்துக் கொண்ட கலாச்சாரத்தை, தன் ஆளுமையை, தன் படைப்புத் திறனைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்றால் ஏகாதிபத்தியம், முதலாளியம், அரசு அதிகாரம் தனக்குள் ஏற்படுத்தியிருக்கிற மாயைகளிலிருந்து, பாதிப்புகளிலிருந்து தன்னை முற்றாக விடுவித்துக் கொள்ளும் முறையில் ஏகாதிபத்தியம் முதலிய ஆதிக்க சக்திகளின் மீது போர்ப் பிரகடனம் செய்தாக வேண்டும். இயற்கையை முற்றாக அழித்துவிட முனைந்து நிற்கும் ஏகாதிபத்தியத்தை நாம் அனுமதிக்க முடியாது. கோடிக்கணக்கான உழவர்கள், பெண்கள், பிற்படுத்தப்பட்டவர் ஆகியவர்களது வாழ்க்கையை அழித்துவிட முந்துகிற ஏகாதிபத்தியத்தையும், அதனோடு ஒத்துழைக்கிற ஆதிக்க சக்திகளையும் நாம் அனுமதிக்க முடியாது. ஆணாதிக்கம் என்று சொல்லப்படும் உணர்வுக்குள்

ஆழ்ந்து பார்க்கிறபொழுது, வேறுபல அதிகாரங்களோடு இது இணைந்திருப்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அடிமைத் தனம் ஒருவகையில் மட்டுமே நம்மீது திணிக்கப்படுவதில்லை. பலமுனைகளில் அடிமைத்தனம் நம்மீது திணிக்கப்படுகிறது. ஒடுக்குமுறைகளோடு நாமும் ஒத்துழைக்கிறோம். நம் மாணவர் கள் மீதும், குழந்தைகள் மீதும், நம் சகோதரிகள் மீதும் ஒடுக்கு முறையை நாமும் சேர்ந்தே திணிக்கிறோம். நம்மைப் பிறர் அழிப்பதை நாமும் கைகொடுத்தே செய்கிறோம். இயற்கையை நாமும் சேர்ந்துதான் அழிக்கிறோம். நாம் தாமே தோன்றிவிட வில்லை. வரலாற்றின் வழியே, கோடிக்கணக்கானவர்களின் ஆக்கத் திறனைப் பெற்றே நாம் உருவாகி வந்திருக்கிறோம். நம்மை உருவாக்கியவர்களை நாம் மறக்க முடியாது. அவர் களை இகழ்ந்துவிடமுடியாது. அவர்களின் கனவுகளை நாம் அழிக்கமுடியாது. மனிதர்கள் என்று நம்மைப் பற்றி நாமே பெருமிதத்தோடு சொல்லிக் கொள்வோமானால், நம்மைஅழிக்க முந்துகிற அனைத்துச் சக்திகளையும் நாம் சேர்ந்து அழிக்க வேண்டும். ●

---

குறிப்பு : இக்கட்டுரை மறை அருவி சூலை—செப்டம்பர் 93 இதழில் வெளிவருவதற்கு சுமார் இரண்டாண்டுகளுக்கு முன்பே எழுதப்பட்டது. இன்று டங்கல் திட்டம் என்றும் 'காட்' உடன் படிக்கை என்றும் நம் மீது புதிய காலனியம் ஓர் அழிவு திட்டத் தைத் திணித்திருக்கிறது. உண்மையில் இந்தத் திட்டம் ஒரு வெள்ளோட்டம் போல புதிய காலனியத்தால் பல ஆண்டு களுக்கு முன்பே இந்தியாவின் மீது திணிக்கப்பட்டது. சோவியத் யூனியன் தகர்வைத் தொடர்ந்து சந்தைப் பொருளாதாரம் தான் இனி உலகை உய்விக்கும் என்று எழுந்த குரல், டங்கல் திட்டத் தின் குரல். உலக வங்கியும் பன்னாட்டு நிதியமும் இதன் முன்னோடிகள். பொதுத்துறைகள் தனியாருக்குத் தாரை வார்க் கப்படுகின்றன. வங்கிகள், காப்பீட்டு நிறுவனங்கள் அந்நிய நிறுவனங்களுக்குத் திறந்துவிடப்படுகின்றன. தனியார் நிறு வனங்களின் மீது கட்டுப்பாடுகள் பெருமளவு தளர்த்தப்படு கின்றன. இந்தியாவில் தனியார் நிறுவனங்களுக்குத் தரப்படும் வசதிகள் இனி அந்நிய நிறுவனங்களுக்கும் உரியவை. பன் னாட்டுப் பகாசுர நிறுவனங்கள் இந்தியாவில் சிறுதொழில்கள், நடுத்தரத் தொழில்கள் உட்பட பெரும் தொழில்களையும் தம் ஆளுகைக்குள் இனி அகப்படுத்திக் கொள்ளும். உலக அளவில் மூலதனத்தின் ஆட்சியை உறுதிப்படுத்துவது டங்கல் திட்டம். மூலதனத்திற்கே உலகம், இயற்கை (காடுகள், கடல்கள், நிலங்கள் முதலியவை) மற்றும் மனித வளங்கள் உரிமை உடையவை என்கிறது டங்கல் திட்டம். மேற்கண்ட கட்டுரை யில் சொல்லப்பட்டுள்ள விவரங்கள் மேலும் பல மடங்கு இனி அழுத்தம் பெறும். டங்கலின் அழிப்புத் திட்டத்திலிருந்து தமிழகம் தப்ப முடியாது.

# 2

# பொதுமை அறம்-நமக்கான கலாச்சாரம்-சில குறிப்புகள்

1. மனிதனை விலங்கிலிருந்து பிரிப்பது அவன் சேகரித்துக் கொண்ட கலாச்சாரம் - பண்பாடு. விலங்குக்கு தன்னுணர்வு இல்லை. மனிதனுக்கு தன்னுணர்வு உண்டு. தன்னை மனிதன் என்று உணர்கிறவன் அவன். அதாவது, தன்னை என்றும் மனிதனாக மேம்படுத்திக் கொள்ளவேண்டும் என்று கருது கிறவன். மனித நிலையிலிருந்து தான் சிதைகிறபோது அல்லது மறைகிறபோது மீண்டும் தன்னை மனிதனாக்கிக் கொள்ள முனைகிறவன்.

இயற்கையிலிருந்து இவன் தோன்றியவன். சமூகத்தில் இவன் மனிதனானான். இவனுக்கு வரலாறு உண்டு. இவனுக்கு உணவையும் உணர்வையும் தருவது இயற்கை. உழைப்புத் திறனையும் அறிவையும் நற்பண்புகளையும் இவனுக்குத் தந்தது சமூகம். இயற்கையின் உறவையும், சமூகத்தின் உறவை யும் இவன் வெட்டிக் கொள்ளமுடியாது. முன்னைய வரலாறு இவனை இன்னும்புதிய ஆக்கங்களை நோக்கிச் செலுத்துகிறது.

ஓர் ஆழ்ந்த நோக்கில் பார்த்தால் இயற்கையினுள்ளும் சமூகத்தினுள்ளும் வரலாற்றினுள்ளும் இவன் இணைந்திருக் கிறான். இயற்கை, சமூகம், வரலாறு ஆகியவற்றுக்கும் மனிதன் என்ற இவனுக்கும் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க இயலாத முறையிலும்; ஒன்றில் மற்றது ஊடுருவிச் செல்லும் முறையிலும்; ஒன்று மற்றதை வளர்க்கும் முறையிலும்; ஒன்றன் ஆக்கத்தில் மற்றது தன்னை நிறைவு செய்துகொள்ளும் முறை யிலும் உறவு இருக்கிறது அல்லது உறவு இருக்கவேண்டும். இத்தகைய உறவுதான் மனிதனுக்கான உறவு. இந்தப் பண்பு தான் கலாச்சாரம் / பண்பாடு.

இது வெறும் இலட்சியம் அல்ல. வரலாற்றில் எந்தக் கட்டத்திலும் வரலாற்றைக் குறுக்கே தரித்துப் பார்த்தால்,

தோற்றத்திற்கடியில் இந்த உண்மை நீரோட்டமாய்த் தெரியும் / தெரிய வேண்டும்.

2. பொதுமைதான் மனித அறம் / மனிதக் கலாச்சாரம். இந்தப் பொதுமை வரலாற்றின் தொடக்கத்தில் இருந்தது / இல்லை என்றே வைத்துக் கொண்டாலும் இந்தப் பொதுமையைச் சாதிக்கத்தான் வரலாற்றுக் காலம் முழுவதும் மனிதன் கனவு காண்கிறான், கற்பனைகள் செய்கிறான், இலக்கியம் படைக்கிறான். கலை அனுபவத்திற்குள் மனிதன் நெகிழ்ந்து விடுகிறபொழுது, இந்தப் பொதுமைக் குணத்தினுள் தன்னைக் காண்கிறான். இயற்கையின் முன்னிலையில் இவன் தன்னை நெகிழ்த்திக் கொள்கிறான். இலக்கியம் படைக்கிறான். காவியங்கள் படைக்கிறான். இவற்றின் மூலம் பொதுமையை, ஒரு பொதுச் சமூகத்தை, இந்தக் குணங்களைத் தாங்கிய மனிதர்களை, வீரர்களை, இவன் தனக்குள் படைத்துக் கொள்கிறான். இவனது பொதுமைக் குணத்திலிருந்து இவன் படைத்துக் கொண்ட மதத்தினுள் பொதுமை என்ற கனவை வைத்திருக்கிறான். இயேசுவென்றும் புத்தம் என்றும் இவனது போற்றுதலுக்குரிய பெரியவர்கள் இந்தப் பொதுமைக் குணத்தின் விரிவாய்த் திகழ்ந்தார்கள். மனிதர்களுக்கிடையில் சமத்துவம் வேண்டுவது இந்தப் பொதுமைக் குணம். தன்னை அடிமைப் படுத்துவதை வெறுப்பது இந்த பொதுமைக் குணம். அடிமைத் தனத்திற்கு உட்பட மறுப்பது இந்தப் பொதுமைக் குணம். கிடைத்தது குறைவாயினும் பகிர்ந்து வாழவேண்டும்; சமூகத்தின் பொது நன்மைக்காக தன் உயிரையும் துறக்கலாம். அடிமைத் தனத்திற்கும் அதிகாரத்திற்கும் சமூகத்தை உட்படுத்துகிறவன் சமூக மனிதனை அழிக்கிறான். சமூகத்தில் பொது நன்மைக்காக உழைக்கிறவன், மனிதன், தியாகி. சமூகத்தின் உழைப்பைத் திருடுகிறவன் கொள்ளைக்காரன், திருடன். சமூகத்தின் பல களங்களும் இணைந்து செயல்பட வேண்டும். அப்போதுதான் சமூகத்தின் படைப்புத் திறன் உயரும்.

இப்படியெல்லாம் நம் கனவுகளை, கற்பனைகளை, உணர்வுகளை உருவாக்குவது மனிதன் நெடுங்காலமாக தனக்குள் போற்றி வளர்த்திருக்கிற கலாச்சாரம் என்ற குணம்.

3. வரலாற்றில் மனிதன் தனக்குள் பிளவுபட்டான். ஓர் உருவகம் போல இப்படிச் சொன்னாலும் இதற்குள் ஆழ்ந்து

பார்க்கும்பொழுது சில உண்மைகள் நமக்குப் புலப்படும். மனிதன் உழைக்கவேண்டும். உற்பத்தியை பிறரோடு பகிர்ந்துகொள்ள வேண்டும். தன்னையும் தன் சூழலையும் நிர்வாகம் செய்ய வேண்டும். தொலைதூரத்து சமூகத்தோடு உறவு வேண்டும். பொருட்களைப் பரிமாற்றம் செய்து கொள்ளவேண்டும். தன் இனத்தைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். இயற்கைச் சூழலில் தன் உழைப்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் மனிதன் இருக்கவேண்டும். வாழ வேண்டும். இப்படி வாழ வேண்டுமென்றால் மனிதர் தமக்குள் சகோதரராக, சமத்துவம் உடையவராக, சுதந்திரம் உடையவராக இருக்கவேண்டும். இதுதான் ஆரோக்கியமான சமூகத்திற்கு அடையாளம்.

இன்று இப்படி இல்லை. நெடுங்காலமாகவே மனித சமூகம் இப்படி இல்லை. வர்க்க வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள், அரசு, தனி உடைமை, நிலப்பிரபுத்துவம், முதலாளியம், ஏகாதிபத்தியம், வணிகப் பெருக்கம், நகரியம்—இப்படி எவ்வளவோ வரலாற்றில் தோன்றி, பெருகி, மனிதனுக்கு இடையில் நிலவ வேண்டிய ஆரோக்கியமான உறவுகளை அழித்திருக்கின்றன. வரலாற்றில் இந்தப் போக்குகள் தோன்றாமல் மனித வளர்ச்சி சாத்தியம்தானா என்று கேட்டுக் கொள்ளலாம். சாத்தியம் இல்லை என்றே வைத்துக் கொண்டாலும், இவற்றுக்காக மனிதன் தன்னை இழக்கவேண்டியதில்லை. தன் ஆரோக்கியத்தை அழித்துக் கொள்ள வேண்டியதில்லை. கருவிகளை மனிதன் படைத்தான். இதே கருவிகள் மனிதனை அழிக்க வேண்டியதில்லை. மனிதனின் உற்பத்திக்கு ஆதாரம் இயற்கை. இந்த இயற்கையை அழித்த பிறகு மனிதன் இல்லை. சமூக உறவுகளில்தான் இவன் மனிதனாகிறான். சமூக உறவுகள் சிதைகிறபொழுது, சின்னாபின்னப்பட்டுப் போகிறபோது, மனிதன் தன் ஆற்றல் அழிகிறான். தன்னை அழித்துக் கொள்கிறான். வரலாற்றின் சில சூழல்களில் இவன் அடிமைப் பட்டான். அடிமைப்பட்டவன் தன்னை விடுதலை செய்வதற்கு மாறாக, அரசு அதிகாரத்திற்காகவும், முதலாளியப் பெருக்கத்திற்காகவும் தன்னைத்தானே அழித்துக்கொள்ள வேண்டியதில்லை. வரலாற்றில் சில சூழல்களில் இவன் தன்னைத் தானே விற்றுக் கொண்டான். இப்படி விற்றுக் கொண்டவன், தன்னைத் திரும்பவும் பெற்றுக்கொள்வதற்கு மாறாக தன்னைத் தானே அழித்துக்கொள்ள வேண்டியதில்லை. ஆனால் வரலாற்றில் மனிதன் தன்னை அழித்துக் கொள்கிற காரியத்தை, மனிதனோடு சேர்ந்த இயற்கையையும் அழிக்கிற காரியத்தையும்

ஏகாதிபத்தியமும் முதலாளியமும் தொடர்ந்து செய்துகொண்டிருக்கின்றன. மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் இவற்றுக்குச் சேவகம் செய்ய முடியாது. இவற்றை அழித்தாகவேண்டும். போர் கூடாது. போர் ஆயுதங்கள் தேவையில்லை. இராணுவம் தேவையில்லை. முதலாளியம் தேவையில்லை. அரசு அதிகாரம் தேவையில்லை. இப்படியெல்லாம் இன்று மனிதன் பேசவேண்டும். ஆதிக்கத்தை எந்த வடிவத்திலும் நாம் அனுமதிக்க முடியாது. மனிதனை வெறும் பண்டமாக்கும் எந்தச் சூழலையும் நாம் ஏற்கவேண்டியதில்லை. மனிதன் தன்னை எதற்கும் அடிமைப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை. மனிதன் பிற உயிர்களுக்கு தலைவனும் இல்லை. பிற உயிர்களோடு சேர்ந்து வாழ்கிறவன் மனிதன். மனிதனின் சாரம் அவனது பொதுமைக் குணம். இது மனிதனின் கலாச் சாரம்.

நகரங்கள் பெருக, நகர வசதிகள் பெருக, மனிதன் அழிகிறான். கிராமத்து மனிதன் அழிகிறான். முதலாளியம் முதலிய போக்குகள் சிலரை ஏற்றி வைக்கும்பொழுதே பலரைக் கீழே தள்ளுகின்றது. இது மனிதனை அழிக்கிற போக்கு. சமூகத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் என பலரை இந்தப் போக்கு ஆக்குகிறது. சிலர் அழகிலும் ஆடம்பரத்திலும் செல்வத்திலும் திளைப்பதற்காக இப்படி பலர் வறுமையிலும் சேற்றிலும் அவலத்திலும் அழிய வேண்டியதில்லை. மக்கள் மீது அடிமைத்தனத்தைத் திணிப்பதில் முதலாளியோடு அரசியல்வாதியோடு மதத் தலைவனும் ஒத்துழைக்கிறான். இவர்களை நாம் அங்கீகரிக்க வேண்டியதில்லை.

4. வரலாற்றில் இந்தப் பொதுமைக் குணம் என்ற அறம், உழைக்கும் மக்களிடம் தொடர்ந்து இயங்குகிறது. உழைப்பவனுக்குத்தான் பிறர் துன்பம் புரியும். உழைக்கிறவனுக்குப் பகிர்ந்து கொள்ளத் தெரியும். தொழில்முறை உற்பத்தியைக் காட்டிலும், வேளாண்மை உற்பத்தியில் இயற்கையின் பங்கு இன்னும் அதிகமாக இருக்கத்தான் செய்கிறது. இயற்கையின் பங்களிப்பை அறிந்தவன் தன் விளைச்சலைப் பகிர்ந்து கொள்வான். நவீனத் தொழில்முறை, அரசு அதிகாரம் ஆகியவற்றால் பாதிக்கப்படுகிற உழவர்களுக்கு சமூக நீதி பற்றிய உணர்வு இயல்பானது. அவர்கள் வாழ்நிலை, சமூக நீதி பற்றிய உணர்வை அவர்களுக்குள் தூண்டுகிறது. கைவினைஞர்களுக்கும் இத்தகைய மேன்மை புரியும். தாழ்த்தப்பட்ட மக்களைப்

பொருத்தவரை இந்த நீதி சற்று தொலைவில்தான் இருக்கிறது. ஆனால் இவர்களுக்குத்தான் சமத்துவம் என்பது அதிக அளவில் உயிர்ப்பைத் தருகிறது. இவர்கள் எல்லோர்க்குமே வாழ்க்கை எளிமையானது. எளிய வாழ்க்கை இவர்களுக்குப் போதும். இவர்கள் இன்றும் படைப்புத் திறன் உடையவர்களாகத்தான் இருக்கிறார்கள். பாரம்பரியமாகத் தொடர்ந்து வரும் சில கலைத்திறன்களை இவர்கள் கொண்டிருக்கிறார்கள் நாகரிக உலகம் இவர்களைப் பெருமளவு சுரண்டுவதன்மூலம் தன் அநாகரிகத்தைத்தான் வெளிப்படுத்துகிறது. நடுத்தர மக்கள் நீதி உணர்வு குறைந்தவர்களாகவே காணப்படுகிறார்கள். நாளுக்கு நாள் இவர்களுக்கு வாழ்க்கை இன்னும் கூடுதலான வசதிகளை நோக்கியதாக இருக்கிறது. கூடுதல் வசதிகளைத் தேடுவதன் மூலம் அரசு அதிகாரத்திற்கும் வணிகக் கலாச்சாரத்திற்கும் இவர்கள் அதிகமாகப் பலியாகிறார்கள். அறிவுத் திறனை இவர்கள் சேகரித்துக் கொள்கிற அளவுக்கு நற்குணங்களை / பண்பாட்டை இழந்து வருகிறார்கள். இவர்கள் பெறும் அறிவுத் திறன் என்பதுகூட முதலாளியச் சக்திகளுக்கு தம்மை அடிமைப்படுத்தத்தான் செய்கிறது என்ற புரிதல் இவர்களுக்கு இல்லை. ஆசிரியர் சமூகம் என்பது கூட இந்த மடமையில் தான் தன்னை அதிகமாக ஆழ்த்திக் கொள்கிறது. இன்ப நுகர்ச்சி என்ற வாழ்க்கை நோக்கு இவர்களிடம் விடுதலை உணர்வை ஒதுக்கி விடுகிறது. இவர்கள் மூலம்தான் முதலாளியமும் எகாதிபத்தியமும் முழுவல்லமையுடையதாக மாறிக் கொண்டிருக்கிறது. எல்லோருமாகச் சேர்ந்து சோசலிசம் என்ற கனவை, தேவையை அழித்துக் கொண்டிருக்கிறார்கள். இதன் ஆதாரமாகிய நீதி உணர்வை அழிக்கிறார்கள். சமூக உறவை அறுக்கிறார்கள். தன்னலம் தவறல்ல, ஊழல் செய்வது தேவையானதுதான். அடிமைத்தனம் ஏதாவது ஒரு விதத்தில் உலகில் இருக்கத்தான் செய்யும்—இப்படி அநீதிகளை இவர்கள் நீதிப்படுத்துகிறார்கள்.

எகாதிபத்தியவாதிகளும் முதலாளிகளும் அனைத்து மக்களின் உழைப்பின் விளைவில் பெரும்பகுதியை அனுபவிக்கிறார்கள். இவர்கள் தேவைக்காகத்தான் இயற்கை அழிக்கப்படுகிறது. இவர்கள் உண்பதும் அதிகம். துய்ப்பதும் அதிகம். வீணாக்குவதும் அதிகம். இவர்கள் தேவைக்காகத்தான் உணவும், பிற பொருள்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இவர்களின் நுகர்வுத் தேவை தீர்ந்தபிறகுதான் மற்றவர்களின் தேவை கவனிக்கப்படும். வரலாற்றுக் காலம் முழுவதையும்

சேர்த்து வைத்துப் பார்த்தால் இவர்கள் செய்த அக்கிரமங்கள் அதிகம், விஞ்ஞான வளர்ச்சியை இவர்கள் தூண்டி இருக்கிறார்கள் என்பது ஓரளவுக்குத்தான் உண்மை. விஞ்ஞான வளர்ச்சியில் ஏற்பட்டிருக்கும் திரிபுக்கு இவர்களே முழுமையான காரணம். மனித சமூகத்தின் அறிவு வளர்ச்சியை தம் தேவையை ஒட்டி முடமாக்கியிருக்கிறார்கள். கலைப் படைப்புகளை இவர்கள் உற்பத்தி செய்யவில்லை. ஆனால் கலை வளர்ச்சியை தமக்கு இவர்கள் அடிமைப்படுத்தி இருக்கிறார்கள். வரலாற்றில் இவர்களுக்குச் சார்பாக இன்று சொல்வதற்கான நியாயம் எதுவுமில்லை. இயற்கை வளங்களைத் தொடர்ந்து அழிப்பதன் மூலம் பெரும்பாலான மக்களின் வாழ்வுக்கான ஆதாரத்தை அழிக்கிறார்கள். மக்களின் தேவைகளுக்காக போர்கள் நடைபெறுவதில்லை. இராணுவம், காவல் துறை, நிர்வாகத்துறை முதலியவற்றில் மக்களை இழுத்து மேய்த்து அவர்களின் அறிவையும் பண்பையும் அழிப்பவர்கள் இவர்கள்தான். மத்தியதர வர்க்க அறிவாளிகளுக்கு இந்த உண்மை புரியும். முதலாளி, ஏகாதிபத்தியவாதி ஆகியவர்களின் அதிகாரத்தையும் ஆற்றல்களையும் இவர்கள்தான் தக்க வைக்கிறார்கள். முதலாளிகளை அறிவும் ஆற்றலும் மிக்கவர்கள் போல காட்டுபவர்கள் இவர்கள்தான். அதிகாரம், நுகர்வு வெறி, திமிர்த்தனம் ஆகியவற்றைத் தவிர முதலாளியிடம் சொல்லிக் கொள்வதற்கு வேறு குணங்கள் இல்லை. முதலாளிக்குச் சேவகம் செய்வது அரசு. திரும்பவும் அரசு அதிகாரத்தைத் தக்க வைப்பவர்கள் இந்த நடுத்தர வர்க்கத்தினர்தான். இவர்கள் வரலாற்றில் வைத்து தம்மைப் பற்றி உணர்வு கொள்ளவில்லை.

தொழில் துறையில் அறிவியல் நுட்பங்களும் தானியங்கிச் செயல்பாடும் தொடர்ந்து அதிகரித்து வருவதன் மூலம் வரலாற்றில் தொழிலாளிகள் ஒதுக்கப்படுகிறார்கள். தொழில் நுட்பங்கள் தொடர்ந்து அதிகரிப்பதன் மூலம் நிபுணர்களுக்கு தேவை அதிகமாக ஏற்படுகிறது. பிரம்மாண்டமான முறையில் தொழில் துறைக்கு மூலதனம் சேர்கிறது. வேளாண்மை முதலிய துறைகள் கூட விஞ்ஞானமயப் படுத்தப்படுகின்றன. கணிப்பொறியின் ஆளுகை அதிகமாகிறது. மக்களின் உழைப்புத் திறனைக் காட்டிலும் தானியங்கி எந்திரங்களின் உற்பத்தித் திறன் அதிகமாகிறது. இன்று நிபுணர்கள் தேவை. மக்கள் தேவையில்லை. நிபுணர்களை நிர்வாகம் செய்ய, முதலாளியம் ஏகாதிபத்தியம் தேவை. ஆகவே ஏகாதிபத்தியம் சர்வ வல்லமை

உடையதாகவும், மக்கள் வல்லமையற்றவர்களாகவும் இன்று தெரிகிறார்கள். இயற்கைச் சக்தி பெருமளவு ஏகாதிபத்தியவாதிகளால் இன்று அழிக்கப்படுகின்றன. வரலாற்றின் இறுதிக் கட்டத்துக்கு வந்துவிட்டதைப் போன்ற இன்றைய நிலைமை. ஏகாதிபத்தியத்தை இன்று முற்றாக அழித்தாலொழிய மக்களுக்கு வாழ்வு இல்லை. நடுத்தர மக்கள் இதை அறியவில்லை. இதுதான் இன்றைய வரலாற்றின் அவலம்.

5. ஏகாதிபத்தியம் தன்னை நிலைநிறுத்திக் கொள்வதற்கான ஒரு கலாச்சாரத்தைப் பரப்புகிறது. இது போலவே முதலாளியமும் தனக்கான கலாச்சாரத்தைப் பரப்புகிறது. அரசு அதிகாரம் தனக்கான ஜனநாயகம் என்ற கலாச்சாரத்தைக் கொண்டுள்ளது. பொருளியல் துறையில் சந்தைப் பொருளாதாரம் ஒரு கலாச்சாரம். இவையனைத்துமே ஆதிக்கவாதிகளின் கலாச்சாரம். சமூகத்தை எவ்வாறு ஒழுங்கமைப்பது என்பது பற்றி இவர்கள் தொடர்ந்து அறிவை உற்பத்தி செய்கிறார்கள். கல்வி, மருத்துவம், கலை ஆகியவற்றை உருவாக்குகிறார்கள். நுகர்வு முறைகளை உருவாக்குகிறார்கள். பொழுது போக்கு, திரைப்படம் ஆகியவற்றை உருவாக்குகிறார்கள். பொதுமை என்ற அறம் இவர்களிடம் இல்லை. பொதுமை அறத்தை அழிப்பதுதான் இவர்களின் நோக்கம். மனித வளர்ச்சி இவர்கள் கலாச்சாரத்தில் உள்ளடக்கமாக இல்லை. மனிதன் இவர்கள் நோக்கம் அல்ல. இவர்கள் தமக்குள்ளும் மனிதனை அழிக்கிறவர்கள். இவர்களுக்குள் கிளர்ச்சிகள் அதிகம். உணர்ச்சிகள், கொந்தளிப்புகள் அதிகம். ஆரவாரங்கள் அதிகம். இவர்கள் மனித நாகரிகத்தை அழிப்பவர்கள். வரலாற்றை அழிப்பவர்கள். இவர்களின் கலைச் செயல்பாடு முதலியவற்றை கலாச்சாரம் என்றுகூட நாம் ஏற்க வேண்டியதில்லை. இவர்கள் இயந்திரங்களைக் கொண்டு, தொழில் நுட்பங்களைக் கொண்டு, அதிகாரத்தைக் கொண்டு தம்மைத் தாமே அழித்துக் கொள்கிறார்கள். இவர்களை இனி மனிதர்களாக மாற்ற முடியுமென்று தோன்றவில்லை. இவர்களுக்குச் சேவை செய்பவர்களும் தம்மை அழித்துக் கொள்பவர்கள். இவர்கள் அனைவரிடமிருந்தும் உலகத்தை விடுவிக்க வேண்டும். இத்தகைய விடுதலை நோக்கம்தான் இன்றைய மக்கள் கலாச்சாரத்தின் நோக்கமாக இருக்க வேண்டும். இதை நோக்கி அறிவாளிகள், ஆசிரியர்கள், விஞ்ஞானிகள் ஆகியவர்களைத் திரட்ட வேண்டும்.

மக்கள் கலையை வளர்ப்பதற்காக அரசு சொல்வதை நாம் மறுக்க வேண்டும். மக்கட் சார்புடையதாக அரசு தன்னைக்

காட்டிக் கொள்வதற்காகவே கலாச்சார விழாக்களை நடத்து கிறது. கூலி கொடுத்து கலைஞர்களை அமர்த்திக் கொள்கிறது. மக்களோடு இணைந்திருப்பதுதான் மக்கள் கலை. மக்களிட மிருந்து பிரித்து அதன் தரத்தை நுட்பப்படுத்துகிற பொழுது அது மக்கள் கலையாக இருக்க முடியாது. திரைப்படம் இன்று மக்களை அவர்கள் கலைகளிடமிருந்து பிரித்து வருகிறது. தொலைக்காட்சி இதைத்தான் செய்கிறது. இசையை அனுப விப்பதென்பது இசைப்பது அல்லது பாடுவது. விளையாட்டை அனுபவிப்பதென்பது விளையாடுவது. இன்று தொலைக்காட்சி யில் அல்லது திரைப்படத்தில் பார்ப்பதன் மூலம் இவற்றை இரசிப்பது என்ற செயல்பாடு ஊக்குவிக்கப்படுகிறது. இதன் மூலம் மக்களின் செயல்பாடு குறைகிறது. மக்கள் அருவப்படுத் தப்படுகிறார்கள். கலை வியாபாரிகளுக்கு அடிமைப்படுகிறார் கள். நுகர்வு வெறி இவர்களுக்குள் இப்படி செயல்படுகிறது. இதன் மூலம் படைப்புச் செயல் என்பது, அனைவர்க்கும் உரியது என்ற நிலை மாறி ஒரு சிலர்க்கே உரியது என்ற நிலை தோன்றுகிறது. கலை வியாபாரிகள் மீண்டும் முதலாளியச் சக்திகள், ஏகாதிபத்தியச் சக்திகள், அருவ வடிவில் கலை மனிதனை சாந்தப்படுத்துவது எனத் தொடங்கி அவனுக்குள் கோபதாபங்களைக் குறைத்து, சமூக அநீதி பற்றிய உணர்வை அவனிடமிருந்து விலக்குகிறது. இவன் மேலும் மேலும் அதிக மாக கலை நுகர்வுக்கு ஆளாகிறான். அறிவியல், கணிதம் ஆகிய வற்றில் இவன் பெறுகிற நுட்ப அறிவோடு இவனது கலை நுட்ப அறிவும் சேர்கிறது. இந்த அறிவைத் தொடர்ந்து திரட்ட இவனுக்கு வாழ்க்கை வசதிகள் பெருக வேண்டும். இவன் மக்களுக்கு எதிர்நிலையில் செல்பவன்.

6. ஒவ்வொரு நாளும் வரலாறு மறு உற்பத்தி செய்யப்படு கிறது. இந்த உண்மையை ஆளும் வர்க்கம், வரலாற்றுக்கு ஆதார சக்தியான மக்களிடமிருந்து. பல முறைகளைக் கடைப் பிடித்து மறைத்து விடுகிறது. மக்கள், பாமரராய், குருடர்களாய், அறிவற்றவர்களாய், ஆற்றல் அழிந்தவர்களாய் தம்மைக்கண்டு துயருறுகின்றனர். நடுத்தர வர்க்கம் ஏற்கனவே தாம் சிக்கி யுள்ள மாயைகளில் மேலும் ஆழ்ந்து செல்வதின் மூலம் வரலாறு பற்றிய இந்த உண்மையை அறிந்து கொள்வதில்லை.

நிலத்தைப் பக்குவப்படுத்தி உழவுக் கருவிகளைப் பயன் படுத்தி, இன்னும் பலவற்றைச் செய்து உணவு முதலிய

வற்றை உற்பத்தி செய்பவன் உழவன். வேளாண்மைக்குத் தான்தான் காரணம் என்ற உண்மை வரலாற்றின் பழைய தடங்களில், இவனைப் பொருத்தவரை மறைந்து விட்டது. நிலத்துக்கும் உழு கருவிக்கும் நவீன வேளாண்மை பற்றிய அறிவுக்கும், இன்றைய வேளாண்மையில் வங்கி முதலியவை செய்யும் முதலீடும்—இவைதான் இன்று உணவு உற்பத்திக்குக் காரணம். இன்றைய உணவு உற்பத்தியில் உழவ னின் பங்கு குறைவு. இம்மாதிரி ஒரு மாயத் தோற்றம் ஏற் படுத்தப்படுகிறது. வங்கி முதலாளி வங்கியிலுள்ள பணத்திற்கு தான்தான் கர்த்தா என்பது போல நினைத்துக் கொள் கிறான். வரலாற்றுக் காலம் முழுவதும் சேகரமான அறிவின் தொடர்ச்சிதான் இன்றைய நவீன விஞ்ஞானம் என்பதை மறந்த விஞ்ஞானி, தனக்குள் தான் சேகரித்துக் கொண்ட அறிவுதான் உணவுப் பெருக்கத்திற்குக் காரணம் என நினைத்துக் கொள் கிறான். உழவுக் கருவி, வேளாண்மை பற்றிய அறிவு ஆகிய வற்றினுள் தொன்மைக்கால வரலாற்றோடு தான் உறவு கொண்டிருப்பதை விவசாயி அறிந்து கொள்ளவில்லை. இவன் குத்தகைதாரன் அல்லது கூலி விவசாயி. கிடைப்பதை வைத்து துயரத்தோடு வாழ்வதுதான் தன் விதி என நினைத்துக் கொள் கிறான். உணவு உற்பத்திச் செயலில் சம்பந்தப்பட்டுள்ள அனைத்து அம்சங்களோடும் சமகால சமூகத்தின் விரிந்த பரப்பும், வரலாற்றுக் காலம் முழுவதும் திரண்டு வந்துள்ள அனுபவத் தொகுப்பும் உறவுபட்டுள்ளன என்ற உண்மை இன்று இதில் சம்பந்தப்பட்டவர்க்கும் தெரியவில்லை.

இதேபோலத்தான் தொழில் துறையில் தன்னை ஈடு படுத்திக் கொண்டுள்ள தொழிலாளியின் நிலையும் இருக்கிறது. தொழிற்சாலையில் தன்னைக் கொண்டு உற்பத்தியாகும் பொருளுக்குள் தன் உழைப்புத் திறன்தான் திரண்டுள்ளது என்ற முறையில்தான் இவனுக்கு தொழிற்சங்கங்கள் அறிவு புகட்டியுள்ளன. இதனால்தான் தங்களுக்கு மட்டும் கூலி உயர்வு, போனஸ் என தொழிலாளிகள் குரல் எழுப்புகிறார்கள். இதற்கு மாறாக முதலாளி என்ன நினைக்கிறான்? தொழிற் சாலை உருவாக்கத்திற்கு தன் மூலதனம்தான் ஆதாரம். ஆகவே உபரி மதிப்பு முழுவதும் தனக்குத்தான் சொந்தம். மூலதனத் திற்குள் பல்லாயிரம் தொழிலாளிகளும் சற்று கண்ணை அகல விரித்துப் பார்த்தால் பல லட்சம் விவசாயிகளும் இன்னும் ஆழ்ந்து பார்த்தால் ஒட்டு மொத்தமான சமூகமும், மேலும் பார்க்க முடியுமானால் வரலாற்றுக் காலம் முழுவதும் அவன் அறிவுக்குள் தட்டுப்படும் தொழிலாளி இப்படி பார்க்க முடியுமா

னால், விவசாயிகளின் நலத்தின் வழியே தனது நலன் அமைந்திருப்பதைக் கண்டு கொள்ள முடியும். விவசாயிகளுக்கு அப்பால் உள்ள பலவகைப்பட்ட கைவினைஞர்கள் இதில் சம்பந்தப்பட்டுள்ளதை அறிந்து அவர்களையும் தம்மோடு சேர்த்துக் கொண்டு போராட முனைவான்.

இதேபோல ஒரு விஞ்ஞானி, ஓர் ஆசிரியர் ஆகியவர்களை முன்னிறுத்திச் சிந்திக்கலாம். ஒரு பத்தாண்டுக் காலம் தான் முயன்று சேகரித்த அறிவுத் திறனுக்கு சமூகம் காணிக்கை செலுத்த வேண்டும் என்று இவர்கள் எதிர்பார்க்கிறார்கள். நெடுங்காலம் சமூகத்தில் சேர்ந்த அறிவின் ஒருவகைத் திரட்டலைத்தான் இவன் கொண்டுள்ளான் என்பதை இவன் அறிவதில்லை. அறிவுத் திரட்டல் என்பதுகூட கரும்பு தின்னக் கூலி என்பது போன்று ஒரு சுகமான செயல். அன்றியும், விரிவான அறிவுத் திரட்டலின் மூலம் சமூகத்தையும் வரலாற்றுப் பரப்பையும் தனக்குள் கண்டு தன் ஆளுமை விரிவு என்ற புதுவகையான இன்ப அனுபவத்தின் மூலம் தன்னைப் பற்றிய புதிய புரிதலைப் பெறுகிறான்.

இத்தகைய பார்வையை சமூகத்தின் பிற பகுதியினரை முன்னிறுத்தியும் நாம் தொடரலாம். இனி ஓர் அரசு அதிகாரியை முன் நிறுத்திப் பார்க்கலாம். ஒரு வட்ட ஆட்சியர் —தன் அதிகாரத்தினுள் தானே சிக்கிக் கொண்ட இவர், தனக்குக் கீழ் உள்ள அலுவலர்களைப் பற்றியும், தன்னிடம் உதவி கேட்டு வரும் பொது மக்களைப் பற்றியும் என்ன நினைக்கிறார். பலருடைய விதியைத் தீர்மானிக்கும் ஆற்றல் தனக்கு இருப்பது போல அவர் நினைத்துக் கொள்ளலாம். அரசு இப்படித்தான் அவரை வார்த்து வைத்திருக்கிறது. உண்மை இப்படியல்ல. ஒட்டு மொத்தமான சமூகத்திற்கு தொண்டு செய்யும் ஊழியர் அவர்.

அரசு அதிகாரம் இந்த நோக்கத்தோடுதான் ஏற்பட்டதா! இப்படி ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பழம் சமூகத்தில் அரசன் என்பவன், அதிக அளவில் ஒரு கொள்ளைக்காரன். ஒரு சமூகத்திற்கு வெளியில் இருந்து உள்ளே வந்தவன். இவனைப் பற்றி நிறையச் சொல்லலாம். இங்கு சொல்வதற்கு நேரமில்லை. ஆகவே சிலவற்றை மட்டும் கூறிச் செல்லலாம். வரலாற்றில் நெடுங்காலமாகவே அரசு அதிகாரம் நிலஉடைமையாளரோடும் முதலாளிகளோடும் சேர்ந்தே செயல்பட்டிருக்கிறது. மக்களுக்கு தம்மைப் பாதுகாவலராக, தன்னை அரசு நியமித்துக் கொள்

கிறது. மக்களின் அனைத்து வகை வாழ்வியல் நடைமுறைகளை யும் ஒழுங்குபடுத்தும் கடமையை, தான் மேற்கொண்டுள்ளதாகக் கூறுகிறது. இப்படி பொது மக்களுக்கு 'நீதி'யைக் கற்பிப்பதன் மூலம் சமூக நலத்திற்கு தம்மை இன்றியமையாத தேவை ஆக்கிக் கொள்கிறது. இன்றுவரை, அரசுகள் பேசும் ஜன நாயகம் இப்படித்தான் தன்னை நிறுவிக் கொள்கிறது. உண்மையில் அரசு அதிகாரம், இதில் சம்பந்தப்பட்டுள்ள அனைத்து நபர்களையும் சமூகத்தின் முதல்தரக் குடிமக்கள் ஆக்கிக் கொள்கிறது. சமூகத்தின் உற்பத்தியில் முதன்மைப் பங்கை தான் எடுத்துக்கொள்கிறது. உழைப்பாளிகளை ஒடுக்கும் முறைக்கு உட்படுத்தி, அவர்கள் விளைச்சலின் இன்னொரு பெரும் பகுதியை நில உடைமையாளர்க்கும் முதலாளிகளுக்கும் கொண்டு சேர்க்கிறது. அந்நிய நாடுகளிலிருந்து தன் நாட்டை காப்பதாகச் சொல்லி இராணுவத்தைப் பெருக்குகிறது. அரசு இருப்பதனாலேயே போர்கள் நடைபெறுகின்றன. முதலாளி களின் தேவைகளுக்காக, அரசு பிற நாடுகளை அடக்குகிறது. போரின்போது சமூக உற்பத்தியின் செல்வத்தில் பெரும் பகுதி நாசமாகிறது. இந்தச் சூழலில் அரசு தன் இருப்பிற்கு மேலும் அதிகமான நியாயம் கற்பிக்கிறது. மக்கள்மீது சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் அதிகரிக்கிறது. போர் ஆயுத உற்பத்திக் குவிப்புக்காக விஞ்ஞானிகளை, தொழிலாளர்களை கூலிக்கு அமர்த்துகிறது. இவ்வாறு கூலிக்கு அமர்த்துவதன் மூலம் விஞ்ஞானியை தொழிலாளியை சமூக உறவிலிருந்து துண்டிக் கிறது. இயற்கையின் கனிவளங்கள் இராணுவத் தேவைக்காக வீணாக்கப்படுகின்றன. போர் வெறி, தேசபக்தி எனக் கற்பிக்கப் படுகிறது.

இந்தக் கதை இதிகாசம் போல விரித்து சொல்லக்கூடிய கதை. ஒரு வணிகன், வழக்குரைஞன், மருத்துவன், ஒரு பாராளு மன்ற உறுப்பினர், ஓர் அமைச்சர் இப்படி பல பாத்திரங்கள் மூலம் சமூகத்தில் சுரண்டலும் ஆதிக்கமும் பெருகி வருகிறது என்று சொல்லலாம். ஒவ்வொருவரும், ஒட்டு மொத்தமான மக்களின் வாழ்வுக்கு ஆதாரமான சமூகப் பரப்பையும், வரலாற்றையும் தாம் வரித்துக் கொள்கிற மாயைகள் மூலம் அழிப்பதைப் புரிந்து கொள்ள முடியும். உடைமைச் சமூகம் இப்படி ஒவ்வொரு சமூகப் பிரிவையும் அதற்கே உரிய மாயைக் குள் தள்ளுகிறது. ஒரு காவல்துறை அதிகாரி தன்னால்தான் ஊரின் அமைதி காக்கப்படுவதாக நினைத்துக் கொள்கிறான். ஓர் அமைச்சன், தான் இல்லாவிட்டால் சமூகம் இல்லை என நினைத்துக் கொள்கிறான். ஓர் ஏழை விவசாயி உழைப்பதும்,

இழப்பதும், துயரப்படுவதும், சாவதும் தன் விதி என நினைத்துக் கொள்கிறான். ஒரு திருடன் தான் திருடுவது குற்றமில்லை எனச் சொல்ல முடியும். இப்பொழுது இவையனைத்தையும் திரும்ப ஒருமுறை பார்த்துக் கொள்ளலாம். வரலாறு ஒவ்வொரு நாளும் உற்பத்தியாகிறது. மாயைகளும் சேர்ந்தே உற்பத்தியாகின்றன. அதிகார வர்க்கம் மக்களை ஒடுக்குமுறைக்குள்ளாக்க தொடர்ந்து மாயைகளைக் கற்பிக்கிறது. நடுத்தர வர்க்கம் மாயைகளுக்குள் வாழ்கிறது. உழைப்பாளிகள், ஏழைகளுக்குப் பல மாயைகள் கற்பிக்கப்படுகின்றன. திரைப்படங்கள், தொலைக்காட்சி தொடர்ந்து பல மாயைகளை மக்களுக்குள் திணிக்கின்றன. இன்பம்தான் வாழ்வின் குறிக்கோள் என்று ஓயாமல் வற்புறுத்தப்படுகிறது. இதற்காக உணவு, உடை, பொழுதுபோக்குகள் பற்றி ஆயிரக்கணக்கான விளம்பரங்கள் வாழ்க்கை வசதிகளைத் தொடர்ந்து அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்ற தூண்டுதல்கள் - இப்படி ஒவ்வொரு நாளும் பரப்பப்படும் மாயைகளுக்குள் மக்கள் மாட்டிக் கொள்ளும் பொழுது, முதலாளி வர்க்கம், நிம்மதியாய், உற்பத்தியை மேலும் மேலும் பெருக்கி, கடைத் தெருக்களில் கொட்டுகிறது. மாடி வீடுகளுள் தொலைக்காட்சிப் பெட்டிகள், குளிர்சாதனம், தொலைபேசி, அழகு சாதனப் பொருட்கள், இனிய உணவு வகைகள், மது வகைகள்-இப்படி வாழ்க்கை வசதிகள், வாழ்க்கைத் தேவைகள் உற்பத்தியாகின்றன. இவற்றின் மூலம் மக்கள் மலினப்படுத்தப்படுகிறார்கள். அறிவு அழிகின்றனர். நுகர்வு வெறிக்கு உள்ளாகின்றனர். தம்மை இழக்கின்றனர். தங்களை அடிமையாக்கிக் கொள்ள முந்துகின்றனர். அடிமைத்தனம் சுகமெனக் கருதுகின்றனர். வணிக நிறுவனங்களுக்குள் தம்மை அடைத்துக் கொள்கின்றனர். தமக்கான வரலாற்றுப் பார்வையை இழந்து, தம்மை தனி நபர்களெனக் கருதுகின்றனர். வாழ்வதற்கு தம்மை அனுமதிக்கிற அரசை, அதிகாரத்தை, கொள்ளைக்காரர்களை துதிக்கின்றனர். தேசம் பெரிதல்ல, மொழி பெரிதல்ல. தமக்கு வாழ்வே பெரிது என்கின்றனர். முதலாளியம் வெற்றி பெறுகிறது. ஏகாதிபத்தியம் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறது. இந்தக் கதைதான் ஒவ்வொரு நாளும் திரும்பத் திரும்ப மறு உற்பத்தியாகிறது. மக்களின் வரலாற்றை அழிப்பவர் முதலாளிகள். மக்களுக்குரிய உலகத்தைத் தமக்குரியதாகப் பறித்துக் கொண்டவர் முதலாளிகள். மக்களுக்குரிய படைப்புத் திறன், கலைத்திறன் ஆகியவற்றை அவர்களிடமிருந்து அழிக்க முனைபவர் முதலாளிகள். மக்கள் என்ற மாபெரும் ஆற்றலை வெட்டி, குறைத்து அவர்களை

ஏழைகளாய், வறியவர்களாய், மடையர்களாய், கூலிகளாய், கோழைகளாய், போக்கிரிகளாய், வேசிகளாய், ஆணவமிக்கவராய் மாற்றியவர் முதலாளிகள். சமூகத்தின் விளைபொருளை மக்களிடமிருந்து பிரித்து, தம் மாளிகைகளில், விருந்துக் கூடங்களில், கேளிக்கை விடுதிகளில் அடைத்து அனுபவிப்பவர்கள் முதலாளிகள். இப்படிச் செய்வதற்கான நியாயம் தங்களுக்கு உண்டென, நடுத்தர மக்களைச் சொல்ல வைத்தவர்கள் முதலாளிகள்.

நெடுங்கால வரலாற்றின் வழியேயும், ஒட்டு மொத்தமான உலக சமூகப் பரப்பிலிருந்தும் சேகரித்துக் கொண்ட பேராற்றல்களை, தம் வயிற்றுப் பிழைப்புக்காகவும் சிற்சில பதவிகள் பெருமைகளுக்காகவும், விஞ்ஞானிகள், அறிவாளிகள் எனத் தம்மைக் கருதிக்கொள்பவரை தமக்கு அடிமைகளாக்கிக் கொண்டவர்கள் முதலாளிகள். இங்கு முதலாளிகள் என்று சொல்லும் பொழுதெல்லாம், ஏகாதிபத்தியம், அரசு அதிகாரம் ஆகிய பலவற்றைச் சேர்த்தே சொல்லிக் கொள்ள வேண்டும்.

திரும்ப ஒருமுறை சொல்லலாம். முதலாளிகள், ஏகாதிபத்தியவாதிகள், அரசு அதிகாரம் ஆகியவற்றிலிருந்து மக்கள் சமூகம் தம்மை விடுவிடுத்துக் கொள்ள வேண்டும். விடுவித்துக் கொள்வதன் மூலம்தான் வரலாற்றை தமக்கென படைத்துக் கொள்ள முடியும். உலக அளவில் நடைபெறும் நெடுங்கால வரலாறு என்னும் நாடகத்தினுள் முதலாளிகளும்தான் தாமே படைத்துக் கொண்ட மாயைகளில் சிக்கியுள்ளனர் என்பது உண்மை. இந்த மாயைகள் அவர்களை முற்றாக ஆக்கிரமித்துள்ளன. அவற்றிலிருந்து தங்களைத் தாங்களாகவே விடுவித்துக்கொள்ள முடியாது. உலகத்தையும் வரலாற்றையும் தமக்கென பெற முனைந்துள்ள மக்கள் கூட்டம்தான் இந்த முதலாளிகளை, அவர்களைப் பிடித்துள்ள மாயைகளிலிருந்து விடுவிக்கவும் முடியும். அதற்கு முன் தம்மை அடைத்துக் கொண்டிருக்கும் மாயைகளிலிருந்து மக்கள் தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டும். இந்த விடுதலைப் பணி என்பது ஒரு போர்ச் செயல். இரத்தம் சிந்தித்தான் இந்த விடுதலையைத் தொடங்க வேண்டும்.

## 7. சுருக்கமாக :

இதுவரை முதலாளி, தனக்கான உலகத்தை, நாகரிகத்தை, கலாச்சாரத்தை, விஞ்ஞானத்தை, மெய்யியலை, ஒழுக்கநெறிகளைப் படைத்தான். இவனைப் போலவே ஏகாதிபத்தியவாதி

யும் தனக்கான உலகத்தைப் படைத்துக் கொண்டிருக்கிறான். இவர்கள் படைத்த உலகம் மக்களுக்கான உலகமல்ல. இவர்கள் படைக்க விரும்பும் விஞ்ஞானம், கலாச்சாரம் மக்களுக்கானவை அல்ல. முதலாளி படைத்த விஞ்ஞானத்துள், கலாச்சாரத்துள் மக்களின் பங்கு இல்லாமலில்லை. மக்களைக் கொண்டுதான் அவன் தன் உலகத்தைப் படைத்துக் கொண்டிருக்கிறான். இந்த உலகம் திரிபுடையது. பொய்யானது. அநீதியானது. மாயைகளைக் கொண்டது. இந்த மாயைகளும் அநீதிகளும் மக்களைப் பாதித்துள்ளன. தம்மைப் பாதித்த மாயைகளி லிருந்து மக்கள் தம்மை விடுவித்துக் கொள்ளவேண்டும். நடுத்தர வர்க்கத்தின் ஆதரவு இல்லாமல் முதலாளி இந்த உலகத்தைப் படைக்கவில்லை. முதலாளி படைத்த உலகில் நடுத்தர வர்க்கம் தன்னைப் பொருத்தவரை இழிவுக்குள்ளாகி யுள்ளது. நடுத்தர வர்க்கம் தன் இழிநிலையை உணர்ந்து தம் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஆதாரமாக உள்ள மக்களோடு சேர்ந்து கொள்ள வேண்டும்.

மக்கள் சமூகத்தில் இன்று முன்னணியிலுள்ளவர்களாக தொழிலாளிவர்க்கம் தன்னைக்கருதிக் கொள்கிறது. தொழிலாளி வர்க்கம்தனக்கேயானவர்க்கம் அல்ல. உழவர்களை, கைவினைஞர் களை, தாழ்த்தப்பட்டவர்களை ஆதிவாசிகளை, பெண்களை தனக்குள் வைத்துப் புரிந்துக் கொள்ள வேண்டும். உழைப்பில், பொருளுற்பத்தியில் உலக ஆக்கத்தில் இவர்கள் அனைவரும் உறவு கொண்டுள்ளனர். இவர்கள்தான் புது நாகரிகம் படைக்க முடியும். புதிய கலாச்சாரம் படைக்க முடியும். முதலாளிகளிட மிருந்து மீட்டுக் கொள்கிற உலகை, அவ்வாறு மீட்டுக் கொள் கிறபோதே தமக்குரியதாக மாற்றியமைக்க வேண்டும். இடைக் காலம் முழுவதும் நேர்ந்த திரிபுகளைக் களையவேண்டும். நில உடைமையாளர்க்குள்ளும் அரசு அதிகாரத்திற்குள்ளும் முதலாளியத்திற்குள்ளும் தாம் விட்டு வைத்ததை, தாம் விட்டு வைத்த வரலாற்றை மீட்டுக் கொள்ளவேண்டும். வாழ்க்கை எளிமையானது. இயற்கையோடு கூடியது. வாழ்க்கை அழகானது. அனைவர்க்குமானது. இந்த வாழ்க்கையை மக்கள் தமக்கானதாக ஆக்கிக் கொள்ள வேண்டும். முதலாளியின் வரலாறு மக்களுக்கானதல்ல. மக்கள் தமக்கான வரலாற்றைப் படைத்துக் கொள்ளவேண்டும்.

3

# ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கலாச்சாரம் : இன்றைய நிலையில் ஒரு மறு பரிசீலனை

கடந்த ஒரு நூற்றாண்டு அளவில் தமிழன், தமிழ்க் கலாச்சாரம் பற்றி பலரால் பலவகை உருவகங்கள் அல்லது படிமங்கள் உருவாக்கப்பட்டன. இத்தகைய உருவகங்கள் முற்றிலும் கற்பிதமானவை அல்ல. இவற்றினுள் முன்னைய வரலாற்றின் சில ஆக்கக் கூறுகளும் நிகழ் காலச் சூழலில் தமிழ்ச் சமூகத்தில் காணப்பட்ட குறைகள் பற்றிய விமர்சனமும் குறைகள் நீங்கிய நிலையிலான எதிர்கால உணர்வும் அடங்கியிருந்தன. தமிழனை ஆக்கரீதியில் செயல்படுத்தும் நோக்கில் இந்த உருவகங்கள் படைக்கப்பட்டன. இந்த உருவகங்கள் வழியே செயல்பட்ட தமிழ்க் கலாச்சாரம் எத்தகைய சூழலில் எம்முறையில் செயல்பட்டது? சாதித்தவை என்ன? சாதிக்கத் தவறியவை என்ன? இதற்கு என்ன காரணம்? இத்தகைய உருவகங்கள் இன்னும் தேவைதானா? என்பதற்கான ஒரு பரிசீலனை இன்று நமக்கு தேவை. சில முக்கியமான உருவகங்களை முதலில் எடுத்துக் கொள்ளலாம்.

(1) வடமொழியின் தொடர்பின்றி தமிழ் தனித்தியங்க வல்லது என்பதை கால்டுவெல் நிலைநாட்டியதைத் தொடர்ந்து தமிழ்ச் சமூகத்தினுள் மறைமலையடிகள் மூலமாக தனித் தமிழ் இயக்கம் தோன்றி தேவநேயப் பாவாணர் மூலம் தீவிரம் பெற்று, இன்றும் சில முக்கியக் கூறுகளிலாவது உயிராற்றலை தக்க வைத்துக்கொள்ள முயன்று கொண்டிருக்கிறது.

(2) கால்டுவெல் கண்டறிந்து கூறிய உண்மை, ஏற்கனவே தமிழ்ச் சமூகத்தினுள் நீறுபூத்த நெருப்பாகக் கனன்று கொண்டிருந்த வடமொழி எதிர்ப்புணர்வைக் கிளறித் தூண்டியது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை மூலம் வடமொழி எதிர்ப்பும் ஆரிய நாகரீக எதிர்ப்புணர்வும் இணைந்து தீவிரம் பெற்றது. திராவிட நாகரிகமும் ஆரிய நாகரிகமும் ஒன்றுக்கொன்று மறுதலையானவை. தமிழ திராவிட நாகரிகத்தை மதம், சாதி சடங்குகள் என்பன கொண்டு தாக்கி அழிக்க வந்தது ஆரிய நாகரிகம் என்ற முறையில் இந்திய வரலாறு பொருள் கொள்ளப்பட்டது. நீதிக்கட்சியின் மூலமாகவும் பின்னர் திராவிட இயக்கத்தின் மூலமாகவும் இந்த உணர்வுகள் தமிழ் சமூகத்தைப் பெருமளவில் பற்றிக்கொண்டன. திராவிடன் என்ற சொல் ஒரு மந்திரச் சொல்போல ஆற்றல் பெற்றது. சிந்துவெளி அகழ்வாராய்ச்சிகள் திராவிடரின் தொன்மைக்கும் முதன்மைக்கும் சான்றுகளாகக் காணப்பட்டன.

(3) இதே கால அளவில் தொன்மையான தமிழ் இலக்கியங்கள் தாமோதரம் பிள்ளை, உ.வே.சா. போன்றவர் முயற்சியினால் வெளிவந்தன. தமிழனின் தொன்மைக்கு மட்டுமல்லாமல் பண்பாடு, இலக்கியமேன்மை, வணிகம், நகர நாகரிகம் முதலியவற்றுக்கும் இவை சான்றுகளாயின. இமயவரம்பன், கரிகால் சோழன், சேரன் செங்குட்டுவன் முதலியவர்கள் பற்றிய இலக்கியக் கற்பிதங்களும் இராஜராஜன், இராசேந்திரன் போன்றோரது பல நாட்டு வெற்றிகளும் தமிழ்ச் சமுகத்தில் அரசியலை கைப்பற்றுவதற்கும் தமிழர்க்கு தனிநாடு தேவை என்பதற்கும் முற்காலச் சான்றுகள் ஆயின. இந்தி மொழி ஆதிக்கத்தை எதிர்க்கும் முறையில் திராவிடநாடு, தமிழ்நாடு தமிழர்க்கே என்ற முழக்கங்கள் 1938 முதல் வீரியம் பெற்றன.

(4) இவ்வகைப் போக்குகள் ஒருபுறமிருக்க இவற்றுக்கு எதிர் நிலையில் இந்தியக் கலாச்சாரத்தின் சாரத்தோடு இயங்குவதென தமிழ் கலாச்சாரம், இந்திய விடுதலை இயக்கச் சார்பினரால் தொடக்கம் முதலே பார்க்கப்பட்டது. ஆரியத்தை உள்வாங்கிக் கொண்டது தமிழ்க் கலாச்சாரம் என்ற முறையில் ஆய்வுகளும் அரசியலும் நடைபெற்றன.

(5) இந்திய அரசியல் களத்தினுள் வந்த மார்க்சியர் தொடக்கத்திலிருந்து தமிழ்க் கலாச்சாரம் என்பதைக் கண்டு கொள்ளவில்லை. தொடக்கத்தில் சுய நிர்ணய உரிமை என்ற

கோட்பாட்டை கட்சி கொண்டிருந்த போதிலும் பின்னர் தமிழர்க் கான தனி அரசியல், தனிநாடு என்பது இவர்களால் மறுக்கப் பட்டது. இன்றுவரை ஒரே இந்தியா என்ற கொள்கையில் இவர்கள் பிடிவாதமாய் இருக்கின்றனர்.

இவ்வாறு தமிழன், தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் நாகரிகம் தமிழர் அரசியல் பற்றி கடந்த ஒரு நூற்றாண்டு கால அளவில் பல வகையான, ஒன்றுக்கொன்று அனுசரணையான, ஒன்றோடொன்று முரண்பட்ட சிந்தனைப் போக்குகளும் செயல் பாடுகளும் நிலவின. இப் போக்குகள் சில சமயம் ஒன்றினுள் ஒன்று கலந்தனவாகவும் உள்ளன.

## 2

இவ்வகையான சிந்தனைப் போக்குகளையும் இவை எழுந்த காலத்திலான வரலாற்றுச் சூழலில் வைத்து இவற்றைப் பார்க் கும்பொழுது, வரலாற்றுச் சூழலை நிறைத்துக் கொள்ளுமள விற்கு, பிரிட்டனின் காலனிய அரசதிகாரம் முன் நிற்கிறது. ஆங்கிலேயராதிக்கம் வரும் முன்னர், 14 முதல் 17ஆம் நூற்றாண்டுவரை தமிழ்ச் சமூகத்தில் நிலவரங்கள் எப்படி இருந்தன? தமிழர் நாகரிகமென அறியப்பட்டிருந்த முன்னைய வரலாறு எத்தகைய சிதைவுகளுக்கும் சீரழிவுகளுக்கும் உள்ளா யின என்ற ஆய்வைத் தற்காலிகமாகத் தள்ளிவைத்து, காலனிய அரசியல் அதிகாரம், அரசு அதிகாரம், பொருளியல் அதிகாரம் முதலியவை தமிழகச் சூழலில் எத்தகைய கடுமையான பாதிப்பு களைத் தோற்றுவித்திருந்தன என்பதை நாம் முதன்மையாகப் பார்க்கலாம். தமிழகச் சூழலில் முன்னர் நிலவிய அரசு அதி காரத்தை ஆங்கிலேயர் பெரும்பகுதி கடுமையாகத் தாக்கி அழித்தனர். எஞ்சியிருந்த ஒன்றிரண்டு சுதேச மன்னர் பரம் பரையின் சக்தியழித்து, அப்புறம் அவற்றுடன் உறவுகொண்டு அவர்கள் மூலம் தம் ஆதிக்கம் நடைபெற ஏற்பாடு செய்து கொண்டனர். தம் சுரண்டலுக்கும் பாதுகாப்புக்கும் ஏற்றமுறை யில், நிலவுடைமை முறையில் அடிப்படையான மாற்றங்களைச் செய்துகொண்டனர். முன்னர் நிலவி வந்த நிர்வாக முறையை தமக்குச் சாதகமாக மாற்றியமைத்துக் கொண்டனர். கிராமப் பஞ்சாயத்துக்கள் ஏற்கப்படவில்லை. போலீஸ், நீதி மன்றத்

தின் மூலம் அரசுக்குச் சாதகமான சட்ட நிர்வாகம் ஏற்படுத்தப்பட்டது. பாரம்பரியத் தொழில்களும் தொழில் முனைப்பும் அழிக்கப்பட்டன. கடுமையான இராணுவ அடக்குமுறைகளின் மூலம் கிளர்ச்சிகள் ஒடுக்கப்பட்டன. பிரிட்டனின் சுரண்டலுக்கு ஏற்ற முறையில் தமிழகத்தில் சுயமான தொழில் முயற்சிகள் ஊக்குவிக்கப்படவில்லை. பணப் பயிர் சாகுபடி பெரும் வளர்ச்சி பெற்றது. காடுகள் அழிக்கப்பட்டு, தேயிலை, காப்பித்தோட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. மேற்கத்திய நாடுகளின் தேவைக்கேற்றவாறு புகையிலைச் சாகுபடி ஊக்குவிக்கப்பட்டது. கிராமப் பஞ்சாயத்துக்கள், அரசு நிர்வாகத்தின் பகுதியாக ஏற்கப்படாததைத் தொடர்ந்து வேளாண்மைக்கு ஆதாரமான குளங்கள் அழிந்தன. பாரம்பரிய மருத்துவம் புறக்கணிக்கப்பட்டது. அரசு நிர்வாகத்திற்கென ஆங்கிலம் படித்த மத்தியதர வர்க்கம் தோற்றுவிக்கப்பட்டது. இடைத்தரகர்கள் எல்லா இடங்களிலும் முக்கியத்துவம் பெற்றனர்.

ஆட்சி அதிகாரத்திற்கு மக்களைப் பயிற்றுவிக்க என்று சொல்லி ஆங்கிலக் கல்வியும், நிர்வாகத்தில் பங்களிப்பும் ஏற்படுத்தப்பட்டன. இவற்றின் மூலம் அரசு அதிகாரத்திற்குத் தேவையான மனப்பான்மை திட்டமிட்டு உருவாக்கப்பட்டது. சாதி, மதம் போன்ற சிக்கல்களில் காலனிய ஆதிக்க அரசு கூடிய வரை தனக்குச் சாதகமான ஏற்பாடுகளைச் செய்துகொண்டது. பிரித்தாளும் கொள்கை என்ற நடவடிக்கையின் மூலம் மதப் பிரிவினைகள், சாதிப் பிரிவினைகள் ஊக்குவிக்கப்பட்டன. இந்தியர்கள் / தமிழர்களைக்கொண்டு உருவாக்கப்பட்ட ராணுவத்தை வைத்து, இந்திய / தமிழ் மக்கள் அடக்கப்பட்டனர். அதுபோல் இந்தியர் / தமிழர்களை வைத்தே அரசு அதிகாரத்திற்கு ஏற்றவாறு கல்வித் துறையின் மூலமும் நிர்வாகத்துறையின் மூலமும் ஒத்த அடிமை மனப்பான்மைகள் உருவாக்கப்பட்டன. இரு நூற்றாண்டுகளுக்கு மேலாக தீவிரமாகக் கடைப்பிடிக்கப்பட்ட இத்தகைய அரசு அதிகாரம், அடக்குமுறை, பாரம்பரிய தொழில்கள் நாசம், புதிய வர்க்கப் பிரிவுகளின் தோற்றம் ஆகியவை தமிழ் மக்களின் படைப்பாற்றலை அழித்தன. தமிழக வரலாற்றில் முன் எப்பொழுதுமில்லாத அளவுக்குத் தமிழர்கள் நாசத்திற்குள்ளானது இந்தக் காலகட்டத்தில்தான். தம் முன்னிருந்த எதார்த்த உலகம் தமிழர்களின் கைகளிலிருந்து பிடுங்கப்பட்டதன் விளைவாக தமக்குள் அன்னியப்பட்டு மதம், சாதி, விதி, சடங்கு முதலியவற்றின் நாசகாரப் போக்குக்கு அதிகளவில் இக்காலத்தில் இரையாகியிருக்கக் கூடும்.

இவ்வகைச் செயல்பாடுகள் மூலம் தொழில்துறை, வேளாண்மை, கல்வி, மருத்துவம், அரசு நிர்வாகம் ஆகிய அனைத்து வகைகளிலும் பிரிட்டன் தன் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ளும் முறையில் இந்தியர்களைக் கொண்டு / தமிழர்களைக் கொண்டு ஒரு கட்டமைப்பை உருவாக்கிக் கொண்டது. கேள்வி கேட்கப்படாமல் பெரும்பாலும் இந்த அமைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது. கேள்வி ஏழாமைக்கு முதன்மையான காரணம், கடுமையான அடக்குமுறை. அப்புறம் பாரம்பரியத்திலிருந்து அதாவது வரலாற்றிலிருந்து தமிழ்ச் சமூகம் பெரும் பகுதி துண்டிக்கப்பட்டு ஒரு புதிய சமூகச் சூழலில் எடுத்தெறியப்பட்டிருந்தது. இந்தச் சமூகச் சூழலைப் புரிந்து கொள்ளும் அறிவாண்மையும், செயலுக்கான ஆய்வினையும் பிரிட்டனிடமிருந்தே எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தன. பாரம்பரியத்தின் வழியே தம்மைத் தக்க வைத்துக் கொள்வதற்கான மிஞ்சியிருந்த கூறுகள் மிகக் குறைந்த அளவிலேயே இருந்தன. புதிதாக வந்த அரசு, தொழில், கல்வி, மருத்துவ நிர்வாகம், நிலவுடைமை நிர்வாகம், ஒரு சில புதிய வர்க்கப் பிரிவுகளைத் தோற்றுவித்து ஆக்கம் தந்து அவர்களை நிலை நிறுத்தியிருந்தது. இந்த வர்க்கப் பிரிவுகள் தமிழ்ச் சமுதாயத்தின் முன்னனிப் பகுதியாக இருந்தன.

இத்தகைய எதிர்மறையான வரலாற்றுச் சூழலில் தமிழர் தம்மை அடையாளம் கண்டு கொள்ளவும், அதன் மூலம் தம்மைத் தக்க வைத்துக் கொள்ளவும் தமிழன், தமிழ்க் கலாச்சாரம் போன்ற உருவகங்கள் ஏற்பட்டன. ஆங்கிலக் கல்வியின் மூலம் நாம் அறியவந்த மேற்நலக நாகரிகம், தொழில் வளர்ச்சி, அரசு அமைப்பில் மக்களாட்சி முறை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கோட்பாடுகள் கவர்ச்சிகரமானதாகவும் புதிய நம்பிக்கை ஒளி தருவதாகவும் தமிழ் மக்களுக்குத் தோற்றம் தந்தன. மேற்கத்திய அறிவியல் தமிழகப் படிப்பாளிகளுக்குள் புதிய கிளர்ச்சிகளை ஏற்படுத்தியிருந்தது. இவையனைத்தையும் தமக்கு உரிமையாக்கிக் கொள்ளும் நோக்கில் முன்னைய வரலாறு புதிய விளக்கங்களுக்கு உட்படுத்தப்பட்டது. தமிழர்கள் நகர நாகரிகத்திலும், வணிகத்திலும், கடல் வணிகத்திலும் உயரிய நிலை பெற்றிருந்ததை சங்க இலக்கியங்கள் புலப்படுத்தின. எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், எப்பொருள் எத்தன்மையாயினும் அதன் மெய்ப்பொருள் காணும் அறிவு, முறை தமிழரின் பகுத்தறிவு நெறியாகக் கண்டு கொள்ளப்பட்டது. சங்ககாலத்தில் மதம், சாதி ஆகியவை

மக்கள் மத்தியில் பிளவுகளை ஏற்படுத்தவில்லை. கூடியவரை ஒரு சமயச் சார்பற்ற போக்கு நிலவியிருந்தது. சங்க காலத்தில் கடவுளுக்கு முக்கியத்துவம் இல்லை. தமிழ்ச் சமூகத்தோடு வந்து கலந்த பவுத்தமும் சமணமும் கடவுளை மறுத்த சமயங்கள். சித்தர் நெறி கடவுளைப் போற்றவில்லை. இத்தகைய முன்னைய வரலாறு, பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் மேற்கத்திய நாகரிகம், அரசு நிர்வாகம், பகுத்தறிவு ஆகியவற்றைத் தமக்கும் உரிமையுடையது என தமிழர்கள் ஏற்றுக் கொள்ளுமாறு பொருள் பட்டது,

மேற்கத்திய அறிவு முறையோடும் தொழில் முறையோடும் அரசு முறையோடும் தமிழர் ஒத்துழைத்து முன்னேற முடியும். அப்படியானால் தமிழர்களின் பாரம்பரியத்திலிருந்த இத்தகைய அறிவியற் போக்குகள் எவ்வாறு மறைந்தன என்ற கேள்வி எழுந்தபோது, ஆரியரால் என்ற காரணம் முன்னுக்கு வந்தது. தமிழர்களுக்குத் தேவையில்லாத சாதி, மதம், சடங்குகள், புராணங்கள் ஆகியவற்றைக் கற்பித்தவர் ஆரியர் என்ற விளக்கம் பரவலாகத் தரப்பட்டது. ஆரியத்தை அழித்தால் மேற்கத்தியத் தூண்டுதலோடு தமிழர்க்குரிய அறிவு மரபு மீண்டும் தழைக்கும் என்று காணப்பட்டது. இதற்காக ஆங்கிலக் கல்வி தேவை. மேற்கத்திய தொழில்துறை பற்றிய அறிவு தேவை. தொழில்கள் தேவை. ஆரியத்தை முற்றாக மறுப்பதற்கு ஆதாரமாகத் தமிழின் தொன்மையும், வளமையும் தெரிய வந்தன. ஆங்கிலம்தான் தமிழுக்கு புதிய அறிவு எழுச்சியை தரும். ஆகவே ஆங்கிலத்தை உடன் வைத்துக் கொள்ள வேண்டும். ஆங்கிலேயர் தோன்றுவதற்கு பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் தமிழர் தனி நாகரீகம் பெற்றிருந்தனர். ஆகவே தமிழ் நாகரிகத்தின் தொன்மை தமிழர்களுக்கு ஒரு வகையான மிதப்பைத் தந்தது.

அறிவியல் தொழில் நுட்பமென வளர்ந்து வரும் உலக அளவிலான போக்குகளுக்கிடையில் இத்தகைய மிதப்பு பயன்படும் ஆற்றல் மிக்க ஆயுதமென தமிழ் மொழியைத் தமிழன் கண்டு கொண்டான். ஆரியரை முற்றாக மறுத்து ஒரு புதிய நாகரிக எழுச்சியைத் தமிழன் தோற்றுவித்துக் கொள்ள இயலும். தமிழர்களை ஒருங்கிணைக்க, சாதி மதங்களிலிருந்து தமிழர்களை விடுவிக்க, தமிழர்களுக்குள் பகுத்தறிவைத் தூண்ட, தமிழ் மொழி என்ற ஆயுதம் இனி முதன்மையாகப் பயன்படும். காலனிய அரசு தமிழர்களின் மொழி, கலாச்சாரம்

ஆகிய களங்களில் தன் அதிகாரத்தைச் செலுத்தவில்லை. தமிழர் தம் பாரம்பரியத்தில் விட்டு வைக்கப்பட்ட களங்கள் இவை. இவற்றுக்குள் ஆரிய நாகரிகம் நுழைந்து செய்த அழிவு களை இனி அகற்றிக் கொள்ள முடியும்.

தமிழன், தமிழ்க் கலாச்சாரம் பற்றிய கற்பிதங்கள் இம் முறையில்தான் ஏற்படுத்தப்பட்டன. பிரிட்டிஷ் அரசின் அடக்கு முறையை உள்வாங்கிக் கொண்ட தமிழ் நாட்டு அறிவாளிகள் பிரிட்டிஷ் அரசு, தமிழ் மக்களிடம் ஏற்படுத்திய நாசங்கள் பற்றி உணர்வு கொள்ளவில்லை. தமிழ் மக்களின் வரலாற்றை இறுதியாக அழித்தது பிரிட்டிஷ் அரசு என்ற பொருளில் இவர்கள் சில தலைமுறைகளுக்கு முற்பட்ட வரலாற்றைப் படித்துக் கொள்ளவில்லை. பிரிட்டிஷ் அரசை எதிர்க்க இயலாத நிலையில் பிரிட்டிஷ் அரசோடு ஒத்துழைத்து முன்னேறுவது பற்றிய நம்பிக்கை மனப்பான்மையை உருவாக்கிக் கொண்டனர். மேற்குலகிலிருந்து நாகரிகத்தைப் புதிய வேகத்தில் கற்றுக் கொள்ள முயன்றனர். ஆங்கில மொழி மூலம் மேற்கத்திய அறிவியல், கலை இலக்கியங்களை முனைந்து கற்றனர். மேற்குலகின் தொழில், வாணிகம், ஆகியவற்றில் விரைந்து முன்னேற விரும்பினர். ஆங்கில மயமாக்கல் என்ற போக்குக்கு இடம் தந்தனர். வணிகம் பற்றி, தொழில் வளர்ச்சி பற்றி தமிழ்ப் பாரம்பரியத்தில் திறனாய்வு இல்லை. நகர நாகரிகம் பற்றியும் திறனாய்வு இல்லை. ஆகவே சமகால அளவிலான வாணிகம், தொழில் வளர்ச்சி, நகர நாகரிகத்தையும் தமிழ் அறிஞர் திறனாய்வுக்கு உட்படுத்தவில்லை. தமிழக வரலாற் றோடு நெடுங்காலமாக சாதி மதங்களும் இணைந்துதான் இருக் கின்றன. ஆரியரது கலாச்சாரம் என்று அறியப்பட்ட கலாச் சாரம் சில அம்சங்களிலேனும் தமிழ்க் கலாச்சாரமாக இங்கு அறியப்பட்டுத்தான் இருந்தது. தமிழனின் மதம் சைவம் அல்லது வைணவம். தமிழன் வேதங்களின் ஆக்கத்தில் பங்கு செலுத்தியவன். கோயில், வழிபாடு ஆகியவற்றைக் கண்டறித் தவன் தமிழன்தான். இவ்வகைக் கருத்துக்கள் ஒரு பகுதியின ரிடம் உரம் பெற்றிருந்தன. மறைமலையடிகள் தன்னைத் தமிழன் என்று கண்ட அதே சமயத்தில் சைவராகவும் தன்னைக் கண்டார். இராமலிங்க அடிகள் வழியே தம்மை கண்ட திரு.வி.க., ம.பொ.சி ஆகியவர் தூய்மையான ஒரு மதத்தைக் கண்டவர்தான். இவர்களிடம் மத எதிர்ப்புணர்வு இல்லை. எல்லாச் சமூகங்களிலும் மத ஆக்கங்கள் இருந்தன. தமிழ்ச் சமூகமும் இதற்கு விதிவிலக்கன்று. எனினும் கூடியவரை

மனித நேயத்தோடு, ஒத்த அன்பையும் அறிவையும் போற்றிய ஆரோக்கியமான சமயப் போக்கை தமிழகத்தில் காணமுடியும். உண்மையில் பகுத்தறிவு என்ற போக்கு தமிழகத்தில் முதன்மை பெற்றதற்கு இது காரணம்.

## 3

தமிழர்களின் ஆக்கத்திற்கென தம்மை அறிவித்துக்கொண்ட இயக்கங்கள் கடந்த சில பத்தாண்டுகளில் சாதித்தவை என்ன என்பதைத் தொகுத்துப் பார்க்கலாம்.

1. திராவிடநாடு என்ற கோரிக்கை கைவிடப்பட்டது. ஆந்திரம், கர்நாடகம், கேரளம் ஆகியவற்றில் சில பகுதிகளோடு கூடியிருந்த திராவிடநாடு, மொழிவாரிப் பிரிவினை ஏற்பட்ட கால நிலைமையில் செயல்பட முடியாது என்பது ஒரு காரணம். இதைவிட முக்கியமான காரணம், தமிழர்கள் இந்தியா என்ற ஒருமையை இனி மறுக்க முடியாது என்பதுதான். இதற்கும் காரணம் விடுதலைப் போராட்டத்திற்கு கட்சிதயாராக இல்லை. விடுதலையைக் காட்டிலும் அரசு அதிகாரத்தில் கட்சிக்கு பங்கு தேவை.

2. ஆரியர்க்கான எதிர்ப்புணர்வு திராவிட உணர்வு என இன்றும் மிஞ்சியிருக்கிறது. தமிழ் மக்கள் மத்தியில் பெரிதாக பேசப்பட்ட பகுத்தறிவு பல திசைகளில் முனை மழுங்கிக் கிடக்கிறது. பெரியார் போற்றிய தன்மானம், முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் அடிமைப்படுத்துவதை எதிர்க்க வேண்டும். இத்தகைய தன்மானத்தை நோக்கி பகுத்தறிவு இயங்கவில்லை.

3. தமிழர்க்கு தனிப்பட்ட நாடு என்பது தி.மு.க. இயக்கத்தவரால் முற்றாகக் கைவிடப்பட்ட நிலையிலும், இன்றும் தேசிய இன விடுதலை என்ற உணர்வாக தமிழ் மக்கள் மத்தியில் தங்கி இருக்கிறது.

4. தி.மு.க. வின் மூலம் தமிழர்களின் அரசு அதிகாரம் நடைபெற்றது எனக் கொண்டால் இது தமிழர்க்கான அரசு அதிகாரமாக இல்லை. வடவர்க்கு அடிபணியும் அரசியல்

அதிகாரம் தமிழ் மக்கள் மீது அடக்குமுறைகளைத் துணிந்து செய்யும் அரசு அதிகாரம் என்பதைப் புரிந்து கொள்கிறோம்.

5. தமிழ்ப்பற்று என்பது இந்தி மொழிக்கு எதிர்ப்புணர்வாக அரசியல் மட்டத்தில் ஓரளவு பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது என்பதைத் தவிர, ஆங்கில ஆதிக்கத்திற்கு முற்றாக வழி திறந்துவிட்டிருக்கிறது. கல்லூரிகளில் தமிழ் பயிற்சி அதிகரிக்கவில்லை. பொறியியல், மருத்துவக் கல்லூரி எல்லைகளுக்குள் தமிழ் நுழையவே இல்லை. மத்திய அரசோடு உறவு என்ற இலக்கு நோக்கித் தமிழ் இயங்கவில்லை. தமிழ்ப் பற்றை முற்றாகத் துடைத்து எறிந்து விடத்தக்கதாக குழந்தைகளுக்கான ஆங்கிலப் பயிற்சிப் பள்ளிகள் பெருமளவில் செயல்படுகின்றன. உயர்நிலைப் பள்ளிகளில் ஒன்றிரண்டு வகுப்புகள் மட்டும் தமிழில் நடைபெறுகின்றன. தமிழ் இலக்கியம், இலக்கணம் ஆகிய கல்வியின் மூலம் கல்லூரி அளவில் தமிழ் மாணவர்களின் அறிவு, புத்தாக்கம் பெறவில்லை. வரலாற்றாய்வு இலக்கிய திறனாய்வு ஆகியவற்றின் வழியே தமிழ் மாணவர்களின் அறிவும் உணர்வும் நிகழ்காலத்திற்குள் வளர்த்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும். தமிழ்ப்பற்று என்பது இந்நோக்கில் விடுதலை உணர்வாகவும் வளர்க்கப்பட்டிருக்க வேண்டும். தமிழ் பேராசிரியர்கள் என்ற பெருங்கூட்டம் இத்திசையில் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. தமிழர்க்கான அரசியல் எது என்பது அதன் தனித்தன்மையில் வைத்து கண்டு கொள்ளப்படவில்லை.

## 4

அண்மைக் காலத்தில் உலக அளவில் ஏற்பட்ட சில கடுமையான நெருக்கடிகள் 1. சோசலிசத்திற்கு ஏற்பட்ட நெருக்கடி 2. வளைகுடாப் போர் 3. இந்திய / தமிழக அரசியல் அரங்கு விளைவுகள், பாதிப்புகள் வழியே நாம் எல்லாவற்றையும் முற்றிலும் புதிதாகக் கற்றுக் கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டிருக்கிறது. தமிழகச் சூழலுக்குள் இத்தகைய பார்வையைப் பொருத்தி சில உண்மைகளை நாம் கற்றுக் கொள்ள முடியும்.

மேற்கத்திய நாகரிகம் அதன் தொழில் துறை, அரசு நிர்வாகம் ஆகியவை பற்றிய பயிற்சி தமிழர்களின் விடுதலைக்கான ஆக்கத் திறன்களாக அமையாமல், தமிழ் மக்களைச் சுரண்டுவதற்கும் உலக அளவிலான ஏகாதிபத்தியத்திற்கு தமிழ் மக்களை உட்படுத்துவதற்கும் பயன்பட்டிருக்கின்றன. தமிழர்களின் தொழிலும் வேளாண்மையும் ஏகாதிபத்தியக் கண்ணியில் இணைக்கப்பட்டிருக்கின்றன. நகர நாகரிகம், இதன் வசதிகள் தகவல் தொடர்புச் சாதனங்கள் ஆகிய அனைத்தும் இறுதியில் தமிழ் மக்களை அடிமைத் தளைக்குள் சிக்க வைத்துள்ளன. ஆங்கிலக் கல்வியாலும் அரசு அதிகாரத்தில் இடம் பெற்றதனாலும் பயன் பெற்றவர் படித்த மத்தியதர வர்க்கத்தினர். இவர்கள்தான் தமிழ் மக்கள் மத்தியில் அறிவாளிகளாகவும், படிப்பாளிகளாகவும் கட்சி அதிகாரிகளாகவும் தலைவர்களாகவும் செயல்படுவர். இவர்கள் தான் தமிழ்ப் பற்று, ஆங்கிலத்தின் தேவை, சனநாயகம், மார்க்சியம், சோசலிசம் பற்றி மக்களுக்குச் சொல்பவர்கள். மக்களுக்கு வழிகாட்டுபவர்கள். இவர்கள் மூலம் அறிவும் அதிகாரமும் செயல்படுகின்றன. அரசு அதிகாரத்திற்கும் முதலாளியத்திற்கும் இவற்றின் மூலம், ஏகாதிபத்தியத்திற்கும் இவர்கள் தம்மை இழந்தவர்கள். இவற்றின் மூலமாக மக்கள் மீது சுரண்டலையும் அடக்குமுறையையும் செயல்படுத்துபவர்கள் என்ற உணர்வு இவர்களுக்கு இல்லை.

தமிழ் மக்களிடம் கொள்ளும் பற்று என்பது, மத்தியதர வர்க்கப் படிப்பாளிகள் மூலம் தமிழ்ப் பற்றாக, தமிழ் இலக்கியப் பற்றாக, பகுத்தறிவுப் பற்றாக வெளிப்பட்டது என்பது உண்மைதான். ஆனால் தமிழ் மக்களிடம் கொள்ளும் பற்று என்பதை, தமிழ்நாட்டு அரசு அதிகாரத்தில் பங்கு பெறுவது என்ற அளவில் மட்டும் இவர்கள் அறிந்திருந்தார்கள். தங்கள் மூலமும் செயல்படும்—மக்கள் மீது செலுத்தப்படும் அரசு அதிகாரத்தையும் சுரண்டலையும் இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. இன்று மக்கள் மீது செலுத்தப்பட்டிருக்கும் கடுமையான அடக்குமுறைகளையும், வறுமை, அறியாமை, நோய் நொடிகளால் மக்கள் இன்று கடுமையாக பாதிக்கப்பட்டிருப்பதை இவர்கள் இன்றும் கண்டு கொள்ளவில்லை. தம்மை உடைத்துக் கொண்டாலன்றி இவர்கள் புதிய அறிவைப் பெற முடியாது.

தமிழர்க்கு நாடு தேவை, என்ற அறிவு உழைப்பவர்க்கு நிலம் தேவை, வாழ்க்கை வசதிகள் தேவை, இவற்றைத்திரட்டி

கொள்வதற்கான அமைப்புக்கள், இயக்கங்கள் தேவை என்ற நோக்கில் விரிவடைந்திருக்க வேண்டும். தமிழர்களுக்கான தொழில், வேளாண்மை எத்தகையதாக இருக்க வேண்டுமென்ற சிந்தனையை ஏற்படுத்தியிருக்க வேண்டும். தமிழர்களை, ஏகாதிபத்தியத்திற்கு அடிமையாக்கும் தொழில், வேளாண்மை தமிழர்க்கானவை அல்ல. இந்நோக்கில் செயல்படும் முதலாளிகளும் அரசு அதிகாரிகளும், கட்சித் தலைவர்களும், தொழில் துறை நிபுணர்களும், வணிகர்களும் தமிழ் மக்களுக்கு பகைவர்கள். இவர்கள் தமிழறிந்தவர் என்ற காரணத்திற்காக மதிக்கத் தக்கவர் அல்லர். இத்தகைய அதிகார வர்க்கத்தினருடன் ஒத்துழைக்கும் படிப்பாளிகள், அறிவாளிகள் கூட்டத்தின் தமிழ்ப் பற்று, தமிழ்நாட்டுப் பற்று ஐயத்திற்குரியது, ஆபத்தானது. மேற்கு உலகத்தவர்க்கு நல்ல தேயிலை, காபி, சிகரெட், வண்ண உடைகள் தேவை என்பதற்காக நம் காடுகளை அழித்து தேயிலை, காப்பி பயிரிடுவது, தோல் பதனிடும் தொழிற் சாலைகள் மூலம், சாயப்பட்டறைகள் மூலம் நம் விளைநிலங் களையும் ஆறுகளையும் நாசப்படுத்துவது, தமிழ் மக்களின் வாழ்வுக்கான ஆதாரங்களை அழிப்பதாகும். நகர வசதிகளின் தேவைகளுக்காக கிராமங்களையும் விவசாயிகளையும் தொடர்ந்து அழிப்பதன் மூலம், தமிழர் நாகரிகத்தை வளர்க்க முடியாது. வணிகக் கலாச்சாரத்திற்கு தொடர்ந்து தமிழ் மக்களை ஈடுபடுத்தி நாசமாக்குவது தமிழர் நாகரிகமாக இருக்க முடியாது. தமிழ் மக்களின் மீதுஅடக்குமுறையைச் செலுத்துவது தமிழர் அரசியல் ஆக முடியாது.

தமிழர்களை மத்திய அரசுக்கும் ஏகாதிபத்திய அதிகாரத் திற்கும் உட்படுத்துவது தமிழர்க்கான அரசியல் ஆகாது. தமிழ்ச் சிறுவர்களை, குழந்தைகளை, பெண்களை முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் தயாரிக்கும் முறையில் இவர்களைத் தட்டி நொறுக்கி அடக்கி கற்பிப்பது தமிழ் மக்களுக்கான கல்வி முறை ஆகாது. இவ்வாறு செய்பவர்களின் தமிழ்ப் பற்று, முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும் உள்வாங்கிக் கொண்டதாகும். இந்தப் பற்று சுயநலம் கொண்டது. போலி யானது. தமிழ் மக்களை அழிக்கக்கூடியது. இத்தகைய போலி களின் சாதி எதிர்ப்பு உண்மை இல்லை. தாழ்த்தப்பட்டவர் களுக்கு, அடிமைகளுக்கு இவர்கள் தம் சிந்தனை அளவில்கூட விடுதலை தரமாட்டார்கள். இவர்கள் தம் போலிப் பெருமை களுக்காக, வசதியான வாழ்வுக்காக மக்களை அழிப்பவர்கள். இயற்கையை நாசம் செய்பவர்கள். இவர்களின் தமிழ்க் கல்வி

இவர்களிடம் போதையையும், பிரமைகளையும் கனவுகளையும் மட்டுமே தக்க வைத்துள்ளது. தமிழ்ப் பேராசிரியர்கள், தமிழ் இலக்கியவாதிகள் இந்நோக்கில் கடுமையான திறனாய்வுக் குரியவர்கள். தமக்கென, புகழையும், போதையையும், செல் வாக்கையும், பதவியையும் திரட்டிக் கொள்வதற்காக இவர்கள் இயங்குவதன் மூலம் தமிழ் மக்களை சுரண்டி தமிழ் மக்களிடம் பிரமைகளை ஏற்படுத்தி தமிழ் மக்களின் விடுதலை உணர்வை அழித்து தமிழ் மக்களை நாசமாக்குகின்றனர்.

ஒரு நூற்றாண்டுக் கால தமிழ்க் கலாச்சார வரலாற்றை இப்பொழுது திரும்பிப் பார்க்கும் பொழுது, சில உண்மைகள் தெளிவாகப் புலப்படுகின்றன. தமிழ் இனத் தலைவர்கள் என நம்மால் கொண்டாடப்பட்ட பலரிடம் தமிழ்ப் பற்று இருந்தது. தமிழ் இலக்கியப பற்று இருந்தது. தமிழ் நாட்டுப் பற்று இருந்தது. ஆனால் இவற்றை வரலாற்றுச் சூழலில் வைத்து இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. பிரிட்டனின் அரசு அதிகாரம் தமிழர்கள் மீது ஏற்படுத்திய தாக்குதல்களையும், நாசங்களையும் இவர்கள் வரலாற்றின் வழியே புரிந்து கொள்ளவே இல்லை. மேற்கத்திய நாகரிகத்திற்கு இவர்கள் தம்மை இழந்திருந்தார்கள். தமிழ்நாட்டில் ஏற்படுத்தப்பட்ட தொழில்கள் மூலம் மேற்குலக ஆதிக்கத்திற்கு தமிழ்நாட்டை திறந்து விடுகிறோம் என்ற உணர்வு இவர்களுக்கு இல்லை. ஆங்கிலக் கல்வி பல அம்சங்களில் தமிழர் அறிவை முடமாக்கிய தென்பதை இவர்கள் அறியவில்லை. மக்களாட்சி என்பதன் மூலம் முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் மக்கள் பலியிடப்படுகிறார்கள் என்ற உணர்வு இவர்களுக்கு இல்லை. இம்மாதிரி ஏகாதிபத்தியத்திற்கும் முதலாளியத்திற்கும், அரசு அதிகாரத்திற்கும் மக்களை அடிமையாக்கிய பின்னர் மத எதிர்ப்பு, சாதி எதிர்ப்பு, பார்ப்பன எதிர்ப்பு என்று மட்டும் பேசுவதன் மூலம் முன்னைய அதிகாரப் பெருங்கொடுமையை இவர்கள் மறைத்தனர். தமிழ் என்று சொல்லி, தமிழ் இலக்கியம் என்று பேசி மத்தியதர வர்க்கத்தினர், தமிழர்கள் ஆகக் காட்சி கொடுத்தனர். உழைக்கும் தமிழர்கள் புறக்கணிக்கப்பட்டனர். உழைக்கும் மக்களைத் தமிழர்களாக இவர்கள் கண்டு கொள்ள வில்லை.

தமிழ்ப் பற்று என்பதை குறுகிய அளவில் இவர்கள் சுருக்கிப் புரிந்து கொண்டார்கள். வரலாற்றுச் சூழலில் வைத்து இவர்கள் தம்மைப் புரிந்து கொள்ள இயலாத நிலையில்

வரலாற்றுச் சுழலுக்குள் இவர்கள் மாட்டிக் கொண்டார்கள். இவர்களின் பகுத்தறிவு இவர்களுக்கு ஓர் அதிகாரத்தை வழங்கியது. அதிகாரத்தை உடைக்கும் நோக்கில் இவர்கள் பகுத்தறிவைச் செலுத்தவில்லை. ஆரியரின் ஆதிக்கத்தை இவர்களது பகுத்தறிவு இவர்களுக்குக் காண்பித்தது. இவர் களின் மேல்சாதி ஆதிக்க உணர்வைப் பகுத்தறிவு மறைத்தது. இட ஒதுக்கல் மூலம் கல்விப் படியில் மேலேறினர். அரசு அதிகாரம் இவர்களை முதலாளிய, வாணிக போக்குகளுக்கு அடிமை ஆக்கியது. தமிழ்ப் பற்று என்பது மந்திரமாக ஓதப் பட்டு பிரமைகளில் பலரைச் சிக்க வைத்தது. கவிதை, இலக் கியம் என்று பலர் பித்தேறித் திரிந்தனர். தமிழ்த் தெய்வங் களை உற்பத்தி செய்தனர். தமிழ் தெய்வத்தின் பூசாரிகளாக ஆயினர். இத்தகைய செயல்பாடுகளுக்குள் மதம் உயிர்த்திருக் கிறது.

வரலாற்று வழியில் நேர்ந்த சிக்கல்களிலிருந்து நாம் கடுமையாக உழைத்தால் இப்பொழுது நம்மை விடுவித்துக் கொள்ள முடியும். எவ்வகையில் இந்த விடுதலையைப்பெறுவது? தமிழர்க்கு நிலம் வேண்டும். வயல் வேண்டும். காடுகள் வேண்டும். ஆற்றுநீர் வேண்டும். சுத்தமான நீர் தேவை. விளை நிலம் தேவை. ஏகாதிபத்தியத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளும் அரசு தேவை. நகர வாழ்க்கையை மையப்படுத்தாத வாழ்வு நெறி தேவை. தமிழர்க்கு சமத்துவம் தேவை. சோசலிசம் தேவை. தமிழர்களுக்கு முதலாளிகள் தேவை இல்லை. அரசு அதிகாரிகள் தேவை இல்லை. மதத் தலைவர்கள் தேவை இல்லை. சாதிகள் தேவை இல்லை.

முதலாளியப் பெருக்கத்தை நோக்கி நகர்ப்புறத்துத் தொழிலாளிகளைத் தள்ளும் தொழிற்சங்கங்களும், கட்சிகளும், தமிழர் நலத்திற்கானவையாக இருக்க முடியாது. கிராமப்புற உழவர்கள், உழைப்பாளிகள் தமிழர் என்ற முதல் மரியாதைக் குரியவர். இவர்கள் வாழ்க்கைக்கு அனுசரணையான நாகரிகம், ஆட்சிமுறை தேவை. இதற்கு அனுசரணையான தொழில் முறை இதற்கான வாழ்க்கைமுறை தேவை. இதற்கென உழைப்பவர் தமிழர். தமிழ் இலக்கியம் இந்த இலக்கு நோக்கி பொருள்படுத்த முடியும். வள்ளுவரின் நீதி, இளங்கோவின் புரட்சி, மணிமேகலையின் துறவு இந்த நோக்கில் விரிவு பெறலாம். திரு. வி. க. விடம் இடம் பெற்ற அன்பும், பொது மையும் இந்நோக்கில் விளக்கம் பெறத்தக்கவை. மறைமலையடி

களிடம்கூட அன்பும் சிவமும் ஒன்று என்ற நெறி தங்கியிருந்தது. பாரதிதாசனிடம் பகுத்தறிவும் பொது உடைமை உணர்வும் அற்புதமாக ஓரிடத்தில் இணைந்திருந்தன. திருவள்ளுவர், இளங்கோ நெறியும்; சித்தர், இராமலிங்கர் நெறியும் தமிழர் களை சோசலிசம் நோக்கி உந்த முடியும்.

மொழிப்பற்று, இனப்பற்று ஆகியவற்றிலிருந்து முற்றாகப் பிரித்து பற்றற்றவனாக மனிதனை உருவாக்குவது மார்க்சிய நெறி ஆக முடியாது. தமிழன் என்ற நம் வரையறைக்குள் மனிதன் முற்றாகப் பொருந்தியிருக்கிறான். மனிதன் சமத்துவம் விரும்புபவன். விடுதலை நோக்கி செயல்படுபவன். இலக்கியம், வரலாறு, பண்பாடு ஆகியவற்றிலிருந்து உரம் பெறுபவன். இவன் நிலத்திலும் காலத்திலும் தன்னைத் தக்க வைத்துக் கொள்பவன். தன்னை அறிந்த நிலையில் இவன் யாருக்கும் அடிமையாக மாட்டான். தனக்கான விடுதலையைச் சாதிக்க முனைவான். நெருக்கடிகள், சிக்கல்களிலிருந்து இவன் ஆற்றல் களைத் திரட்டிக் கொள்பவன். நம்மைப் பொருத்தவரையில் இவன்-மனிதன். தமிழன். தமிழ் வரலாற்றில் இவனுக்குள் வந்து இவனைத் தொடர்ந்து தூண்டும் ஆற்றல்கள் மூலம், இவன் தன்னை-மனிதனைத் தமிழன் என கண்டு கொள்வான்.

(நிகழ்-18 : ஜுன்-1991) ●

# 4

# பெரியாரின் சிந்தனைகள் : -சில திறனாய்வுக் குறிப்புகள்

தமிழக மக்களுக்காக 50 ஆண்டுக் காலம் பாடுபட்டவர் பெரியார். மக்கள் சார்பிலான தமிழகச் சிந்தனைப் பாரம் பரியத்தின் தொடர்ச்சியில் ஒரு பேரலையாக எழுந்தவர் பெரியார். தமிழகத்தில் வள்ளுவர், சித்தர்கள், வள்ளலார் ஆகியவர்களுக்கு நிகரான பெருமைக்கு உரியவர். அனைத் திந்திய அளவில் புத்தர், அம்பேத்கர் ஆகியவர்களுக்கும், எதிர்நிலையில் சங்கரர், விவேகானந்தர் ஆகியவர்களுக்கும் நிகரான பெருமைக்கு உரியவர். இந்திய-தமிழக சமூக முரண் பாடுகள் கடுமையாக பெரியாரிடம் பிரதிபலித்தன. இன்றுள்ள பல பிரச்சினைகளில் பெரியாரின் பாதிப்புகள் அழுத்தமாகப் பாதித்துள்ளன. இவை இன்னும் நீண்ட காலத்திற்குத் தொடரும். இந்திய-தமிழகச் சமூக அளவிலான புரட்சியின் வெற்றியில் பெரியாரின் பங்கு என்றும் மரியாதையோடு நினைக்கப்படும். தமிழகத்தில் சமதர்மத்தின் தேவையை வற்புறுத்திய மூலவர்களில் ஒருவர் பெரியார். பெரியாரின் மேன்மைகள், முரண்பாடுகள், சாதனைகள், தோல்விகள் ஆகிய அனைத்தும் இந்திய- தமிழக சூழலோடு தொடர் புடையவை. இக்கட்டுரை சிறிய அளவில் பெரியார் சிந்தனைகள் பற்றிய சில திறனாய்வுகளை முன் வைக்கிறது. பெரியாரின் கருத்துரைகள் திரு. ஆனைமுத்து அவர்களின் தொகுப்பு நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை.

## திசைவழி மாற்றம்

திருத்தப்பட்ட சுயமரியாதை இயக்க வேலைத் திட்டத்தில் காணப்பட்ட சில கோரிக்கைகள் : (1-1-1932) பிரிட்டிசு முதலிய முதலாளித் தன்மை கொண்ட ஆட்சியிலிருந்து பூரண விடுதலை. தேசக் கடன்கள் ரத்து. தொழிற்சாலை, இரயில்வே, பாங்கி, கப்பல் ஆகியவை தேசியமயமாக்கப்படல். விவசாய நிலங்கள், காடுகள், தாவர சொத்துக்கள் பிரதி பிரயோஜனம் இல்லாமல் பொதுமக்கள் உரிமை ஆக்குதல். குடியானவர், தொழிலாளர் கடன்கள் ரத்து. சுதேச மன்னர்களை மாற்றி இந்தியாவை

தொழிலாளி, குடியானவர், சரீர வேலைக்காரரின் நேரடி ஆட்சிக்குக் கொண்டு வருதல்.

கோவைக் கூட்டத்தில் (30-1-33)" பெரியார் பேசியவை : ''நமது இயக்கம் சீர்திருத்த இயக்கம் அல்ல. அழிவு வேலை இயக்கம். இன்றைய நிலையில் சமத்துவத் தன்மைக்கு மத சம்பந்தமாக, கடவுள் சம்பந்தமாக, பொருளாதார அரசியல் சம்பந்தமாக அனுகூலமானவை இல்லை. ஆகவே எப்படிச் சீர்திருத்தம் செய்வீர்கள்? இவைகளில் செய்யும் சீர்திருத்தம் இவை இன்னும் நெடுங்காலத்திற்கு நிலைத்து இருக்கத்தான் பயன்படுமே தவிர மாறுதலை உண்டாக்க முடியாது. வேகமாய்ப் போவதற்கு இடையூறாய் கடவுளும், மதமும், அரசாங்கமும் குறுக்கே போடப்படுகின்றன. இவற்றை ஒழிக்க வேண்டும். நாம் பொதுநலச் சேவைக்காரர்கள் அல்ல. புரட்சிக்காரர்கள். நமக்கு சீர்திருத்தக்காரர்களும் பொதுநலச் சேவைக்காரர்களும் பெரிய விரோதிகள். தலைகீழாய்க் கவிழ்ப்பதுதான் புரட்சி. இது குற்றமானால் இதை ஒவ்வொருவரும் குஷாலாகச் செய்ய வேண்டியதுதான்.'' (509-512)

கட்சிக்குள் ஏற்பட்ட கடுமையான விவாதம் ஒன்றின்போது பெரியார் கூறியது: ''பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் வேலை செய்யாமல் சமூக முற்போக்கு எப்படி ஏற்படும்? ஒரு சமூகத்திற்குப் பொருளாதாரமும் அரசியலும் அவசியமானது அல்லவா? இந்த இரண்டையும் விட்டு விட்டுச் செய்யும் முற்போக்கிற்காக நமது சுயமரியாதை இயக்கம் தேவையே இல்லை. சும்மா அலங்காரமாக, வேடிக்கையாக, புராண முட்டாள்தனத்தையும், பார்ப்பனச் சூழ்ச்சியையும் பேசிக் காலம் கழிப்பது மாத்திரமே சுயமரியாதை இயக்கம் என்றால் அது அழிந்து போவதே மேலான காரியம் என்று சொல்வேன்'' (ஏ. எஸ். கே. நூல் பக். 11 இவர்தான் பெரியார்.)

ஆனால் நிலைமை மாறுகிறது. பகத்சிங்கின் 'நான் ஏன் நாத்திகன் ஆனேன்?' கட்டுரையை வெளியிட்டதற்காகப் பதிப்பாசிரியர் முதலியவர்கள் மீது ராஜதுவேஷக் குற்றம் சாட்டப்பட்ட போது குடியரசு இதழில் வெளிவந்த அறிக்கை : (31-3-35) ''சுயமரியாதை இயக்கம், சட்டமறுப்பு இயக்கம் அல்ல. சர்க்காரோடு ஒத்துழையாமை இயக்கம் அல்ல. சட்டத்

தையும் சமாதானத்தையும் மதிக்காத இயக்கம் அல்ல. சுயமரியாதை இயக்க வேலைத்திட்டம் சட்ட வரம்பிற்கு உட்பட்டே நடக்கும்.''

இதன் பிறகு பெரியாரின் திசை வழியும் வேகமும் மாறு கின்றன. சீர்திருத்தப் போக்கு பற்றிய பெரியாரின் திறனாய் வுரைகள் இனித் தமது இயக்கத்திற்கும் பொருந்தும். பெரி யாரின் மாற்றம் தெலிங்கானா புரட்சிக்குப் பின் கம்யூ ரிஸ்ட் கட்சியின் நடைமுறை மாற்றத்திற்கு நிகரானது.

இதைப்பற்றி சிங்காரவேலர் எழுதினார் : ''சுயமரியாதை இயக்கம் ஆரம்பித்து ஓங்கி வளர்ந்து, தற்சமயம் கீழ்நோக்கி விட்டது. ஆனால் மேற்படி இயக்கமும் அதன் தலைவரான ஈ. வெ. ராமசாமியும் சமதர்மக் கொள்கை பரவுவதில் செய்த ஊழியத்தைத் தென்னிந்தியா எப்பொழுதும் மறக்க முடியாது. சமதர்மத்திற்காக நேற்றுவரை பாடுபட்ட ஈ. வெ. ராமசாமி ஏதோ தான் தெரியாமல் விஷயங்களைச் செய்துவிட்டதாகவும் தான் நல்ல பிள்ளை என்றும் சர்க்காருக்கு வேண்டியவர் என்றும் சமதர்மத்திற்கும் அவருக்கும் சம்பந்தம் இல்லை என்றும் சொல்ல ஆரம்பித்து விட்டார். (அரசியல் நிலைமை, மே 1935 N.C.B.H.)

## மதச்சார்பு

''மக்கள் வாழ்க்கை நலத்திற்கு என்று ஏற்படுத்திக் கொண்ட கொள்கைகளை உணர்ந்து அதன்படி ஒழுகமுடியாத நிலையில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்று கருதப்பட்ட காலத்தில் அப்போதுள்ள அறிஞர்கள்- மோட்சம் நரகம், எமன், விதி, கர்மம் என்ற கொள்கைகளை உண்டாக்கி மதக் கட்டுப்பாட்டிற்கு இணங்கி நடக்கும்படி செய்தார்கள். இவற்றை மனிதன் சொன்னான் என்றால் நம்பமாட்டார்கள் என்று கருதி கடவுள் சொன்னார், முனிவர் சொன்னார் என்று கூறினார்கள். (1348) மதங்களை உண்டாக்கியவர்கள் பெரியவர்களாய், விவேகிகளாய், பரோபகாரிகளாய் இருந்திருக்கலாம். அவர் களிடத்தில் எனக்குச் சண்டை இல்லை. அவரவர்கள் அந்தந்தக் கால நிலைக்கு ஏற்றபடி அனுகூலித்தவர்களாக இருந்திருக்கலாம். கிறிஸ்து நாதர் ஆகட்டும் முகமது நபி ஆகட்டும் அந்தந்த காலத்திற்கு அவர்கள் சரியானவர்களாய் இருந்திருக்கலாம். எப்போதைக்கும், எல்லாக் காலத்திற்கும்

அவர்கள் தான் வழிகாட்டிகள் என்றால் அதை நாம் ஒத்துக் கொள்ள முடியாது. (2017)

பெரியாரின் மதச்சார்பான கருத்துக்கள் இவை. இக் கருத்துக்கள் சரியானவையோ இல்லையோ—இவை பெரியாரின் பெருந்தன்மையைப் புலப்படுத்துகின்றன. மதங்களின் தோற்றம் பற்றிய பெரியாரின்கருத்து திட்டவட்டமாக இல்லை. வரலாற்றின் தேவையையொட்டி மதங்கள் ஏற்பட்டன என்ற அறிவார்ந்த யூகமே இக் கருத்துக்களில் உள்ளன. வரலாற்றுச் சூழலில் சமுதாயத்தின் சில தேவைகளையொட்டி மதம் பிறக்கிறது எனக் கூறும் மார்க்சியருக்கும் இத்தகைய கருத்துக்கள் மறுக்கத்தக்கவை அல்ல.

''மதக் கொள்கைக்குப் பொதுவுடைமைத் தத்துவம் விரோதமானதாக இல்லை. எல்லா மதமும் மக்கள் யாவரும் சகோதரர்கள் என்றும் எல்லாமே ஒரேவித இன்பத்தையும் செல்வத்தையும் அடைய வேண்டும் என்றும் கற்பிப்பதாகச் சொல்லப்படுகிறது. பொதுவுடைமைத் தத்துவம் ஆத்திகத்திற்கு விரோதமானது அல்ல. ஆத்திகம் என்பது கடவுள் என்பதாக ஒன்று இருக்கிறது என்றும் அது பாரபட்சமற்றது, அதுவே உலகத்தில் சகல ஜீவராசிகளையும் படைத்தது என்றும் கூறுகிறது. பொதுவுடைமைத் தத்துவம்தான் மோட்ச நிலை, முக்தி நிலை. (1708—10-9-33). பொதுவுடைமைக் கருத்துக்களில் அழுத்தம் கொண்ட நிலையில் மதத்திலிருந்து திரட்டப்பட வேண்டிய ஆற்றல்களில் பெரியார் அக்கறை கொண்டதற்கு இது சான்று. மதத்திற்குள்ளும் ஒரு வர்க்கப் போராட்டம் நடைபெறுவதைப் பற்றிய உணர்விலிருந்தே இக் கருத்துக்கள் பிறக்கின்றன. நல்ல நோக்கங்களுடன் தோன்றிய மதம் இன்றைய நிலையில் எப்படி இருக்கிறது என்ற கேள்வியைப் பெரியார் ஆணித்தரமாக எழுப்பினார். 'நல்லது' எப்படித் 'தீயது' ஆயிற்று? ஆதிக்க வாதிகளுக்கு மதம் எப்படி இரையாயிற்று? எத்தகையவர் இந்த ஆதிக்க வாதிகள்? இத்தகைய கேள்விகளோடு செயல்படும் வர்க்கப் பார்வை, உண்மைகளைக் கண்டிருக்க முடியும். ஆனால் பெரியாரின் கேள்விகள் சில நிலைமைகளில் வேறு திசை நோக்கின.

## மதம் விஷம்

''மனிதர்களுக்குள் மதம் உயர்வு தாழ்வு கற்பிக்கிறது மாத்திரம் இல்லாமல் பொருளாதாரத்தில் உயர்வு தாழ்வு

கற்பிப்பதற்கும் மதம் மூல காரணமாகிறது. உடல் வலிக்கப் பாடுபட ஒரு சாதியும், நோகாமல் உட்கார்ந்து கொண்டு சாப்பிட ஒரு சாதியும் மதம் சிருஷ்டிக்க வில்லையா? பாட்டாளி களில் தரித்திரராகவும் வயிற்றுச் சோற்றுக்கு அடிமையாகவும் கீழ் சாதியராகவும் கீழ்மக்களாக இருக்கவும்; பாடுபடுவதும், சரீர உழைப்பு உழைப்பதும் தோஷம் என்று ஏற்படுத்திக் கொண்டவர்கள் கவலையற்ற வாழ்வு வாழவும் செல்வம் பெருக்கிக் கொள்ளவும், மற்றவர்களை அடக்கி ஆளவும் மதம் அல்லாமல் வேறு காரணம் என்ன? மிருகங்களுக்கு சாதி வித்தி யாசம் உண்டா? மனிதன் மட்டுமே இப்படி இருப்பதற்கு மதம் அல்லாமல் வேறு என்ன?'' (1382) மதத்தின் நன்மையான தோற்றம் பற்றிப் பேசியவர், மதமே தீயது என்றும் பேசு கிறார். இந்தப் பேச்சில் சாதி என்பது வர்க்கத்தைத்தான் குறிக்கிறது. மதம் வர்க்கங்களைத் தோற்றுவிக்கிறது. மிருக மாக இருந்து மதத்தின் மூலமும் மனிதனாகிய பழைய பாடத்தை வசதியாக மறந்துவிடுகிறார் பெரியார். வரலாற்றின் ஆதார சக்தி ஆக்குகிறார் மதத்தை. இதன் மூலம் மார்க்சியத்தை இனிச் சாதாரணமாகத் தூக்கி எறிந்து விடலாம். ''மதம் என்பதை அபின் என்றார் ஒரு பெரியவர். நான் விஷம் என்கிறேன்'' (2022) என்கிறார் பெரியார். இனி இம்முறையில் பெரியார் தீவிரவாதியாகக் காட்சிதரலாம்.

''அரசியல் கொடுமைகளைவிட மத சம்பந்தமான கொடு மைகள் மிக அதிகமாக இருப்பதே இன்றைய நமது தளர்ச் சிக்குக் காரணம். அரசியல் கொடுமைகளைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். பார்ப்பனர்களின் புரட்டிலிருந்து தப்பும் நமக்கு ஆங்கிலேயரை எதிர்ப்பது பெரிதல்ல. (1544) தீண்டப்படாத மக்களுக்கு ஏதாவது விடுதலை வேண்டுமானால் அரசாங் கத்தைக் கொண்டுதான் செய்துகொள்ள வேண்டும். (1604) தீண்டப்படாதவரைப் பொருத்தவரை, நல்ல காலத்தின் அறிகுறியாக இந்தியாவின் ஏகசக்கராதிபத்தியமானது இந்திய அரசர்கள் கையில் இல்லாமல் ஒரு அன்னிய அரசிடத்தில் இருக்கிறது'' (1604) தாழ்ந்த சாதியினருக்கு ஆங்கிலேயர் உடனடி எதிரிகள் அல்லர் என்பது ஓர் உண்மை நிலைமை. உடனடி எதிரிகள் உயர் சாதியினர். இவர்களில் ஒரு பகுதி யினர் பார்ப்பனர்கள், இவர்களைக் கொண்டது நிலவுடைமை ஆதிக்க முறை. சாதித்தகர்வு நிலவுடைமைத் தகர்வோடு தொடர்புடையது. நிலவுடைமைக்கும் காவல், அரசு—ஏகாதி பத்தியம். ஏகாதிபத்தியத்தையும் நிலவுடைமையையும் தகர்க்

காமல் சாதி மத ஒழிப்புப் பற்றிய பேச்சு சாக்கடையை வைத்துக் கொண்டே கொசுக் கொல்லும் முயற்சி. இதற்காக வீரப் பேச்சுக்கள், ஆரவார நடவடிக்கைகள்.

அரசியல் விடுதலையோடு சமூக விடுதலையையும் தொடக் கத்தில் குறிக்கோளாகக் கொண்டிருந்த காங்கிரசுக் கட்சி சமூக விடுதலையைக் கைவிட்டது. இந்திய விடுதலை இயக்கத் தோடு இந்தியக் கலைகள் முதலியவற்றுடன் இந்து சமயமும் புத்துயிர்ப்புப் பெற்றது. காந்தியார் இந்து சமயச் சார்பினர். வருணாசிரமக் காப்பில் ஈடுபாடு கொண்டிருந்தார். வைக்கம் போராட்டத்தில் காந்தியார் செய்த துரோகம் மறக்கத்தக்கது அல்ல. இந்தச் சிக்கலான சூழ்நிலையில்தான் பெரியாரின் சாய்வு புரிந்து கொள்ளத்தக்கது. சமதர்மத்தில் வேர் கொண் டிருக்கும் போது பெரியாரிடத்திலிருந்த தெளிவு தற்போது இல்லை. அவரது முன்னைய தீவிரம் தற்பொழுது இடம் மாறுகிறது. இது சமதர்மத்திற்கும் எதிர் நிலை ஆகிறது.

## சாதி மதங்களும் சமுதாயமும்

''பிறவி காரணமாக உள்ள உயர்வு தாழ்வு மதத்தில் சம்பந்தப்படுத்தப்பட்டு, அம்மதம் பாமர மக்கள் ரத்தத்தில் ஊறி இருக்கிறபடியாலும், அதுவே அரசியலுக்கு ஆதாரமாக இருப்பதாலும், அதை மாற்றாமல், அதை மாற்றுவதற்குத் தகுந்த முயற்சி எடுக்காமல் மேல்நாட்டுச் சமதர்மம் பேசுவது, பாலைவனத்தில் சத்தம் போடுவது போலாகும். முதலில் சமுதாயத்தில் பிறவியின் பேரால் உள்ள பேதங்களை ஒழித் தாக வேண்டும். இதுவே இந்நாட்டு சமதர்மத்திற்கு முதற்படி. நமது நாட்டில் பொருளாதார பேதத்திற்கும் சமூக சாதி பேத முறைதான் பெரிதும் காரணமாய்-காவலாய் இருந்து வந்திருக் கிறது (1700). ஏழை-பணக்காரன் வேறுபாடுகளை மாற்ற வேண்டும் என்று சொல்லும்போது கடவுளையும், மதக் கொள்கைகளையும் குறுக்கே கொண்டுவந்து போட்டால் அவற்றை ஒழிக்காமல் எப்படி இருக்க முடியும். (1702) வெறும் பொருளாதார சமதர்மம் பார்ப்பனரை ஒன்றும் செய்துவிடாது. சாதி முறையின் ஆணிவேராக இருக்கும் பார்ப்பனனை ஒழிக்கும் முயற்சியே சமதர்மவாதியின் முதற்கடமை. (1705) பார்ப்பனருக்கும் மற்றும் மேல் சாதிக்காரருக்கும் இருக்கும் உயர்வை முதலில் ஒழித்தாக வேண்டும். இதிலேயே அரைப் பாகம் பொதுவுடைமை ஏற்பட்டுவிடும் (1713) திராவிட மக்கள்

அனைவரும் தொழிலாளிகள். திராவிடனாய் இருப்பதாலேயே அவன் தொழிலாளியாகவும் பார்ப்பானாய் இருப்பதாலேயே அவன் முதலாளியாகவும் இருக்கிறான். தொழிலாளர் கவனம் ஸ்டிரைக், சம்பள உயர்வு, அடிதடி என்ற பக்கத்தில் செலுத்தப் பட்டதே தவிர இந்தப் பேதத்தை ஒழிக்கும் முயற்சியில் திருப்பி விடப்படவில்லை.'' (1741)

சாதி மதங்களும் கடுமையான உள்ளாற்றல்களோடு இந்திய—தமிழகச் சூழலில் இருக்கின்றன என்ற உண்மை, இவை பொருளியல் சக்திகளோடு இணைந்துள்ளன என்பதை மறுத்துவிட முடியாது. இவற்றின் தோற்றத்திற்கும் இந்த உண்மை பொருந்தும். பொருளாதார சக்திகளிலிருந்து சாதி மதங்களைப் பிரித்துத் தகர்ப்பது என்பது சாத்தியமில்லை; இவை மேற்கட்டின் பகுதி, ஆகவே இவை வெறும் நிழல். மூல உருவங்களாகிய பொருளியல் அடிப்படைகள் அழிந்தவுடன், இவை தானே மறையும் என்று பொதுவுடைமையர் பொருளாதாரவாதம் மட்டுமே பேசியிருக்கலாம். ஆனால் இது உண்மையில்லை. மேற்கட்டின் கடுமையான அழுத்தங் களை—சக்திகளை மறுப்பது மார்க்சியம் அல்ல. தவிர, சாதிப் பிரிவினைகள் இந்தியச் சூழலில் வர்க்கப் பிரிவினையின் பகுதிகள். இம்முறையில் இவை அடித்தளத்திற்கு நெருக்க மானவை. ஆகவே இவை மேலும் சரியாகக் கணிக்கப்பட்டிருக்க வேண்டும். இவற்றின் பொருளாதாரப் பின்னணியோடு சேர்த்து இவற்றின் ஒழிப்புக்கான இயக்கத்தில், பொதுவு டைமையர் பங்கேற்றிருக்க வேண்டும். இந்தியச் சூழலில் எத்தகைய இயக்கம் கட்டுவது என்பதில் பொதுவுடைமையர் இதுவரையிலும் முடிவு செய்யாத எத்தனையோ சிக்கல்களில் இதுவும் ஒன்று. இந்நிலையில் தான் பெரியாரைச் சார்ந்த வர்கள் தங்களுக்குத் தெரிந்த வகையில் தனித்து இயங்க வேண்டி இருந்தது.

இந்நிலையில் அவர்களின் கோட்பாட்டு பகுப்பில் நிறையத் திரிபுகள் தெரிகிறது. சாதி மதங்கள் யாரோ குறுக்கே கொண்டு வந்து போட்டவை அல்ல. இவை கூடவே தோன்றியவை. இவற்றின் தோற்றத்தில் 'திராவிடரு'க்கும் பங்குண்டு. ஒரு காலத்தில் தேவையாக இருந்து, பிறகு தடையாகி விட்டவை இவை. இவை நிலவுடைமை, முதலாளிய முறைகளுடன் நெருக்கமாகப் பிணைந்தவை. தமிழகத்தில் மடங்களுடனும் மேல் சாதிக்காரர்களுடனும் பிணைந்தவை. இவற்றை

அழிப்பதும் தேவையான செயற்பாடுகள். ஆரிய எதிர்ப்பாகவே செயற்பாட்டைக் குறுக்கிக் கொண்டது, மேல் சாதியினருக்கும் உடமை வாதியினருக்கும் பாதுகாப்பான நடைமுறைகள். இம்முறையில் மார்க்சிய எதிர்ப்பாகவும் இவை வடிவம் பெறு கின்றன. பொதுவுடைமையர்க்கு எதிரான தொழிலாளர், விவசாய இயக்கங்களைப் பெரியார் கட்டுவதில் ஒரு சமயம் ஈடுபட்டிருந்ததை நினைவில் கொள்ளலாம்.

## புராணங்கள்...சடங்குகள்

இந்தியக் கண்டத்தில் ஆரியர் வருவதற்கு முன் சிவன், விஷ்ணு இல்லை. கோவிலில் உள்ள உருவங்கள் அவற்றின் தோற்றத்திற்கான கதைகள், பூசைகள், உற்சவ முறைகள், நைவேத்திய சாதனங்கள், திருமணச் சடங்கு முறைகள், பெண்ணடிமை ஆரியருடையவை. புராணங்கள், இதிகாசங்கள், வேத சாஸ்திரங்கள் ஆரியர்தம் உயர்விற்குச் செய்து கொண் டவை. இராமன் அயோக்கியன், இராமாயணத்தின் உட்கருத்து ஆரியர் தமக்கு உரிமை இல்லாத நாட்டில் வாழ்வதற்கு வழி தேட முயன்றதைப் பற்றிய கதை. தென்னாடு உயர்ந்ததைப் பொறுக்க முடியாத ஆரியர் அகத்தியனை அனுப்பித் தென் னாட்டைத் தாழ்த்தினர். அகலிகை, திரௌபதி, சீதை, ஆகியவர்கள் ஆபாசமானவர்கள். மண்டோதரியிடம் குற்ற மில்லை விஷ்ணு ஆரியத்தில் எதிரிகளை அழிக்கவே அவதாரம் எடுத்தான்.

இவ்வாறெல்லாம் பெரியார் தம் பகுத்தறிவுச் சிந்தனை களை விவரித்தார். இவற்றினுள் சில உண்மைகள் அடங்கி இருந்தன என்பதை நாம் மறுக்க முடியாது. நிகழ்காலத்தின் அவசரத் தேவைகள் இவற்றினுள் வெளிப்பட்டன. நிகழ்காலம் பிரச்சினை பற்றிய பார்வை பழங்கால வரலாற்றினுள்ளும் சென்றது. புராணங்கள் முதலியவற்றை அவை எழுந்த வரலாற்றுச் சூழலில் வைத்துப் பெரியார் பார்க்கவில்லை. வரலாற்றுப் பொருளியல் சூழல்களில் சமூக முரண்பாடுகளோடு வாழ்ந்த மனிதர்களை, ஆரியராகவோ, திராவிடராகவோ பெரியார் பார்த்தார். திராவிடர் நம்மவர். ஆகவே அவர்களிடம் குற்றமே இருக்க முடியாது. ஆரியர் பகைவர். ஆகவே குற்றமே உருவானவர் என்றும் பார்த்தார். சிவன், விஷ்ணு, பூசைகள், சடங்குகள், புராணங்கள், சாதி, புரோகிதர் முதலியவை திராவிடச் சார்பானவையும்தான். பெரியார் கருதியவாறு தூய்மையான ஒரு தொன்மை எந்த இன மக்களுக்கும் இருந்த

தில்லை. உலகம் முழுவதும் மக்களினம் வரலாற்றில் தவிர்க்க இயலாத முறையில் மந்திரவியல், சடங்குகள், ஆவிகள், கடவுளர் முதலியவற்றின் மூலமும் வளர்த்திருக்கின்றது. இவை இந்திய சூழலில் ஏகாதிபத்தியம், நிலவுடைமை இணைப்பின் காரணமாக இவை நெடுங்காலத்திற்குக் காப்பாற்றப்பட்டன. பெரியார் தூய்மையான திராவிடப்பழமை பேசியது, சாதி மதங்கள் முதலியவை அறவே இல்லாத ஒரு எதிர்கால நிலைமைக்காக. ஆகவே வரலாற்றிலிருந்து பிரித்து இவர் கண்ட திராவிடத் தூய தொன்மை, ஆற்றல் மிகுந்த ஒரு தொன்மம்.

கடவுள்களின் பரிணாமம் பற்றி ஒரு சமயம் பெரியார் குறிப்பிட்டார். சிவன் கற்பிதம் மிகப் பழமையான காட்டு மிராண்டிக் காலத்தது. விஷ்ணு சிறிது நாகரிகம் ஏற்பட்ட பின் கற்பிக்கப்பட்ட கடவுள். கலை அறிவு கல்வியின் உருவமாகிய பிரம்மா, இன்னும் பிற்காலத்தில் கற்பிக்கப்பட்ட கடவுள். இப்படிப் பார்த்தால் கடவுள்கள் புராணங்களின் பரிணாமத் தன்மை விளங்கும். (1842)

வரலாற்று உண்மைகளுக்கு எவ்வளவு நெருக்கமாகச் சென்றிருக்கிறார் பெரியார். வரலாற்றுச் சூழலிலிருந்தே தெய்வங்கள், புராணங்கள் முதலியவற்றின் தோற்றத்தை இன்னும் கூர்ந்து பார்த்திருந்தால் பெரியார் கண்டிருப்பார். வரலாற்றைச் சூழ்ந்திருக்கும் மாயத்திரை விலகியிருக்கும்; வரலாற்றுப் பொருள் முதலாளராய் உண்மைகளைக் கண்டிருப் பார். ஆனால் பெரியார் பார்த்ததற்குப் பெயர், பகுத்தறிவுப் பார்வை. தனது சிந்தனைக்குள்ளிருந்தே—தனது வெறுப்பு விருப்பிற்கு உட்பட்டே—உலகத்திற்குப் பொருள் சொல்லும் முறை இது. புறத்திலிருந்து, வரலாற்றிலிருந்து உண்மை களைத் தேடித் தொகுக்கும் முறை அல்ல இது. இந்தப் பகுத் தறிவு தனக்குள் உணர்ச்சி கொந்தளித்துக் கொண்டிருப்பதைப் பார்ப்பதில்லை. பகுத்துக்கொண்டே போய் இறுதியில் ஏதுமற்ற இன்மைக்கு அது போய்ச் சேருகிறது. இடையில் அது எதையும் திரட்டிக் கொள்வதில்லை.

உறவு முறை என்ற புகழ் பெற்றதொரு கட்டுரையில் (குடியரசு 2-6-46) பெரியார் உலகம் முழுவதும் பல்வேறு நாடுகளில் மனிதர்களுக்கிடையில் நிலவும் உறவு முறைகளைப் பற்றி ஆராய்கிறார். முஸ்லீம்கள், சிறிய தகப்பனார், சிறிய

தாயார் பெண்களை மணக்கிறார்கள். சயாமில் அரசன் தன் சகோதரியை மணக்கிறான். பவுத்த இராமாயணம் இராமனுக்குத் தங்கை சீதை என்கிறது. இவற்றைக் குறிப்பிட்டு விட்டு பொதுமைப்படுத்துகிறார். ''உலகச் சமூகம் முழுமைக்கும் பொருந்தும்படியான ஒரு முறையோ, வரையறையோ, காரண காரியங்களோ பொதுவாய் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே இவ்விஷயங்களில் இன்னதுதான் சரி-தப்பு என்று குறிப்பிடுவதற்கு இடம் இல்லை. கல்வி பற்றிய காரியங்களுக்கு பாவம், புண்ணியம், கடவுள், தண்டனை, மானம், பொருத்தம் என்று கூறும்படியான எவ்வித முறையும் இல்லை. சமயோஜிதம் என்பதைத் தவிர வேறு வழிகாட்டி இருப்பதாகத் தெரியவில்லை.'' (194-96)

விளக்கைக் கையிலேயே வைத்துக் கொண்டே போய் ஆழக்கிணற்றில் விழுகிறார் பெரியார். பகுத்தறிவு, சூனியத்தில் புதைகிறது. மனித உறவுகளை வரையறைப் படுத்தவல்ல நெறி அறியாத நிலையில், இனி எதுவும் செய்யலாம். சமயோஜிதம் வழி காட்டுகிறது. இவ்விஷயங்களில் இன்னது தான் சரி-தப்பு என்று குறிப்பிடுவதற்கு இல்லை என்று கூறியவர், 'தம் பழங்காலப் புராணங்கள் தான் பெற்ற மகளை, தாயைப் புணர்ந்த கதைகள், குருவின் மனைவி, சகோதரன் மனைவி கலவி, கடவுள்கள் பக்தைகளிடம் கலவி பற்றிய கதைகளைக் குறிப்பிடுவதாக எழுதுகிறார். ஆரியரிடம் எவற்றையெல்லாம் குற்றமாகக் கண்டாரோ அவையெல்லாம் இப்பொழுது சரியுமில்லை. தப்புமில்லை. வரலாறு கூரை சரிந்து புதைகிறது. பெரியார் முன்பு சொன்னாரே—இவற்றை யெல்லாம் பேசிக் கொண்டா காலம் கழிப்பது? ''திருமண முறையே கூடாது. ஒழிக்கப்பட வேண்டியது'' (178) பெரியாரது இன்மை நாத்திகக் கோட்பாடு இப்படியெல்லாம் அவரைச் சொல்ல வைக்கிறது.

## பகுத்தறிவு

''எத்தனையோ கோடிவித ஜீவ பிராணிகளில் மனிதன் என்பது ஒருவிதமான தோற்றமுடைய உருவத்திற்குச் சொல்லப்படும் பெயரே ஒழிய மனிதன் என்ற ஒரு தத்துவத் தனிப்பொருள் இல்லை. (1097) மற்ற ஜீவராசிகளுக்கு இல்லாத ஓரளவு அறிவின் சிந்தனா சக்தி மனிதனுக்கு இருக்கிறது என்கிற அளவிற்கு வித்தியாசம் மாத்திரம்தான் உண்டே தவிர,

மற்றபடி தனிப்பட்ட மேன்மை சொல்வதற்கில்லை. ஏனெனில் மனிதனுக்கு இல்லாத பல சக்திகள் விசேடக் குணங்கள் மற்ற ஜீவராசிகளிடம் காணலாம் (114) பகுத்தறிவுள்ள மனிதன் தான், பின் சந்ததிகளைப் பற்றி முட்டாள்தனமாகக் கவலைப் படுகிறான். ஜீவராசிகள்தம் குட்டிகளைக் கவனிப்பதே இல்லை. பகுத்தறிவு இல்லாத எந்த ஜீவராசியும் வருந்தி வாழ்வ தில்லை...நாய், பன்றி, கழுதை இவைகளில் சாதி கிடையாது. மனிதன் மனிதன்மீது சவாரி செல்கிறான். பகுத்தறிவு இருப்ப தாலேயே மனிதன் மேன்மையானவன் என்று எப்படிச் சொல்வது...சமூக வாழ்க்கை இல்லாது காட்டில் திரிந்தபோது இல்லாத கெட்ட குணங்கள் சமூக வாழ்க்கையில் வந்த பிறகு ஏற்பட்டன, (1115) பரஸ்பர உதவிக்காக ஏற்பட்ட சமூக வாழ்க்கை, பரஸ்பர தொல்லைக்கும் உபத்திரவத்திற்கும் ஆளாகி விட்டது. சமூகத்துறையில் உள்ள வேற்றுமை பகைமை முதலிய குணங்கள் பகுத்தறிவு இல்லாததனால் அல்லது பகுத்தறிவைச் செவ்வனே பயன்படுத்தத் தெரியாததால் ஏற்பட்டவை (1116)

மனிதப்பிறவி ஒரு லட்சியமற்ற பிறவி. மனிதன் பிறக் கிறான். பற்பல எண்ணுகிறான்; இறுதியில் செத்துப் போகி றான். மனிதன் பிறப்பது முதல் செத்துப் போவது வரை இடை யில் நடைபெறும் காரியங்கள் எல்லாம் சுற்றுச் சார்பு, பழக்க வழக்கங்கள் இவைகளைப் பொருத்தே நடக்கின்றன. எனவே மனித வாழ்வு லட்சியமற்ற வாழ்வு (1136) மனிதன் பிறந்து இறக்கும் வரை இடையில் உள்ள காலத்தில் ஏதாவது பயனுள்ள காரியம் செய்ய வேண்டும். சமுதாயத்துக்குப் பயன் தரும் வாழ்க்கையே சிறந்த லட்சியம். (1116)

மனிதன் நிச்சயமாக ஒரு தனிப்பொருள்தான். விலங்கினத் திலிருந்து வேறுபட்டவன்தான். படைப்பியல்புதான் இவனை விலங்கிலிருந்து பிரித்தது. கைகளைப் பயன்படுத்தி—கருவி களைப் பயன்படுத்திப் பொருட்களை உருவாக்குவதன் மூலமே இயற்கையின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெறுகிறான் மனிதன். எந்த விலங்கைக் காட்டிலும் மனிதன் இதனாலேயே மேலானவன். இதனாலேயே தன்னுணர்வு மனிதனுக்கே உரிய குணம். தன் படைப்புக்களை-அவற்றின் மூலம் தன்னை எதிர் வைத்து-தன்னைப் புரிந்து கொள்ள - கணிக்க - தன் உயர்வு பற்றிக் கற்பனை செய்ய - சாதிக்க வல்லவன் மனிதன். இவனது போட்டி, பொறாமை முதலிய 'தீய' குணங்கள்

சமுதாய முரண்பாட்டுச் சிக்கலிலிருந்து பிறப்பவை. வர்க்க வேறுபாடு மனித சமூக வரலாற்று நிகழ்ச்சிக்குத் தேவையாக இருந்தது. காட்டு வாழ்க்கையும் நாகரிக வாழ்க்கையும் இம்முறையிலேயே வேறுபடுகின்றன. சமூகம் வர்க்கங்களாகப் பிளவுண்டது. மனித அறிவும் ஆற்றலும் காலத்திற்குக் காலம் வளர்ந்து வருகிறது. வரலாற்றின் ஒரு பாய்ச்சலாகத் தோன்றியவன் மனிதன். பகுத்தறிவு பாய்ச்சலை விளக்குவதில்லை. பகுத்தறிவு பகுதி அறிவு. படைப்புச் செயலிலிருந்து தோன்றுவதும் திரும்பவும் படைப்புச் செயலில் இணைவதும் அறிவு. மனிதன் தன்னைப்பற்றித் தானே சிந்திக்கும்போது தான் மெய்யியல் அறிவு பெறுகின்றான். மனிதத் துயரங்கள்-நிலவுடைமை, முதலாளியம், ஏகாதிபத்தியம் முதலியவற்றோடு தொடர்புடையவை. மனிதனைச் சூழல் பாதிக்கிறது. அந்தச் சூழலை தனக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக் கொள்கிறான் மனிதன். மனித வரலாறு இத்தகையது. வரலாற்று வளர்ச்சிப் போக்கிலேயே மனிதன் குறைகள் தீரும். என்றாவது முழுமையாகத் தீருமா என்று சோதிடம் பார்த்துப் பயன் இல்லை. மனிதப் படைப்புக்கு நோக்கம் உண்டு; படைப்பின் நோக்கம் விடுதலை. இயற்கையிலிருந்தும் வர்க்க முரண்களிலிருந்தும் விடுதலை. தனது உடல் நொய்மையிலிருந்தும் விடுதலை. விலங்கிலிருந்து வந்தவன் மனிதன். இவனிடம் விலங்கியல்பு தொடர்கிறதா என்பது கேள்வி. பதில்—? பொதுப்படையான மனிதன் பற்றி சமுதாய வரலாற்றோடு சம்பந்தப்படுத்தாது அவனது குற்றங்கள் குறைகள் பற்றிக் கவலைப்படுவது என்றால் நிறையக் கவலைப்பட வேண்டும். அந்த மனநிலையிலிருந்து நிறையக் கருணை, தியாகம் ஆகியவற்றைக் கிளப்பிக் கொள்ள முடியும். இவ்வகைப் போக்கு மிகை உணர்வாக—மிகை மனித நேயமாக வெளிப்படும். வள்ளலார், டால்ஸ்டாய்கள் இத்தகையவர். வரலாற்றில் வர்க்க முரண்பாட்டுச் சிக்கலில்—சமூக அடிப்படையில் வேர் கொள்ளாத பகுத்தறிவு—திசை தெரியாத—ஆகாயத்தில் வேர்விட முயற்சி செய்யும் அறிவு பகுத்துப்பகுத்து இறுதியில் ஒன்றுமே இல்லை என்ற சூனியவாதமும் பேசக் கூடியது. இங்கு இதன் பொருள் முதற் சார்பு அறவே கழன்று விடுகிறது.

## பெரியாரியமும் மார்க்சியமும்

பெரியார் ஒருங்கிணைந்த சிந்தனையாளர் அல்லர். அவரது சிந்தனைத் தொகுப்பில் ஒன்றோடு ஒன்று ஒட்டாத பல கூறுகள் உண்டு. இப்படிச் சொல்வது பெரியாருக்கு இகழ்வு அன்று. படிக்காத—பலதுறை அறிவைத் தேடிப் பெற வாய்ப்பு இல்லாத நிலையில் இருந்தார் பெரியார். இவை பற்றிச் சிந்தித்து ஒரு கட்டுக்கோப்பான தொகுப்பை உருவாக்கிக் கொள்ள காத்திருக்க முடியவில்லை. நிலைமைகள் அப்படி இருந்தன. அதனாலேயே அவரது 'சுய' சிந்தனை தீவிரமாக இயங்கிக் கொண்டிருந்தது—இறுதிவரை.

பெரியாரது பகுத்தறிவு இணைந்திருக்க வேண்டிய பலவற்றைப் பிரித்துவிட்டது. ஏகாதிபத்தியம்—நிலவுடமை—சாதி மதப் பிரிவும் இத்தகையது. இதன் விளைவு ஒரு முனையில் விடைப்பு. இந்தியாவில் ஏகாதிபத்தியமும் நிலவுடைமையும் இணைந்திருந்தன. இவற்றுக்கு எதிர்ப்பைச் செய்யவேண்டிய சக்திகள் ஏகாதிபத்தியம் நோக்கியே—அதுவும் அரைகுறையாகத் தமது போராட்டங்களைச் செய்தன. நிலவுடைமைக்கு அழிவு இல்லை. இந்தப் பெரிய சூழலில்தான் பெரியாரை வைத்துப் பார்க்க வேண்டி இருக்கிறது. பிளவுண்ட சூழலில் பெரியார் ஒரு சிறு எல்லைக்குள் இருந்து போராடினார். அரசியல் விடுதலைக்காக காந்தியார் போராடியதைப் போலவே பெரியாரும் சமூக விடுதலைக்குப் போராடினார். காந்திக்கு நிகரான பெருமை உடையவர் பெரியார். இந்திய விடுதலையில் பெரியாருக்கும் சிறந்த பங்கு உண்டு. பெரியாருக்குப் பக்கத்திலிருந்தவர்கள் பலர் நிலவுடைமைக்காரர்கள். அப்புறம் குட்டி முதலாளியப் படிப்பாளிகள். தன் வாழ்வில் ஏற்பட்ட சில அனுபவங்கள் பெரியாரைக் கடுமையான பார்ப்பன எதிர்ப்பாளராக மாற்றியது; சமூக நிலைமைகளும் அப்படி இருந்தன. கட்சிக்குள்ளும் நிலைமை அப்படி. வெளியில் காங்கிரஸ்காரர்கள் பொதுவுடைமையர் பற்றிப் பெருமையாகச் சொல்வதற்கும் இல்லை. இந்திய வரலாற்றுத் தேக்கம் அனைவரையும் கடுமையாகப் பாதித்திருந்தது.

பெரியாரின் பகுத்தறிவு முறைச் சிந்தனை விரிந்திருந்தால் தமிழக மக்கள், சமூக வரலாறு, விஞ்ஞானம் பற்றி மேலும் தெளிவான அறிவைப் பெற்றிருக்க முடியும். புராணங்கள், தமிழக வரலாறு பற்றிய சரியான ஆய்வுகளின் மூலம் வரலாறு

பற்றித் தெளிந்த அறிவைப் பெற்றிருக்க முடியும். வரலாற்று ஆய்வில் ஏற்பட்ட முடக்கம் இன்னும் நீங்கிய பாடில்லை. பகுத்தறிவில் மட்டும் முடங்கியவர்கள் சிறந்த படைப்பாளிகளாக, தத்துவ வாதிகளாக, வரலாற்று ஆய்வாளர்களாகச் சிறக்கவில்லை. விதி விலக்காக ஒரு சிலரே இருந்தனர்.

பகுத்தறிவின் முடக்கம் சரிசெய்யப்பட்டு அறிவு நீரோட்டம் மீண்டும் பாய்ந்து செல்ல வேண்டும். பெரியாரிடம் இயங்கியல் அணுகல் முறை இல்லை. வரலாற்றுப் பொருள் முதலியலின் சில கூறுகள் மட்டுமே உண்டு. இவற்றிலிருந்து தொடங்கி முடக்கம் களையவேண்டும். பெரியாரின் மனித நேயம் சிறந்த ஒளி விளக்கு. அவரிடம் இருந்த சுயவிமர்சன உணர்வு நல்வழிகாட்டி. பெரியாரியத்தையும் மார்க்சியத்தையும் சமப்படுத்துவதில் ஒரு பயனும் இல்லை. பெரியாரியத்தின் குறுகிய எல்லைகள் தகர்ந்தால் மார்க்சியத்தின் எல்லைக்குள் அது வரும். அது இரு சார்பினருக்கும் நல்லது. தமிழக மார்க்சியம் இந்த உறவால் தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ள முடியும். வெறும் சமாதான சகவாழ்வு இங்கும் நல்லதல்ல. பெரியாரிடம் கொள்ளும் மரியாதை வேறு, பக்தி வேறு. பக்தி பெரியார் அறவே விரும்பாதது. பெரியாரிடமிருந்து திறனாய்வு முறையில் பெறப்படும் உருப்படியான சிந்தனைகள் புரட்சிகர இயக்கத்திற்கு வலுத்தருபவை. உடைமை வர்க்கத்தைத் தகர்க்காத பகுத்தறிவுப் பார்வை, சாரத்தில் பெரியாரியத்திற்கு எதிரானது.

(பரிமாணம், மே’ 81)

# 6

# ஒரு வக்கிரமான போரில் திராவிடமும் மார்க்சியமும்

## சில குறிப்புகள்

1. திராவிடம் ஒரு தனி நாகரிகம் என்பதற்கான சான்றுகள் பல இருந்தாலும் மார்க்சியர் இதனைப் புறக்கணிக்கின்றனர். திராவிட நாடு என்ற முழக்கத்தின் உள்ளடக்கமாக இருந்தது தமிழ்நாடுதான் என்பதை மார்க்சியர் முன்பே கண்டிருக்க முடியும். திராவிடம் ஒரு தேசிய இனம் அல்ல, தமிழினம்தான் ஒரு தேசிய இனம் என்பதை மார்க்சியர் விளக்கிய மாதிரி திராவிட இயக்கத்தினர் புரிந்து கொள்ள வில்லை. பொருளாதாரம், வரலாறு, கலாச்சாரம், நாட்டு எல்லை ஆகியவற்றோடு ஒரு தனி மொழியையும் தேசிய இனத்தின் இலக்கணமாக மார்க்சியர் கருதுவதுபோல திராவிட இயக்கத்தவர் கருதவில்லை. மார்க்சியரின் இலக்கணம் முழுவதுமாக ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான் என்பது உண்மையுமல்ல. இதைப்பற்றி மார்க்சியருக்கு வரலாற்று அனுபவத்தை ஒட்டிய சிந்தனையில்லை. இந்த வரையறையை வைத்து திராவிட இயக்கத்தவரை விமர்சனம் செய்ய முடியும் என்பதே மார்க்சியருக்கும் போதுமானதாக இருந்தது.

சரியான இலக்கணத்தைக் கண்டு கொள்ளாவிட்டாலும் திராவிட இயக்கத்தவர் தமிழ் தேசிய இன விடுதலைக்கான உணர்வெழுச்சியைத் தோற்றுவிப்பதிலும், இதற்கொத்த சில நடவடிக்கைகளிலும் ஈடுபட்டிருந்தனர். இந்தி எதிர்ப்பு, மாநில சுயாட்சிக் கோரிக்கை முதலியன இத்தகைய முயற்சிகள் தமிழக வரலாற்றில் இன்றுவரை பதிந்துள்ள இந்தி எதிர்ப்பின் வேகம்தான் நேருவின் உறுதிமொழிக்கும் காரணமாக அமைந்தது. இந்தியாவிலேயே மாநில சுயாட்சிக் கோரிக்கை தமிழகத்தில்தான் முதன் முதலில் வலுவாக எழுந்தது. இன்று வங்காளத்திலும் பஞ்சாபிலும் இந்தக் குரல் ஓங்கி ஒலிக்கிறது. இதனை விடாப்பிடியாக மேற்கொண்டு செயல்படுவதில் தமிழகத்தில் ஏற்பட்ட தளர்ச்சிகள் கடுமையான விமர்சனத்திற்கு உரியவை.

2. திராவிடர் நாகரிகம், ஆரியர் நாகரிகத்திற்கு எதிரானது என்பதன் அடிப்படையில் சில முக்கியமான உண்மைகள் உள்ளன. திராவிடர் யார்? ஆரியர் யார்? என்பதை வரலாற்று ஆதாரங்களைக் கொண்டு உறுதிப்படுத்துவதைக் காட்டிலும், இந்த உண்மைகள் பொருள் நிறைந்தவை. சமூகவியல் நோக்கில் இந்த உண்மைகள் உறுதிப்படுத்தக் கூடியவை. இந்தியாவின் தொன்மையான நாகரிகம், திராவிட நாகரிகம் என்று சொல்லும்பொழுது இதற்குள் தமிழர் நாகரிகம் மட்டுமல்ல, இந்தியாவின் கிழக்குப் பகுதியில் வளர்ந்த பவுத்தமும், சமணமும் அடங்குகின்றன. இந்தச் சமயங்கள் இந்தியாவின் அறிவெழுச்சியை, தத்துவ வளர்ச்சியை பேரலை போல் ஏற்படுத்தியவை. திராவிட நாகரிகத்தைப் பொருத்தவரை, தமிழர் நாகரிகத்திற்குள் சில பதிவுகளை ஏற்படுத்தியுள்ளன. அவை இன்றும் தொடர்கின்றன.

ஆரியர் என அறியப்பட்டவர் அல்லது கருதப்பட்டவர் நமக்கு விட்டுச் சென்றது வேள்வி, சடங்குகள் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்ட புரோகித முறையும், உலகியல் அனுபவங்களிலிருந்து சிந்தனையைத் தனித்ததாக வடித்து அதிலிருந்து உருவாக்கிய அத்வைதம் போன்ற அருவக் கோட்பாடுகளும் ஆகும். இவற்றுக்கெதிராக, உலகியலோடு ஒத்துச் செல்வதாக அமைந்த சித்தர் மரபு, பக்தி மரபு முதலியவை உலகியலுக்கு அழுத்தம் கொடுக்கும் அறநெறியோடு கூடிய வாழ்வியல் முறை ஆகியன திராவிடர் நெறி என கூறத்தக்கவை ஆகும். கருத்து முதல் வாதம், பொருள் முதல் வாதம் என மெய்யியலைப் பகுத்துப் பார்ப்பதில் ஆர்வம் கொண்டுள்ள மார்க்சியர், திராவிடர் நாகரிகத்தை இப்படி மதிப்பிடுவதில்லை. தொல்பொதுமைச் சமுதாயம், அடிமைச் சமுதாயம் என மட்டுமே பிரித்துப் பார்த்து வரலாற்றாய்வைச் செய்ய விரும்பும் மார்க்சியருக்கு, திராவிட நாகரிகம் என்ற கருதுகோளை வைத்து ஆய்வு செய்ய இயலவில்லை.

தமிழர் வரலாற்றினுள் வீரயுகம் என்பதைக் கண்ட சில மார்க்சியரும் இந்த வீரயுகத்தை மார்க்சிய வரையறைகளோடு கூடிய சமுதாயப் பிரிவுக்குள் வைத்து விளக்கவும் இல்லை. இனம் (race) என்ற கருதுகோளில் வெறுப்பை வளர்த்துக் கொண்ட மார்க்சியருக்கு திராவிட இனம் என்ற கருதுகோள் என்றும் உவப்பானதாக இருக்கவில்லை. அதுபோலவே ஐரோப்பாவுக்குப் பொருந்திய சமூக வளர்ச்சிப்படிநிலை, இந்தியாவுக்

கும் பொருந்துமென்பது மார்க்சியரின் உறுதியான நம்பிக்கை; இதனால் தமிழகச் சூழலுக்குத் தேவையான தனி ஆய்வை மார்க்சியர் மேற்கொள்ளவில்லை. மார்க்சியம் என்ற கருவி இங்கு பழுதுபட்டுப் போவதில் வியப்பில்லை.

3. தமிழர் நாகரிகத்தினுள் சில மேன்மையான கூறுகள் உள்ளன என்பதை மார்க்சியர் இன்றுவரை ஒப்புக் கொள்ள வில்லை. உலகின் தொன்மையான நாகரிகங்களுள் ஒன்று தமிழர் நாகரீகம். சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் பழங்காலச் சூழலிலேயே தமிழரின் சிறப்பான வெளிப்பாடுகள். வணிகப் பெருக்கம், நகர நாகரிகம், தொழில் நாகரிகம், கடல் கடந்த பயணம், ஆட்சி முறையமைப்பு, இலக்கிய வளம், வாழ்வியல், வகுப்பு முதலியவற்றில் தமிழர்களின் தனித்தன்மை அக்காலச் சூழலிலேயே சிறப்புக்குரியவை. இவற்றுக்கு ஆதார மாக தருக்க முறை, தத்துவத் தேடல் ஆகியனவும் சிறந் திருக்க வேண்டும். காப்பியங்களும், பக்தி இலக்கியங்களும் தம் கால வரலாற்றை வெளிப்படுத்துபவை. இவை இன்றும் ஆக்க ரீதியில் விளக்கங்களுக்கு உட்படுத்தத் தக்கவை. இவ்வகை இலக்கியங்களைத் தோற்றுவித்த வரலாற்றுக் காலங்களின் முற்போக்கான தன்மையை மார்க்சியர் புரிந்து விளக்கியிருக்க வேண்டும். தமிழகத்தில் ஒளி பொருந்திய வரலாற்றுக் காலங்கள் உண்டு. பேரரசுகள் தோன்றுவதும் பல நாடுகளை வெற்றி கொள்வதும், எல்லா நாடுகளின் வரலாற்றி னுள்ளும் நேர்ந்த நிகழ்ச்சிகள். தொழில், வேளாண்மை, நிர்வாகம், மருத்துவம், கல்வி, தருக்கம் முதலிய பல துறை களிலும் ஆக்க ரீதியான முறையில் இயங்காமல் ஒரு சமூகம் வாழ முடியாது. சிற்பம், கட்டிடம், இசை, கிராமியக் கலைகள் முதலியவற்றில் ஆக்க ரீதியான சாதனைகள் தமிழகத்திற்கு உரியவை. ஆரிய நாகரிகம் தமிழர் நாகரிகத்தோடு கலந்து எத்தனையோ புதுமைகளைத் தோற்றுவித்துள்ளது. ஆயினும் ஆரியர்க்கும் திராவிடர்க்கும் வரலாற்றுக் காலம் முழுவதும் சில களங்களிலாவது பகைமை நிலவியது தெளிவு. தமிழ் நாட்டில் தோன்றிய தத்துவங்கள் பல, பவுத்தமும் சமணமும் இங்கு சாதனைகள் பெற்றன. சங்கரரின் ஒருமைக் கோட்பாடும், இராமானுசரின் பன்மைக் கோட்பாடும் தோன்றுவதற்கான களம் தமிழ்நாடுதான். சைவமும் வைணவமும் தமிழகத்தின் தனிப் படைப்புக்கள். நெடுங்காலமாகத் தொடர்ந்து வரும் சித்தர் மரபு தமிழகத்தில் இன்றும் நிலை பெற்றிருக்கிறது. இந்தப் போக்கின் தொடர்ச்சிதான் பெரியாரியம். பல இனங்

களும், மதங்களும், பண்பாடுகளும் தமிழகத்தில் கலந்துள்ளன. இவற்றோடு சேர்ந்து தமிழக வரலாறு மார்க்சிய முறையில் விளக்கப்பட்டிருக்க வேண்டும்.

சமயம் என்றால் எப்பொழுதும் மக்களின் அழிவுச் சக்தி என்றும், இலக்கியம் என்றால் ஆளும் வர்க்கத்திற்கு சேவை புரிவதென்றும் தவறாகப் புரிந்து கொண்ட மார்க்சியர் தமிழகத்தில் இருண்ட காலத்தையே அதிகம் கண்டிருக்கின்றனர். தொன்மையான எந்தச் சமூகத்திற்கும் தவிர்க்க இயலாமல் உள்ள சில பிரச்சினைகள் தமிழ்ச் சமூகத்திற்கும் உண்டு. சில பழமையான கூறுகள், நிகழ்காலச் சமூகத்திற்கு சுமைகள். அதுபோலவே பழங்கால வரலாற்றிலிருந்து தொடர்ந்து வரும் சில சக்திகள் நிகழ்காலச் சமூகத்திற்கு ஆக்கம் தருபவை. தமிழ் நெறி என ஒன்றை வகுக்க முடியுமானால் அது சோசலிசத்திற்கு உகந்ததாகவே இருக்கும்; பகுத்தறிவுக்கு உரியதாகவே இருக்கும். இப்படியெல்லாம் வரலாற்றிலிருந்து நமக்குத் தேவையான சக்திகளைத் திரட்டிக் கொள்வதை மார்க்சியர் வெறுத்தனர். இதன் காரணமாகத் தமிழ்ப் பண்பாடு என்று பேசுபவர்களுக்கும், மார்க்சியருக்கும் நிரந்தரமான பகைமை ஏற்பட்டிருக்கிறது. தமிழக வரலாறு, இலக்கிய ஆய்வு ஆகியவற்றில் கடுமையான தேக்கமும் பின்னடைவும் ஏற்பட்டிருக்கின்றன. திராவிட இயக்கத்தினர்க்கும் மார்க்சியர்க்கும் ஏற்பட்ட பகை, தமிழக மக்கள் வாழ்க்கையைப் பெருமளவு பாதித்திருக்கிறது. திராவிட இயக்கத்தவரும் பார்ப்பனிய எதிர்ப்பு என்பதிலேயே முழுமுற்றாக அழுந்தி இருந்ததனால் அவர்கள் சரியான வரலாற்றுப் பார்வையை வளர்த்துக் கொள்ளவில்லை. வரலாற்றுக்கு ஆதாரமான பொருளியல் சக்திகளைப்பற்றி அவர்களின் கவனம் செல்லவில்லை. கலாச்சாரச் சக்திகளுக்கு முழுமுற்றான கவனம் செலுத்தினர். தமிழர் நாகரிகம் புதுப்பிக்கப்பட வேண்டும் என்பதில் முழுமையான அக்கறை கொண்டனர். தமிழர் என்ற தொகுப்பினுள் சுரண்டல் சக்திகளைப் பிரித்தறியவில்லை. சேரன் செங்குட்டுவன் மாதிரி மீண்டும் ஆட்சியமைப்பதையே நோக்கமாகக் கொண்டனர். அரசு என்பதை சமூக மாற்றத்திற்கான பெரும் படை எனக் கண்டனர். அரச பீடத்தில் அமர்ந்த பிறகும் அதன் வரையறையை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. அரசு பற்றிய அறியாமை, இருவேறு நலன்களுக்கிடையில் சமரசம் செய்வதே அரசியல் என்ற கடுமையான தவறுக்கு அவர்களை இட்டுச் சென்றது. இதன் இன்னொரு விளைவு

மார்க்சியருக்கும், ஆட்சியில் அமர்ந்த திராவிட இயக்கத்தினர்க்கும் ஏற்பட்ட பகை. இருசாராரும் இதற்கு பொறுப்பு ஏற்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

4. பெரியார் பற்றிப் புரிந்து கொள்வதில் மார்க்சியர் நிறையத் தவறுகள் இழைத்துள்ளனர். தமிழ்நாட்டில் விடுதலைப் போராட்ட இயக்கத்தில் பெரியார் முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். ஒரு நாட்டிற்கு விடுதலை என்றால் அரசியல் துறையில் மட்டுமல்ல, சமூகத் துறையிலும் விடுதலை தேவை. எது முதலில், எது பிறகு என்று தீர்மானிப்பதிலும் குழப்பமும் தவறும் ஏற்படும். தமிழ் நாடு காங்கிரஸ் கட்சியினுள் வர்ணாசிரமப் பற்றை பெரியார் கண்டார். சமூகத்தில் நிலவும் வெறுக்கத்தக்க போக்கு கட்சிக்குள்ளும் இருப்பதையும், அது சதித்தனமாக இயங்கு வதையும் பெரியார் வெறுத்தார். 1952ல் சேரன் மாதேவி நிகழ்ச்சி காங்கிரஸ் கட்சியின்பால் கடுமையான வெறுப்பைப் பெரியார்க்கு ஏற்படுத்தியது. வர்ணாசிரம நடைமுறைக்கு எதிராகப் போராடுவதில் சமூக விடுதலை அடங்கியிருப்பதை காங்கிரஸ் கட்சி ஏற்கவில்லை. ஆகவே இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுப்பது என்ற முறையில் பெரியார் வெளியேறினார். வைக்கம் போராட்டத்தை ஒட்டி நடந்த நிகழ்ச்சியில் காந்தி யிடம் தீவிரமான வர்ணாசிரமப் பற்று இருப்பதையும் பெரியார் கண்டார். அதன் பிறகு காந்தியோடு அவர் சமரசம் செய்து கொள்ள இயலவில்லை. 1939ல் இந்தித் திணிப்பைக் கடுமையாக ராஜகோபாலாச்சாரி செயல்படுத்திய பொழுது ஏற்கனவே வர்ணாசிரம வெறுப்போடு வடவரின் சமஸ்கிருத மயமான இந்தியின்பாலும் ஏற்பட்ட வெறுப்பு, திராவிடநாடு கோரிக்கைக்கு வழியமைத்தது. காங்கிரஸ் கட்சியோடு கூடி சுதந்திரம் என்பதை பொதுவுடைமை கட்சியில் ஒரு பகுதியினர் ஏற்றுக் கொண்டனர். நேரு முன்வைத்த சோசலிசம் பொது வுடைமைக் கட்சியை வசப்படுத்தியது. திராவிட இயக்கம் இப்படி வசப்படவில்லை.

இவை ஒருபுறமிருக்க, இன்னொரு வரலாற்று உண்மை யிலும் நாம் கவனம் கொள்ள வேண்டும். ஒவ்வொரு கால கட்டத்திலும் சமூகத்தில் உள்ள சில பிரிவினரே அரசியலரங் கிற்கு வந்து சேருகின்றனர். அரசியலரங்கில் தோற்றம் கொள்ளும் எவரும் சமூகத்திலுள்ள மற்ற பிரிவினருக்கும் சேர்ந்துதான் கோரிக்கைகள் முன்வைப்பதாக சொல்லிக் கொள்

கின்றனர். நிலக் கிழார்களும், வணிகப் பெருமக்களும் இப்படித் தான் நீதிக்கட்சி என்ற வடிவத்தில் அரசியலரங்கிற்கு வந்தனர். ஏற்கனவே பார்ப்பனர், காங்கிரஸ் கட்சிக்குள் இருந்து இந்தியா ஒரு தேசம் என்ற கருத்தை பரப்பி வந்தனர். அவர்களே ஆட்சியரங்கில் இடங்களை நிரப்பிக் கொண்டிருந் தனர். சமூக அந்தஸ்தைப் பெறுவதற்காகவும், தொழில் முயற்சித் தேவைகளுக்காகவும், தம் உடைமையைக் காப்பதற் காகவும், வேலை வாய்ப்புக்காகவும், அரசியல் பீடத்தில் இடம் பிடிக்கவும், அரசு அதிகாரத்தில் பங்கு பெறவும் பார்ப்பனர் ஒரு வகையிலும், நீதிக்கட்சினர் ஒரு வகையிலும் முயற்சி செய்தனர். அரசு பற்றி இவர்களுக்குத் தேவையான அளவில் மட்டுமே புரிதல் இருந்தது. சமூகத்தில் தாழ்நிலையில் உள்ள வர்களின் நலத்திற்கென இவர்கள் பேசுவதில் வியப்பெதுவு மில்லை. பெரியாரின் சாதி ஒழிப்பு என்ற முழக்கம் பார்ப்பன ருக்கு எதிராக மட்டும் முனைந்திருந்ததை நாம் புரிந்துகொள்ள முடியும்இந்தியாவில் பிரிட்டனின்அடக்கு முறையின் விளைவாக பொதுவுடைமைக் கட்சி செயல்படாத நிலையில் பெரியார் ஏன் சமதர்மக் கோட்பாட்டின்படி செயல்படவில்லை. என்று கேட் பதில் பொருள் இல்லை. தொழிலாளர் கோரிக்கைகள் கூட அரசியலரங்கிற்கு மெல்லவே வந்து சேர்ந்தன. தொழிலாளர் களின் பொருளாதாரக் கோரிக்கைகளுக்கு இடையில் அரசியல் உணர்வும் வெளிப்பட்டது என்றுதான் சொல்ல முடியும். கூலி விவசாயிகள், குத்தகை விவசாயிகள், சிறு நிலக்கிழார்கள் இவர்களெல்லாம் ஒரு அரசியல் அமைப்பில் திரட்டப்பட்டு தமக்கென கோரிக்கைகளை முன்வைத்து செயல்படுவதற்கு காலம் அதிகமாகும். 1943 வாக்கில்தான் இக் கோரிக்கைகள் பெரிதாக எழுகின்றன. மார்க்சியரைப் பொருந்தவரை காங் கிரஸ் கட்சிக்குள் இணைந்து காங்கிரசை டலப்படுத்தியது ஒரு காலம். 42ல் ஏகாதிபத்தியத்தை காக்கப் புறப்பட்டது இன் னொரு காலம். நேருவின் கைகளைப் பலப்படுத்தக் கிளம்பியது இன்னொரு காலம். இவர்கள் தமக்கென உறுதியான கட்சி அமைத்துக் கொண்டதும் மக்களைத் திரட்டிப் போராட்டங் களை உருவாக்கியதும் வரலாற்றில் அரிய நிகழ்ச்சிகள். விவசாயிகளைக் காட்டிலும் தொழிலாளர்க்கு முதன்மை தந்ததும் ஒருவகைப் போக்கு. இப்படியெல்லாம் பல தவறுகள் நடந்தன. இவற்றுக்கிடையில் ஒவ்வொரு வட்டாரத்திலுள்ளும் கட்சி மனப்பான்மை, தலைவர் பற்று என கட்சிகளுக்குள்ளும் இறுக்கம் ஏற்பட்டிருந்தது. பகுத்தறிவு, சுயமரியாதை என்ற போக்குகள் தொடர்ந்து வளர்க்கப்படவில்லை. அதாவது

கடவுளாக்கம், புராணங்கள், இலக்கியங்கள், சடங்குகள் முதலியவற்றுக்குள் செலுத்தப்பட்ட சக்தியின் எல்லையின்மையைப் பகுத்தறிவு கண்டு கொள்ளவில்லை. தமிழரின் வரலாற்றுப் பெருமை என்ற பேச்சினுள் பகுத்தறிவு அடங்கி தற்பெருமை, ஆணவம் மேலோங்கின. இவையெல்லாம் ஆரோக்கியமான இயக்க வளர்ச்சிக்கு உதவியாக இல்லை.

இன்று நாம் நினைத்துப் பார்க்கும் பொழுது திராவிடர் கழகத்தினர், திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மக்கள் மத்தியில் தம் கருத்துக்களை உணர்வு பூர்வமாக உறுதியாக எடுத்துச் சென்ற அந்தக் காலச் சூழலில், அவர்கள் மேற் கொண்ட கடுமையான முயற்சிகள், அடி உதைகள், முதலி யவை, எந்த இயக்கத்தினரும் நினைத்துப் பெருமைப்படத் தக்க நிகழ்ச்சிகள். சமூகத்தின தாழ்நிலையிலிருந்த இவர்கள் உயர் நிலையிலுள்ள மேல் சாதியினரின் ஆதிக்க சக்திகளையும், தம் உள்ளூரில் பெரியவர்களையும், பெற்றோர்களையும் கூட எதிர்த்து இன்னல்களைத் தாங்கிச் செயல்பட்ட திறம் வியக்கத் தக்கது. இன்று தமிழ்நாடு முழுவதும் கடவுள் மறுப்பு முதலிய சில போக்குகள், சில பத்தாயிரம் பேர்களிடமாவது உறுதி யாகப் பதிந்துவிட்டதற்கு இந்த இயக்கத்தினர்தாம் காரணம். தேசிய இன உணர்ச்சியை இன்றும் இவர்கள் காப்பாற்றி வருகின்றனர். கலப்புத் திருமணம், விதவைத் திருமணம் போன்றவை சமூகத்தில் நடைமுறை ஆகிவிடு வதற்கும் இந்த இயக்கத்தினர் காரணம். இந்தியாவில் தமிழகத்தின் வரலாறு தனித்தன்மை உடையது என்பதை இவர்கள் இன்றும் நிரூபித்து வருகின் றனர். இத்தகைய உணர்வுகளை ஒதுக்கி வைத்துவிட்டு அல்லது மறுத்துவிட்டு பொதுவுடைமை இயக்கம் இங்கு வேர்கொள்ள இயலாது. பொதுவுடைமை இயக்கத்தின் சில போக்குகளை திராவிட இயக்கத்தினர் விமர்சனம் செய்தபோது பொதுவுடைமை இயக்கத்தினர் தம்மைத் திருத்தியிருக்க முடியும். திராவிட இயக்கத்தினரில் பெரும்பாலானவர் சமூகத்தில் தாழ்நிலையில் உள்ளவர்கள். இவர்களிடத்தில் பகைமைக்கு இடமே இல்லை. என்ன இருந்தாலும் இவர்க ளைப்பொருத்தவரை மார்க்சியம் என்பது அந்நியக் கோட்பாடு. அந்நியநாடு, நபர்களின் பெயர்கள் தத்துவத்தின் பெயர்கள் எல் லாம் இவர்களைப் பொருத்தவரை அந்நியத்தன்மை உடை யவை, பெரியார் ஒரு நாட்டுப்புறப் பெரியவர் மாதிரி இவர்களுக்

ருக்காட்டி தந்தார். அவரது அன்பு நெருங்கிச் செல்லும் எவரையும் ஆட்கொள்ளக் கூடியது. அவரது மொழி நடையும் வேடிக்கையும் எல்லோரையும் கவரக்கூடியவை. ஆயிரக்கணக்கான இளைஞர்கள் சமூகத்தின் முன்னணிக்கு வர இவர் காரணம். நீதிமன்றத்திலும் அரசு அதிகாரத்திலும் தாழ்த்தப்பட்ட பலர் இடம் பெறுவதற்கு இவரே காரணம். காங்கிரஸ் கட்சியையும் திராவிட முன்னேற்றக் கழகத்தினையும் நெருங்கி இருந்து இப்படி பல காரியங்களை அவர் சாதித்துக் கொடுத்தார். இவை என்றும் மறக்கக்கூடியவை அல்ல. தாழ்த்தப்பட்ட சமூகம், அரசியலில் தலைமைக்கு வரும் அற்புத நிகழ்வுக்கு இவர் காரணம். இதனால் பல தவறுகள் ஏற்பட்டன என்று மார்க்சியர் செய்யும் விமர்சனத்தில் தவறு இல்லை. ஒரு வரலாற்றுக் கட்டத்தில் எவர் முன்வந்து மக்களைத் திரட்டி இயக்குகிறாரோ அவர் நெறியில் சில சாதனைகள் நடைபெறத் தான் செய்யும்.

5. பெரியார் இயக்கம் பற்றிய ஆய்வில் மார்க்சிய நெறி சரியான முறையில் செலுத்தப்படவில்லை என்பதை நாம் கவனிக்க வேண்டும். வரலாற்றுச் சூழலுக்கேற்றவாறு எந்த மக்கட் பிரிவு, அரசியல் உணர்வு பெற்று இயக்கம் உருவாக்குகிறதோ, அதன் தேவைக்கும் திறனுக்கும் ஏற்ற அளவில்தான் இயக்கங்கள் உருவாகும். இதிலுள்ள இரண்டு கூறுகள் முக்கியமானவை. ஒன்று, வரலாற்றுச் சூழல், இரண்டு, இயக்கத்தை உருவாக்கும் மக்கட்பிரிவு. இந்த அடிப்படையை ஒதுக்கிவிட்டு, ஒரு வரலாற்றுக் கூட்டம் முழுவதையும் ஒரே நோக்கில் பார்த்துவிட இயலாது. திராவிடர் கழகம் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறு இயக்கங்களை நடத்தியது. இவற்றுக்கான வரலாற்றுச் சூழலில் வைத்துத்தான் இயக்கங்களை விளக்க வேண்டும். பார்ப்பனிய எதிர்ப்பு இயக்கம் ஒரு முக்கியமான இயக்கம். வகுப்புவாரி கோரிக்கை இன்னொரு இயக்கம். திராவிட நாட்டுக் கோரிக்கை, இந்தி எதிர்ப்பு ஆகியவை பிற கோரிக்கைகள். கடவுள் மத எதிர்ப்பு என்ற முறையில் விநாயகர் சிலை உடைக்கப்பட்டது. 'பிராமணாள் கிளப்' என்ற பெயரை மாற்றுவதற்கு தீவிரமான இயக்கம் நடைபெற்றது. 'கீமாயணம்' நாடகம் தடை செய்யப்பட்ட போது எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. ராமலீலாவுக்கு எதிர்ப்பு. சேலத்தில் இராமன் படத்திற்கு இழிவு. இப்படி எத்தனையோ எதிர்ப்பியக்கங்கள். இவற்றைப்பற்றி இன்று மார்க்சியர் அக்கறையோடு ஆய்வதில்லை.

பெரியார் வெளியிட்ட மத எதிர்ப்பு பற்றிய கருத்துக்களெல்லாம் பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் வெளிவந்த இயந்திரவியல் பொருள் முதல்வாதக் கருத்துக்கள் என்றும், வரலாற்றுப் பொருள் முதலியல் வளர்ந்த நிலையில் பெரியார் வெளியிட்ட கருத்துக்கள் தவறானவையென்றும் மார்க்சியர் விமர்சனம்செய்கின்றனர். ஐரோப்பாவில் பதினெட்டாம் நூற்றாண்டுச் சூழலும்தமிழ்நாட்டில் பெரியார் காலச் சூழலும் சில அம்சங்களில் ஒத்தவை. பெரியார் தம் காலத்தில் நிலவிய மதப் போக்குகளுக்கும், மூடநம்பிக்கைகள் சடங்குகளுக்கும் எதிராக வெளியிட்ட கருத்துக்கள் அன்றைய சூழலில் முற்போக்கானவை. நிலவுடைமை முறையைத் தகர்த்தாலொழிய அல்லது முதலாளிய முறையைத் தகர்த்தாலொழிய சாதி மதங்கள் ஒழியா. கடவுளை ஒழிக்க முடியாது. என்பது உண்மைதான். மார்க்சு கூறியவாறு, ‘கைகளைப் பிணித்துள்ள விலங்குகளை மறைத்துள்ள அழகிய மலர்களைப் பிடுங்கி எறிவது மாதிரி’ என்று பெரியார் முன்வைத்த விமர்சனங்களை மார்க்சியர் பார்த்திருக்க வேண்டும். மலர்களைப் பறித்தெறியும் போது கைவிலங்குகள் புலப்படுவது மாதிரி பொருளியல், சுரண்டல், நிலவுடைமை, முதலாளியம், ஏகாதிபத்தியம் ஆகியவை புலப்படும். பெரியார் முகாமும், மார்க்சிய முகாமும் எதிர்த் திசைகளில் செயல்பட்ட போது சுரண்டல் சக்திகளுக்கெதிரான போராட்டம் கூர்மைப்படவில்லை. அல்லது போராட்டம் சரியான திசையில் உருவாகவில்லை. இதன் மூலமும் சுரண்டல் சக்திகள் பாதுகாக்கப்பட்டன. அரசுடைமையாக்கம் என்ற முழக்கம் சோசலிசம் எனக் கருதப்பட்ட நிலையில் தொழிலாளர்களுக்கு மத்தியில் கூலி உயர்வு, போனஸ், வேலை நிறுத்தம் என்பதற்காகப் பல்வேறு போராட்டங்கள் நடத்தி முடித்தபிறகு தான், தொழிற்சாலைகளை தேச உடைமையாக்க வேண்டும் என்ற கோரிக்கை முன்னுக்கு வரும். அதுபோல பண்ணை நிலங்களில் விவசாயக் கூலிகளுக்கு சாட்டையடியை ஒழித்தல், சாணிப்பாலை குடிக்க வைத்தலை ஒழித்தல் என்ற தண்டனைகளை ஒழித்து, அப்புறம் குத்தகை விவசாயிகள் பிரச்சினைகள் பேசப்பட்டு, அதன்பிறகுதான் நிலச்சீர்திருத்தம் என்ற பிரச்சினை முன்னுக்கு வருகிறது. கூட்டுப்பண்ணை என்ற பிரச்சினை ஒரு காலத்தில் பேசப்பட்டது. கோயில் நிலங்களை உழைப்பாளிகளுக்கு உரிமைப்படுத்தல் இதுவரை நடைபெறவில்லை. இப்படி எல்லாம் தொழிலாளர் மத்தியில், உழவர்கள் மத்தியில், பிரச்சினைகளை நோக்கி இயக்கங்களை நடத்தி அவர்களை ஒன்று திரட்டி, அவர்களுக்கு அரசியல் உணர்வை

ஏற்படுத்தி-கூடவே வர்க்க உணர்வை ஏற்படுத்தி-இம்முறையில் தான் செயல்பட வேண்டி இருக்கிறது. ஒரே நாளில் ஒரே கட்டத்தில் இது சாதிக்கப்படுவது இல்லை. ஆட்சியைப் பிடிப்பதற்கென கட்சிகள் இடையில் செய்யும் சாகசங்களையும், சாதிகளுக்கிடையில் ஏற்படுத்தும் மோதல்களையும் வைத்துப் பார்க்கும் பொழுது, மக்களுக்கு அரசியல் உணர்வு ஏற்படுவதில் பலதடைகள் இருப்பது தெரியும். 1967க்குப் பின்னர்தான் மார்க்சிய இயக்கத்தினரே கூட அரசுடைமையாக்கம் என்பது சோசலிசம் அல்ல என்பதைப் புரிந்து கொண்டனர். தொழிற் சங்க இயக்கம் என்பது பொருளாதாரப் போராட்டத்திற்கான இயக்கம் என்பதையும், நிலச்சீர்திருத்த இயக்கம் என்பது உழவுத் துறையில் முதலாளியத்தை ஏற்படுத்துவதுதான் என்பதையும் புரிந்து கொண்டனர். இப்படிப் புரிந்து கொண்டவர்கள் புரட்சியாளர்கள். புரட்சியாளர்களின் மார்க்சிய நிலைபாட்டிலிருந்துதான் இப்பொழுது திராவிட இயக்கங்கள் பற்றிய விமர்சனங்கள் முன் வைக்கப்படுகின்றன. ஆனால் வரலாற்றுச் சூழலை மறுத்து இந்த விமர்சனங்கள் எழுந்துள்ளன. இம்முறையில் இந்த விமர்சனங்கள் வரலாற்றுப் பொருள் முதல்வாத அணுகுமுறையிலிருந்து தவறி விடுகின்றன. முன்னைய மார்க்சியரின் திருத்தல்வாதப் போக்குகளை விமர்சனம் செய்யும் புரட்சியாளர்கள் பெரியாரியக்கத்தை, தோழமை இயக்கமாக மதிப்பிட முடியும்.

6. திராவிடர் நாகரிகம், தமிழ் இலக்கியம், தமிழின் தொன்மை முதலிய பேச்சுக்கள் 19ம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டிலும் எழுந்ததற்கான காரணங்கள் முக்கியமானவை. பழமையைப் புதுப்பித்தல் என்று இந்தப் போக்கு திறனாய்வுக்கு உட்படுத்தப்பட்டாலும் இதன் நிகழ் காலத் தேவையும் எதிர்காலத் தேவையும் குறிப்பிடத்தக்கவை. பழமை பற்றிய பேச்சு இப்படி நிகழ்காலத் தேவையை ஒட்டித் தான் எழுகிறது. நிகழ்கால நோக்கில்தான் வரலாற்றாய்வுகள் செய்யப்படுகின்றன என்பது உண்மை. பழைய வரலாற்றில் நிகழ்வுகள் எத்தகையனவாக இருந்தபோதிலும் நிகழ்காலத் தேவைகளையொட்டியே பழைய வரலாறு பொருள்படுத்தப் படுகிறது. ஆகவே திராவிடர் என்று பேசுவதற்கும் தமிழர் நாகரிகப் பெருமை பேசுவதற்கும் போதுமான ஆதாரங்கள் முன்னைய வரலாற்றில் இல்லை என்று மார்க்சிய கட்சியினர் விளக்க முனைவது, வரலாறு எப்படி பொருள் படுத்தப் படுகிறது என்று அறிய இயலாத நிலையைத்தான் வெளிப்

படுத்தும். மார்க்சியம் வர்க்கப் போராட்ட அடிப்படையிலேயே வரலாற்றைப் பார்க்கிறது என்ற உண்மையைத் தமிழகத்தில் மார்க்சியர் எப்படி வரலாற்றாய்வுக்கு பயன்படுத்தினர் என்பதை வைத்துப் பார்க்கும்பொழுது நமக்குத் தெளிவாகத் தெரிவது. இவர்களும் நிகழ்காலத் தேவையை ஒட்டித்தான் முன்னைய வரலாற்றை மதிப்பிடுகிறார்கள் என்பதாகும். திராவிடர் என்ற பேச்சு இவர்களைப் பொருத்தவரை இனம் பற்றிய பேச்சு. ஆகவே இது இவர்களுக்கு உடன்பாடில்லை. இப்படியே தமிழர் பற்றிய பேச்சும். முன்னைய சமூக நிலைகளில் தேசிய இனம் என்று ஒன்று தோன்றவில்லை என்பது இவர்கள் கருத்து.

இன்று நிதானமாகப் பார்க்கும் பொழுது, ஒரு சாரார் மற்றொரு சாராரை மறுப்பதிலும் எதிர்ப்பதிலும் காட்டிய தீவிரத்தின்போது, உண்மை கைநழுவிப் போய் இருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். 1934-க்குப் பிறகு பெரியாரின் போக்கில் ஏற்பட்ட மாற்றம் நாம் புரிந்து கொள்ளக் கூடியதுதான். பிரிட்டிஷ் அரசு அடக்குமுறையின் பின்னணியில் தான் இந்த மாற்றம் நிகழ்ந்தது. வர்க்கமா, சாதியா எதை ஆதாரமாக்கி வரலாற்றை விளக்குவது என்பதிலேயே இரு வட்டத்திலும் விவாதங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. சாதிவரலாறு என்னதான் நுட்பமான முறையில் ஆய்வுக்குட்படுத்தினாலும் நமக்கு ஏற்படும் தெளிவைவிட குழப்பம்தான் அதிகரிக்கிறது. இந்தியாவில் வர்க்கம் என்ற முறையில் சமூகப்பிரிவைப் பொருள்படுத்துவதிலும் நமக்குத் தெளிவு ஏற்படவில்லை. நமக்கு என்று சொல்லும்பொழுது, மார்க்சியர் அனைவரையும் உட்படுத்தித்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. சாதி என்றவுடன் அருவருப்பாகப் பார்க்க வேண்டியதுமில்லை.

எப்படி இருந்தாலும் சில உண்மைகள் நமக்குத் தெளிவாகப் புலப்படுகின்றன. நம் அண்மைக்கால வரலாற்றில் நவீன காலனி ஆதிக்கம் இந்தியாவில் எல்லாக் களங்களிலும் கடுமையான முறையில் சுரண்டலை மேற்கொண்டிருப்பது தெரிகிறது. சமூகத்தில் உயர் மட்டங்களில் உள்ள சக்திகள் மூலம் காலனி ஆதிக்கம், கீழ் மட்டங்களில் உள்ள சமூகப் பிரிவினரை கடுமையாகச் சுரண்டுகிறது. கிராமங்களில் பசுமைப்புரட்சி என்ற பெயரில் காலனி ஆதிக்கச் சுரண்டல் நடைபெறுகிறது. தொழில் வளர்ச்சி என்ற பெயரில் இந்தியாவின் இயற்கை

ளங்கள் கடுமையான கண்டனத்துக்கு உள்ளாகின்றன. நவீன விஞ்ஞானம், தொழில் நுட்பங்கள், இந்தக் கண்டனத்தை எல்லாத் துறைகளிலும் நடத்துகின்றன. இந்தப் போக்கில் தொழிலாளர்கள், நடுத்தர வர்க்கத்தினர், அறிவு ஜீவிகள் ஆகிய பல சமூகப் பிரிவினரும் கண்டனத்துக்கு உள்ளாகின்றனர். நவீன நாகரிகம் இப்பிரிவினர்களையும், இவர்களுக்கு மேல் உள்ளவர்களையும் பொருமை கலந்ததாக இருக்கிறது. இவர்களின் நுகர்வுத் தேவைகள் நாளுக்கு நாள் பெருகுகின்றன. வசதிகளும் பொழுதுபோக்குச் சாதனங்களும் நாளுக்கு நாள் அதிகரிக்கின்றன. இன்பத் தேவைக்காகவும், எதிர்காலப் பாதுகாப்புக்காகவும் எவ்வளவு நிதியைத் திரட்ட முடியுமோ, அவ்வளவையும் இவர்கள் செய்கின்றனர். போக்குவரத்துச் சாதனங்கள், செய்தித் தொடர்பு சாதனங்கள், ஆடம்பரப் பொருட்கள், நவீன முறையிலான கட்டடங்கள் பெருகுகின்றன. இந்தப் போக்குகள் அனைத்தும் தெளிவாக்கும் உண்மை, இந்தப் போக்குகளுக்குத் தேவையான மிகை உற்பத்தியை சமூகத்தின் கீழ்மட்டங்களில் உள்ளவர்களிடம் இருந்துதான் பெற்றாக வேண்டும்.

இந்தச் சூழலில்தான தாழ்த்தப்பட்டவர்களை மேலும் மேலும் சுரண்டுவதற்காக தாழ்த்தப்பட்டவர்கள் மீது கடுமையான அடக்குமுறையைத் திணிக்க வேண்டியிருக்கிறது. ஆளும் வர்க்கங்கள் தம் பாதுகாப்புக்காக மக்கள் மத்தியில் சாதி, மதப் பிரச்சினைகளை உருவாக்க வேண்டியிருக்கிறது. உழைக்கும் மக்கள் இப்படி அடித்துக் கொண்டால்தான் இதற்காக காவல் துறை, சட்டம், ராணுவம் முதலியவற்றைப் பயன்படுத்திக் கொண்டு சமூகத்தின் மேல்தட்டிலுள்ளவர்கள் 'அமைதி'யாக வாழ முடியும். ஏற்கனவே தேர்தலுக்காக, கட்சி நலன்களுக்காக, சாதி உணர்வை பயன்படுத்திக் கொள்வதோடு இந்தப் போக்கும் சேர்ந்து கொள்கிறது. அண்மைக் காலத்தில் மதக் கலவரங்கள் பெருகுவதும் இதனால்தான். ஏற்கனவே அரசியல் சட்டப்படி கொடுக்கப்பட்ட சிறுபான்மையினருக்கான தனி உரிமைகளும், தவிர்க்க இயலாதபடி இன்னும் நிலைத்திருக்கிற இட ஒதுக்கல் பிரச்சினையும் இவற்றோடு நாம் சேர்த்துப் பார்க்க வேண்டும்.

முன்காலத்தில் சாதி மதப் பிரச்சினைகள் இப்படித்தான் உருவாக்கப்பட்டுள்ளன. இதே பார்வையைச் சற்று விரித்துப் பார்க்க முடியுமானால் பிரிட்டிஷாரின் ஆதிக்கக் காலத்திலும்

இப்படித்தான் நிகழ்ந்திருக்க முடியும் என்பதை நாம் புரிந்து கொள்கிறோம். இந்தியாவிற்குள் வணிகத்திற்காக வந்து இந்தியாவின் செல்வங்களைத் தொடர்ந்து கொள்ளை அடித்து, அப்புறம் அரசமைத்துக் கொண்ட பிரிட்டிஷார் திட்ட மிட்டு இந்தியாவின் தொழில், வேளாண்மை, கல்வி முதலிய வற்றை நாசப்படுத்தினர். ஜமீன்தாரி, ரயத்துவாரி முறைகளை ஏற்படுத்தினர். கிராமப்புறங்களில் உடைமை முறையில் பெரும் மாற்றங்களைக் கொண்டு வந்தனர். வாழ்வுக்காக மக்கள் கடுமையாகப் போராட வேண்டி இருந்தது. ஜமீன்தாரி மட்டு மல்லாமல் நிலக்கிழார்கள், வணிகர்கள், லேவாதேவிக்காரர்கள், அரசு அதிகாரிகள், சுரண்டலைத் தொடர்ந்து நடத்தினர். மிததிப்படுத்தினர். பழைய சமூகமுறை உடைந்த இந்தச் சூழலில் ஏற்றத்தாழ்வு அதிகரித்திருக்கும். தாழ்ந்த நிலையி லுள்ள மக்கள் தம் வாழ்வை காப்பாற்றிக் கொள்ள எதிர்ப்பைக் காட்டும் பொழுதெல்லாம் அடக்குமுறை அதிகரித்திருக்கும். சாதிப் பிரச்சினை முக்கியமான பிரச்சினையானதற்கு இந்தச் சூழல் காரணம். ஆங்கிலேயர் வருகைக்கு முன் இருந்த சமூக நிலைமைகளில் சாதிப் பிரச்சினை எந்த எந்த வடிவங்களில் வெளிப்பட்டன என்பதையும், ஏற்கனவே நாம் பார்த்த ஒரு காரணத்தை, முன்னைய சமூகச் சூழல்களுக்கும் பொருத்த முடியுமா என்பதையும் நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். எந்தச் சமூகச் சூழலுக்கும் பொருந்தக் கூடியதாக சுரண்டலுக் கான அடக்குமுறை என்ற காரணத்தை நாம் கூறமுடியும். 'அமைதியாக' இருந்ததெனச் சொல்லப்படும் ஆசிய உற்பத்தி முறையோடு கூடிய கிராமச் சமூகங்களிலும் இந்த அடக்கு முறை தொடர்ந்து நிலவியிருக்கும். ஒவ்வொரு முறையும் புதிய மன்னர் பரம்பரைகள் தோன்றி தம் ஆதிக்கத்தை நிலை நிறுத்தும்பொழுதெல்லாம் சுரண்டலும் அடக்குமுறையும் அதிகரித்திருக்கும். சாதியமுறை என்பது சமுதாயத்தை நிர்வகிப்பதற்கான ஒரு முறையாக இந்தியாவில் நிலவி வந்திருப்பதை நாம் ஒப்புக் கொள்ள முடியும்.

7. தி.க. இயக்கத்தவரும் மார்க்சியரும் விவாதிக்கும் பொழுது சிலவற்றை தமக்கே புலப்படாமல் மறைத்து விடுகின் றனர். அவற்றுள் சிலவற்றை இங்கு குறிப்பிடலாம். திராவிட இயக்கத்தவர் அறுபதாண்டுகளாக, கடவுள் மத எதிர்ப்புப் பிரச்சாரங்களைச் செய்து வந்த போதிலும் இன்று கோயில் களுக்குச் செல்பவர் தொகை பல மடங்கு அதிகரித்திருக்கிறது ஏன் என்பது மார்க்சியரின் கேள்வி. இப்படி அதிகரித்திருப்பதில்

தமக்குப் பங்கில்லை என்பது போல மார்க்சியர் பேசுகின்றனர். தனி உடைமைக் கொடுமைகள், முதலாளியம் என்ற பெயரில், ஏகாதிபத்தியம் என்ற பெயரில் அரசு அதிகாரம் என்ற பெயரில் கடந்த சில பத்து ஆண்டுகளில் பலமடங்கு அதிகரித்திருக் கின்றன. இதனால் மத்தியதர வர்க்கத்தவரும் உழைக்கும் மக்களும் சமூக நிறுவனங்களிலிருந்தும் இயற்கையிலிருந்தும் இறுதியாகத் தம்மிலிருந்தும் அந்நியப்பட்ட நிலையில் பலவகை யான துன்பங்களுக்கும் வேதனைகளுக்கும் மனநோய்களுக்கும் ஆட்பட்டுள்ளனர். இந்த அவலநிலைகளை மாற்றக்கூடிய நம்பிக்கை தரத்தக்க புரட்சிகர சக்திகள் குறைந்த அளவுகூட உருவாகவில்லை. இந்நிலையில் கடவுள் நம்பிக்கை, சித்து வேலைகள் செய்யும் சாமியார்களைப் பற்றிய நம்பிக்கை அதிகரிக்கத்தான் செய்யும். சமூகத்தில் நிகழ்ந்துள்ள அந்நிய மாதலின் விளைவுகள் ஆளும் சக்திகளையும் பாதிக்கத்தான் செய்திருக்கின்றன. ஆகவே அவர்களும் கடவுளர்களையும் சாமியார்களையும் நம்பிக் கிடக்கின்றனர். தனி உடைமை ஒழிந்தால்தான் மக்களிடம் மத நம்பிக்கை ஒழியும் என்று திராவிட இயக்கத்தவருக்கு அறிவுரை சொல்லும் மார்க்சியர் இந்தியாவில் தனி உடைமை ஒழிப்பில் இதுவரை படுதோல்வி கண்டிருக்கின்றனர்.

சோவியத் யூனியனில் தனி உடைமை ஒழிக்கப்பட்டதில் கடவுள் நம்பிக்கை, மத நம்பிக்கை ஆகியவை அடியோடு ஒழிந்துவிட்டன என்று மார்க்சியர் கூறிவந்தனர். அண்மைக் காலத்தில் சோவியத் யூனியனில் கோவில்கள் திறந்துவிடப்பட்ட செய்தியை இவர்களும் அறிவர்.

இப்பொழுது சோவியத் யூனியன் பற்றிய பொய்யை உரக்கச் சொல்ல முடியாது. முன்னர் கோவில்கள் அடைக்கப் பட்டிருந்த காலத்திலும் மக்களின் மத நம்பிக்கை அழிந்து விடவில்லை என்பதை இவர்கள் இன்று மறைக்க முடியாது. இப்படி இவர்கள் பொய் சொல்வதற்குக் காரணம் சோவியத் யூனியனில் நடைபெறுவது சோசலிசம். அங்கு அந்நியமாத லுக்கு இடமில்லை என்று இவர்கள் நம்பியதுதான். 'அந்நிய மாதல்' என்றாலே உடைமைவாதிகளின் கோட்பாடு என்று இவர்கள் எண்ணினர். மார்க்ஸ் அந்நியமாதலைப் பற்றிப் பேசியதை இவர்கள் இளம் மார்க்சின் கருத்துக்கள் என

குறைத்து மதிப்பிட்டனர். அரசு இருக்கும்வரை மதமும் இருக்கும் என்று மார்க்ஸ் கூறியதை இவர்கள் ஏற்கவில்லை. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமும் ஒரு அரசு முறை; அதிலும் அடக்குமுறை தொடரும்; வர்க்கப் போராட்டம் தொடரும் என்பதை இவர்கள் ஏற்கவில்லை. சுருக்கமாகச் சொன்னால், மார்க்சியத்தை அதற்குரிய நுட்பங்களோடு இவர்கள் பயிலவில்லை.

முதலாளியம் வளர்ந்துவரும் போது, சாதிகள் ஒழியும் என்று மார்க்சியர் பொதுப்படையாகப் பேசுகின்றனர். தொழில் வளர்ச்சி பெறும் நகரங்களைப் பொருத்தவரை இந்த உண்மை குறைந்த அளவில் பொருந்தக் கூடியதுதான். ஆயினும் சாதி உணர்வு மங்குவதில்லை என்பதும் யதார்த்தம். தவிர தொழிற் சங்கப் போராட்டங்களும் அரசியல் போராட்டங்களும் தொடர்ந்து தீவிரப்படும் பொழுது, சாதி உணர்வுகள் மேலும் மேலும் மங்கும். ஆனால் போராட்டங்கள் ஒழிந்து, தொழிற் சங்கமும் கட்சியும் நிறுவனங்களாகி, முதலாளியத்தோடு ஒத்துழைத்து மாதந்தோறும் சந்தா வசூலிப்பதில் கவனம் செலுத்தி, இப்படி தேக்கம் நிலவும்போது சாதி உணர்வுகள் மீண்டும் தழைக்கும். குறைந்த அளவிலேனும், மக்கள் திரள்வது என்ற முறையில் சாதிச் சங்கங்கள் உயிர்ப்பிக்கப்படும். சமூகத் தில் தமக்கு மறுக்கப்படும் உரிமைகளுக்கான குரலை, சாதிச் சங்கங்கள் கரகரத்த குரலிலேனும் ஒழிக்கும்; சாதிச் சங்கங்களும், மத அமைப்புகளும் பல்கிப் பெருகும் நிலைக்கு அரசியல் கட்சிகள், தொழிற்சங்க இயக்கங்கள் பொறுப்பேற்க வேண்டும். ஆனால் இது நடைமுறையில் இல்லை.

இப்படியெல்லாம் ஆழமாகப் பார்க்கும்பொழுது மேலும் சில உண்மைகள் நமக்குத் தெரியவருகின்றன. மார்க்சியம் என்ற மாபெரும் தத்துவமும், நடைமுறையும் இங்கு பெரியார் இயக்கத்தின் மூலமும், பெரியார் இயக்கத்தைத் தனக்குள் செரித்துக் கொண்டும், பெரியார் இயக்கத்தைக் கடந்தும் வளர்ந்திருக்க முடியும். இந்த இருவகை இயக்கங்களுக்கிடை யில் பகைமை ஏற்பட்டிருப்பது வரலாற்றில் ஒரு கோளாறு. இந்தப் பகைமை, ஆதிக்க சக்திகளுக்கு வலிமை தரக்கூடியது. அரசு அதிகாரத்தோடு அல்லது ஆதிக்க சக்திகளோடு ஒத்துச் செல்லும் பொழுதெல்லாம் இவ்விருவகை இயக்கங்களும் வலிமை இழக்கின்றன. மக்களின் விடுதலையை நோக்கி முன்னேறுவதற்குப் பதிலாக, மக்களுக்குச் சுமையாகின்றன.

இதை மறைப்பதற்காகத்தான் இவ்விரு இயக்கங்களும் வெட்டி விவாதங்களில் ஈடுபடுகின்றன. இந்த விவாதங்களில் அறிவு வளர்வதற்கு மாறாக அமுக்கப்படுகிறது. தலைவர் பெருமையும் கட்சி வெறியும் பெரிதாக முழக்கப்படுவதால் தொண்டர்களின் சுய அறிவு சிறுத்து முடங்கிப் போகிறது. இந்த வர்க்க வேறு பாடுகள், சாதி வேறுபாடுகள் மறைவதில்லை. இவை வேறு திசைகளில் திருப்பப்படுகின்றன. திராவிடர் இயக்கம் பிராமண ருக்கு எதிராக நிற்கும் போதும், ஆவேசம் கொள்ளும் பொழுதும் சாதி இந்துக்களுக்குத் துணையாகத்தான் செயல்படுகிறது. இந்தச் செயல்பாடு தாழ்த்தப்பட்டவர்களுக்கு எதிரானதுதான். அதுபோல வர்க்கப் போராட்டத்தில் மார்க்சியர் தீவிரம் கொள்ளாதபொழுது தங்களுக்குள் இருக்கும் சாதிய உணர்வை அழித்துக் கொள்ள இயலாது. தாழ்த்தப்பட்டவர்களை இவர் களும்தான் அமுக்கி வைக்கிறார்கள். தமக்குள் இருக்கும் சாதிய உணர்வை இவர்களும் கண்டு கொள்வதில்லை. சாதி என்றும் வர்க்கம் என்றும் வெட்டிப் பேச்சுக்களையே முழக்கும் போது மனிதனைப் பற்றி முழுமையான பார்வையை இழந்து விடுகிறோம். இந்தப் பார்வையை, தத்துவரீதியான பார்வை என்றும் சொல்லலாம். மனிதனை வரலாற்றிலும் சமூக இயக்கத் திலும் வைத்துப் பார்க்கும் பார்வை இது. மனிதனுக்குள் ஆழப் புகுந்து அவன் வரலாற்றோடும், சமூகத்தோடும் இயற்கை யோடும் இணைந்திருப்பதைக் கண்டறியும் பார்வை இது. இந்த இடை உறவுகள் எவ்வளவுதான் வெட்டப்பட்டாலும் மீண்டும் மீண்டும் இவற்றைக் கடந்து, இவற்றை அகற்றிக் கொண்டு மனிதன் மீண்டும் தழைக்கிறான். காயங்கள் மனிதனைப் பூண்டோடு அழிப்பதில்லை. இந்தக் காயங்களி லிருந்தும் மனிதன் தழைக்கிறான். விடுதலை என்பது எப்பொழு துமே மனித வரலாற்றின் உள்ளடக்கம். முற்றான விடுதலையை நோக்கித்தான் மனிதன் இயங்குகிறான். தளைகளைத் தகர்க் கும் போதெல்லாம், மனிதன் தன் விடுதலையைப் பிரகடனம் செய்கிறான். அடக்குமுறை இவனை அமுக்கும் காலங்களில் தனக்குள் ஆழ்ந்து சென்று மனித, சமூகத்தின் ஒருமையினைக் கண்டு அதைத் தனக்குள் நிறைத்துக் கொண்டு, சமூகத்தின் ஆற்றலை தனக்குள் திரட்டிக் கொண்டு, மீண்டும் ஆற்ற லுடன் வெளிப்படுகிறான். இந்த இயக்கம் முடிவில்லாதது.

இப்படி மனிதனைப் பற்றிய முழுமையான பார்வையை வளர்த்துக் கொள்ளாத காரணத்தால இரண்டு இயக்கங்களும் பல வகையான தவறுகளை, குறைகளைக் கொள்கின்றன.

திராவிட இயக்கத்தின் இவ்வகைக் குறைபாடுகளில் ஒன்று, மனிதனுக்குள் இருக்கும் கலைஞனைக் கண்டு கொள்ளாதது. இதனால்தான் சங்க இலக்கியத்தையும் சிலப்பதிகாரத்தையும் திருக்குறளையும் திராவிட இயக்கத்தவர் புரிந்து கொள்ளாதது. இதுபோலவே, புராணங்களையும் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. இலக்கியத்தின் இயக்கம் என்னவென்று அறியவில்லை. இதனால் நல்ல கலைஞர்களை-இலக்கிய வாதிகளை, இசைக் கலைஞர்களை, ஓவியர்களை, திறனாய் வாளர்களை இவர்கள் தோற்றுவிக்கவில்லை. பாரதிதாசன் ஒரு பெரும் விதிவிலக்கு. பாரதிதாசன் தோற்றம் ஒரு 'அற்புதம்' என்று சொல்லத்தக்க அளவில் விதிவிலக்கு. திராவிட இயக்கத் தைப் போலவே, மார்க்சியரிடத்தில் கலை பற்றிய பார்வையில் பல குறைகள் இருந்த போதிலும் இவர்கள் தமிழகத்தைப் பொருத்தவரை, செய்ய வேண்டிய அளவுக்குச் சாதனை களைச் செய்யவில்லை. வரலாற்றாய்வில், அரசியல் அணுகு முறையில் இவர்களின் திறம் பாராட்டத்தக்கது. இவற்றிலும் குறைகள் உண்டு. எனினும் மனிதனின் வரலாற்று வகை யிலான- சமூக வகையிலான ஆக்கத்தில், படைப்பில் பொது வாக எல்லா மார்க்சியரும் கொண்டுள்ள ஈடுபாடு இவர்களைப் பெரிதும் முடமாக்காமல் வைத்திருக்கிறது. உளவியல் ஆய்வில் மார்க்சியர்களுக்கு போதுமான அக்கறை இல்லை. இதன் ஒரு விளைவு, தமக்குள் சாதி எப்படி இயங்குகிறது என்பதைக் கண்டு கொள்ளாமல் இருப்பது. தமக்குள் முதலாளியம் எத்தனையோ வடிவங்களில் ஆட்சி புரிவதை இவர்கள் கண்டு கொள்ளாதது போலவே, சாதியும் தமக்குள் ஆளுகை செலுத்து வதை இவர்கள் கண்டு கொள்ளவில்லை.

8. தமிழ்நாட்டில் சரியான மார்க்சியப் பார்வையோடு மார்க்சியர் இயங்கி இருந்தால் திராவிட இயக்கத்தவரின் பகுத்தறிவுப் பார்வையை மேலும் சில திசைகளில் வளர்த் திருக்க இயலும். அவர்களின் பகுத்தறிவு, இயங்கியல் முறை யில் இயங்கி வரலாற்றாய்வோடு இணைந்திருக்கும். தமிழர் களின் படைப்புத் திறனை உயர்த்தியிருக்கும். இவ்வகையில் மார்க்சியம் செயல்பட்டிருந்தால் தனது வறட்டுத்தனமான வரலாற்றுப் பார்வையையும் களைந்திருக்க முடியும். இன்று பார்க்கும் பொழுது மார்க்சியரின் பொருள்முதல்வாதம் திராவிட இயக்கத்தவரின் நாத்திகவாத அளவிலேயே நின்று விட்டதை நாம் காண முடியும். இதன் தொடர்ந்த விளைவுகளில் ஒன்றுதான் தமிழ்நாட்டில் தத்துவம் காய்ந்து போனது. அநேக

மாக முதலாளியத்தின் வக்கிரமான வெற்றிகளுக்கிடையில் இரு சார்பினரின் தத்துவங்களும் வெறும் பொருள், அதிகாரம், ஆணவம், இன்பம் என்ற அளவிலேயே முடங்கியிருக்கின்றன. இவ்விரண்டு சாராரும் முதலாளியத்தின் வெற்றியை தம் முழக்கங்கள் மூலம் வெளிப்படுத்தியிருக்கின்றனர். இவர்கள் ஒருசில அடிகள் முன்னேறிவிட்டதாக மார் தட்டிக் கொள்ளும் பொழுது இவர்களை வெற்றிகொண்டு, தமக்குச் சேவகம் புரியத்தக்க 'வீரர்'களாக உருவாக்கியதற்காக முதலாளியம் பெருமைப்பட்டுக் கொள்ள முடியும். இவர்களின் கண்கள் என்று திறக்கும்? என்பதற்கு இதுவரை தடயங்கள் புலப்படவில்லை என்பதுதான் நம் நிலைமை. முதலாளியம் தன் தேவைகளுக் கேற்றவாறு இன்னும் இவர்களைக் குறுக்கவும் தரிக்கவும் இயலும். இவர்களைத்தான் நாம் இன்னும் நம்பியிருக்கிறோம். நமக்கு வேறு 'விதி'யுமில்லை. ●

(கனவு-12 : மார்ச்' 90)

6

# பெரியாரியம் : மார்க்சியர் இருவரின் மதிப்பீடு -ஒரு திறனாய்வு

1. இன்று நம்மைக் கடுமையாகப் பாதிக்கும் பிரச்சினைகள் என சிலவற்றை முக்கியமாகச் சொல்லலாம். ஏகாதிபத்தியம், முதலாளியம், அரசு அதிகாரம் என்பன தொடங்கி இவற்றின் ஆதிக்கம், பல வடிவங்களில் நம்மை வந்து தாக்கி அழிக்கிற இன்னும் பல பிரச்சினைகள். இந்தச் சூழலில் திராவிட இயக்கம்பற்றியும் இதுபற்றிஎழுதப்படுகிற சில நூல்கள்பற்றியும் நம் கவனம் ஏன் செல்ல வேண்டும்? என்பதும் ஒரு பிரச்சினை. திராவிட இயக்கமாகட்டும், ஏகாதிபத்தியம் முதலிய பிற பிரச்சினைகளாகட்டும் - இவற்றை எல்லாம் நாம் பார்த்து மதிப்பிடுவதெற்கென நாம் வரித்துக்கொண்ட மார்க்சியம் என்ற கண்ணோட்டம் - இன்று நெருக்கடிக்குள்ளாகியிருப்பதும் ஒரு பிரச்சினை. இவ்வகை ஆய்வுகள் பலவும் நம் விடுதலையை குறியாகக் கொண்டவை என்று வைத்துக் கொண்டால், தொகுப்பான இந்தப் பிரச்சினைகள் பலவற்றையும் நாம் எங்கிருந்து, எந்தக் கோணத்திலிருந்து, எந்தத் தேவையிலிருந்து அணுக வேண்டும் என்பதைப் பற்றியும், நாம் முடிவு செய்து கொள்ள வேண்டும்.

நூலாராய்ச்சி நமக்கு முக்கியமில்லை. அதே போல நூலை எழுதியவர் பற்றி நம் கவனத்தைக் குவிப்பதுகூட முக்கியமில்லை. ஒரு வேளை இப்படி கவனத்தைக் குவிப்பது சிலரது பெருமை அல்லது புகழ் உணவுக்குத் தீனிபோடுவதாக இருக்கக்கூடும். இன்று அடிமைப்பட்டது போல, சிறைப்பட்டது

---

☐ பெரியாரியம் பற்றி தோழர். வசந்தகுமார் எழுதிய நூல் 'திராவிட இயக்கக் கலாச்சாரம்', தோழர். கோ. கேசவன் எழுதிய நூல் 'சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும்' இவ்விரு நூல்களும் இக்கட்டுரையில் திறனாய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

போல கடும் நெருக்கடியில் அகப்பட்டுள்ள நமக்கு, இப்படி தனி மனிதர் பற்றிய புகழ்ச்சியோ இகழ்ச்சியோ எந்த அளவுக்கும் முக்கியமில்லை. ஒருவேளை பிரச்சினை பற்றிய தீவிரமான அலசலின்போது இவர்கள் பாராட்டுக்குரியவராகலாம் அல்லது விமர்சனத்துக்குரியவராகலாம். இப்பொழுது இது முக்கிய மில்லை.

2. திராவிட இயக்கம் குறித்து மார்க்சியம் என்று நாம் வைத்துக் கொள்கிற பார்வை பற்றி இங்கு எடுத்துக் கொள்ளலாம். திராவிட இயக்கத்தைக் காட்டிலும் கோட்பாடு, செயல் முறை ஆகியவற்றில் மார்க்சியம் வளமான, ஆரோக்கியமான பார்வை கொண்டிருக்கிறது என்பது, இந்த இரு நூலாசிரியர் களைப் போலவே, பொதுவாக மார்க்சியர் அனைவரும் கொண்டிருக்கும் கருத்து. அண்மைக் காலத்தில் சோவியத் யூனியன் தகர்வைத் தொடர்ந்து, உலக அளவில் மார்க்சியம் கடுமையான கேள்விக்கு உள்ளாகியிருக்கிறது. இந்த உண்மையை தமிழகத்தில் / இந்தியாவில் சில வட்டாரத்தைச் சேர்ந்த மார்க்சியவாதிகள் ஏற்றுக் கொள்ளவதில்லை. இது பற்றி இப்பொழுது நம் கவனம் செல்ல வேண்டியதில்லை. மார்க்சியத்தினுள் இதுவரை உறுத்தலில்லாமல் ஒருங்கிணைந் திருக்கின்றனவென்று கருதப்பட்ட சில கோட்பாடுகள் இப் பொழுது அடிபட்டு சிதறியிருக்கின்றன. இவற்றில் எவற்றை வைத்துக் கொள்வது? இன்னும் எவற்றை இணைத்துக் கொள்வது? அப்புறம், எப்படி இன்னுமொரு ஒருங்கிணைப்பைச் செய்வது? அப்படி செய்ய முடியு[illegible]? என்பனவெல்லாம் நமக்குள் எழுந்துள்ள கேள்விகள். திராவிட இயக்கம் பற்றி, மார்க்சியரது அணுகுமுறைகள் என்னவாக இருந்தன? என்பதை இப் பொழுது ஆராயும்போது, எந்த அளவில் நாம் மார்க்சியத்தை முன்பே செரித்துக் கொண்டிருந்தோம் என்பதும் கூட ஒரு கேள்வியாகிறது.

3. சுருக்கமாகச் சிலவற்றைத் தொகுத்துப் பார்க்கலாம். திராவிட இயக்கம், அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றுக்கு அழுத்தம் தரவில்லை. அல்லது இவற்றுக்கு தந்த அழுத்தத்தை விட கலாச்சாரத்திற்கு அதிக அழுத்தம் தந்தது. இப்படி மார்க்சியர் மதிப்பிடுகின்றனர். அதாவது, மார்க்சியரின் பார்வையில் கலாச்சாரம் என்பது மேற்கட்டின் ஒரு பகுதி. பல சமயங்களில், பொருளியல் மாற்றத்தையடுத்து, கலாச்சாரம் சார்ந்த பிரச்சினைகள் தாமே தீரும் என்பது மார்க்சியம். இன்று சில நெகிழ்வுகள் ஏற்பட்டிருக்கிற போதிலும், மறுபடியும் இந்த

விவாதத்துக்கு இடையில், நெருக்கடியை சிலர் தோற்றுவிக்கின்றனர். இவர்களில் ஒருவர் நண்பர் கோ. கேசவன். பெரியார் பற்றி தன் நூல் நெடுகிலும் வசைமொழிகள் பல வற்றை இவர் உதிர்த்திருப்பது இதற்கு ஆதாரம்.

4. இப்பொழுது பிரச்சினையின் மையத்தை நோக்கி நகரலாம். ஏகாதிபத்தியம் பற்றி திராவிட இயக்கத்தவருக்கு (நீதிக்கட்சியினர்க்கும் சுயமரியாதை இயக்கத்தினருக்கும் சேர்த்து) சரியான பார்வை இல்லை என்பது ஒரு முக்கிய உண்மை. ஏகாதிபத்தியம் / பிரிட்டிசு அரசு தங்களுக்கு நன்மை செய்கிற அரசு என்று அவர்கள் கருதியிருந்தனர். ஆகவே அரசியல் ரீதியில் ஏகாதிபத்தியத்தை இவர்கள் எதிர்க்க வில்லை. இப்படி மார்க்சியர் குற்றம் சாட்டுகின்றனர்.

காங்கிரஸ் கட்சி தொடக்க காலத்திலிருந்து 1947 வரைக்கும் கூட ஏகாதிபத்தியத்திற்கெதிரான போராட்டத்தில் பெரும் பாலான சமயங்களில் உறுதியாக செயல்படவில்லை. பல சமயங்களில் ஏகாதிபத்தியத்திற்குச் சார்பாக, காங்கிரஸ் கட்சி செயல்பட்டது. விடுதலைக்காக, தாங்கள் போராடியதாக மேடையில் காங்கிரஸ் கட்சியினர் சொல்வதை நாம் ஏற்க வேண்டியதில்லை. தவிர, விடுதலை என்றால் என்னவென் பதை அதன் அனைத்து அம்சங்களில் வைத்து, காங்கிரஸ் கட்சியினர் இன்றளவும் புரிந்துகொள்ளவில்லை.

இவை எல்லாவற்றையும் விட ஏகாதிபத்தியம் எவ்வா றெல்லாம் அரசியலில், கல்வித்துறையில், அரசு நிர்வாகத்தில், தொழில்முறையில் தன் ஆதிக்கத்தை இந்திய மக்களுக்குள், படிப்பாளிகளுக்குள், அரசியல்வாதிகளுக்குள் செலுத்துவதில் வெற்றியடைந்தது என்பது பற்றி காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியாது. மற்றவர்களுக்கும் தெரியாது. ஆட்சி அதிகாரத்தில் இடம் வேண்டுமென்ற நீதிக்கட்சியினருக்கு இந்த உண்மை தெரியாது. இங்கிலாந்தின் தொழில் வளர்ச்சிக்காக இந்தி யாவில் பணப்பயிர்கள், குறிப்பாக பருத்தி, புகையிலை, சணல், தேயிலை, காப்பி முதலியவற்றின் உற்பத்தியை பிரிட்டிஷ் அரசு ஊக்குவித்தது. பணப் பொருளாதாரத்தை விரிவுப் படுத்தியது. பண ஆதிக்கத்துக்குள் மக்களைக் கொண்டு வந்தது. இது வேண்டுமா, வேண்டாமா என்பதைக்காட்டிலும் ஏகாதிபத்தியத்தின் இந்தப் போக்கினுள், மக்கள் அடிமைப் படுத்தப்பட்டதை நாம் காணத்தவறக்கூடாது. ஏகாதிபத்தி

யத்தின் ஆட்சிக்குள் இப்படி, நில உடைமையாளர், முதலாளிகளும் இழுக்கப்பட்டனர். ஏகாதிபத்தியம் தன்னை நிலை நிறுத்திக்கொள்ள படிப்பாளிகளைத் தோற்றுவித்தது. பிரிட்டிஷ் அரசு தந்த கல்விமுறை பற்றி இங்கு விமர்சனம் உண்டா என்றும் நாம் கேட்டுக்கொள்ளலாம். ஏகாதிபத்தியத்திற்கு மக்களை அடிமைப்படுத்துவது இந்தக் கல்வி. இந்தப் படிப்பாளிகள் அரசு அதிகாரத்தில் இடம் பெற்றபொழுது அரசு அதிகாரத்திற்குத்தான் இவர்கள் சேவை செய்தனர். இவர்கள் நகர்புறவாசிகள். இவர்கள் மூலம் ஏகாதிபத்தியம் மக்கள் மீது செயல்பட்டது. சுதேசிக் கல்வி என்று அந்தக் காலத்தில் ஒரு சிலர் பேசியபொழுதும் ஏகாதிபத்தியம் படிப்பாளிகளுக்குள் எவ்வளவு ஆழத்திற்குள் செயல்பட்டது என்பதை அவர்கள் புரிந்து கொண்டிருந்தார்களா? என்பதும் கேள்வி.

5. காங்கிரஸ் கட்சி தொடக்க காலத்தில் சமூகப் பிரச்சினைகள் பற்றிய நோக்கைக் கொண்டிருந்தது. பின்னர், அரசியல் மாற்றம்தான் முக்கியப் பிரச்சினை என்பது போல கருதி, சமூகப் பிரச்சினை பற்றிய ஈடுபாட்டைக் கைவிட்டது. இந்த நிலையில் நீதிக்கட்சியோ அடுத்து வந்த சுயமரியாதை இயக்கமோ, சமூகப்பிரச்சினை பற்றிய தீர்வுக்கு அழுத்தம் தந்ததை நாம் ஏற்கவேண்டும். விடுதலை என்பது பல பரிமானங்களில், பல திசைகளில் செயல்படக்கூடியது. விடுதலையில் அரசியல், பொருளாதாரம், கலாச்சாரம், மதம்' சாதி, கல்வி, மொழி என்று பல அம்சங்கள் இருக்கின்றன. காந்தி அரசியல் விடுதலைக்காகப் போராடினார் என்று நம்புகிறவர்கள் தாகூரின் விடுதலைப்பணியை - மக்களுக்கு கல்வி தருவதின் மூலம் அவர் ஆற்றிய விடுதலைப் பணியை - யாரும் குறைத்துப் பேசுவதில்லை. ஆன்மீக விடுதலை என்ற தளத்தில் அரவிந்தர் பணியை யாரும் குறைத்துச் சொல்லவேண்டியதில்லை. இதைப்போலவே பெண் விடுதலை, தொழிலாளர் விடுதலை முதலியனவும் விடுதலைக்கான சில களங்கள்.

ஏகாதிபத்தியம், நிலப்பிரபுத்துவம் ஆகிய இருபெரும் சக்திகளை எதிர்த்து விடுதலை இயக்கங்கள் ஒருமுகப்பட்டு செயல்பட்டிருக்கவேண்டும் என்று மார்க்சியர் கருதுவது ஒரு பெரும் கனவு. வரலாற்றில் இத்தகைய ஒருமுகப்படுத்தல் அநேகமாக சாத்தியமில்லை. சமச்சீரான வளர்ச்சி பற்றி நாம் கற்பனை செய்வதில் அர்த்தமில்லை. ஒரு சமூகத்தில் ஒன்றுக்

கொன்று முரண்பட்ட பல சக்திகள் முன்னுக்கு வந்து செயல்படுகின்றன. முன்னைய சமூகத்தில் அடங்கிக்கிடந்த அல்லது இல்லாமலிருந்த சக்திகள் பிறகு தோன்றி சமூக அரங்கில் முன்னணிக்கு வருகின்றன. இப்படி தோன்றிய புதிய சக்திகளில் ஒன்று தொழிலாளர் கூட்டம். முதலாளிகளுக்கு எதிராக இவர்கள் சில சமயங்களில் போராடினர். அந்த முதலாளி இந்தியனாக இருக்கலாம். அல்லது பிரிட்டிஷ்காரனாக இருக்கலாம். தொழிலாளர் போராட்டங்கள் மூலம் முதலாளியம் அழிந்துவிடுவதில்லை. தொழிலாளர் போராட்டங்கள் அரசியல் விடுதலைக்கான போரட்டங்கள் என்று சித்தரிக்கவேண்டியதில்லை. சமூகம் மெல்ல மெல்ல இயங்கத் தொடங்கியது என்பதைத்தான் இப்போராட்டங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

6. இந்த அடிப்படையில் உறுதியாக நாம் ஒன்றைச் சொல்லலாம். நீதிக்கட்சியோ, திராவிடர் இயக்கமோ, பிரிட்டிஷ் அரசுக்கு எதிராகப் போராடவில்லை என்று சொல்வதில் பொருளில்லை. சமூக விடுதலையின் சில களங்களில் இவர்கள் செயல்பட்டவர்கள் என்பதன் மூலம் இவர்களும் விடுதலைக்கான போராட்டத்தில் ஈடுபட்டனர் என்றுதான் மதிப்பிட முடியும். பிரிட்டன் ஏற்படுத்திய ஜனநாயகத்தின் ஓர் அம்சம்-கட்சிகள். மற்றதைத் தாழ்த்தி தன் செல்வாக்கை உயர்த்தக் கூடிய கட்சி அமைப்பு செயல்படுகிற சமூகசூழலில், காங்கிரஸ் கட்சி நீதிக்கட்சியைக் குறைசொல்லும், நீதிக்கட்சி கம்யூனிஸ்ட் கட்சியைக் குறைசொல்லும், இப்படி மாறி மாறி குறை சொல்வதன் மூலம் கட்சிகள் தம்மை தக்கவைத்துக்கொள்கின்றன. மக்களைப் பிளவுபடுத்துகின்றன.

பிரிட்டன் தன்னைத் தக்கவைத்துக்கொள்வதற்கு இந்தக்கட்சி முறை வெகுவாகப் பயன்பட்டது. கட்சி ஒவ்வொன்றும் ஏதாவது ஒருசில சமூகப்பிரிவுகளைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற உண்மையை நாம் மறுக்கவேண்டியதில்லை. அதேபோல சமூகப் பிரிவுகளுக்கிடையில் குழப்பங்களையும் கட்சி செய்ய முடியும்.

7. தமிழ்நாட்டில் உருவாகிய சுயமரியாதை இயக்கச் செயல்பாடுகள் மூலம் முதலாளியம் பலம் பெற்றன என்ற உண்மையை நாம் புரிந்து கொள்கிறோம். நீதிக்கட்சி சார்ந்த நில உடமையாளர்கள், பணப்பயிர் சாகுபடியின் மூலம் முதலாளியப் போக்கை வளர்த்தனர். சாதி, மதம் ஆகியவற்றை

நெகிழ்த்துவதன் மூலம் மீண்டும் உறுதிப்படுவது முதலாளியப் போக்குதான். வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தின் விளைவும் முதலாளியத்திற்கான ஆக்கம் தான்.

ஏகாதிபத்திய அரசைப் பொருத்தவரை, இந்தியாவில் தனக்கு சாதகமான முதலாளியத்தைத்தான் அனுமதிக்க முடியும். தேசிய முதலாளிகள் ஒரு சிலர் உற்பத்தியாக முடியும். தம் நலன்கள் சிலவற்றிற்காக, இவர்கள் சில கட்சிகள் மூலம் செயல்பட முடியும். ஆனால் இறுதியில் இவை அனைத்தும் ஏகாதிபத்தியம் தரும் வரையறைக்குள் தான் செயல்பட முடியும். 1947-ல் ஆட்சிமாற்றத்தைக் கூட இப்படிதான் பொருள்படுத்த முடியும். ஒட்டுமொத்தமான விடுதலை பற்றிப் பேசும்பொழுது முதலாளிய கட்டத்தை ஒரே தாவில் தாவிவிட முடியுமா என்ற கேள்வியை இங்கு எழுப்பிக்கொண்டு நாம் சிந்திக்க முடியும். இவை அனைத்தும் ஏகாதிபத்தியம் தரும் வரையறைக்குள் தான் செயல்படமுடியும்.

இன்னும் முதலாளியம் போதிய வளர்ச்சி பெறவும் இல்லை. ஆனால், உலக அளவிலான சமதர்மம் பற்றிய சித்தரிப்புகள் தமிழகச் சூழலுக்கும் வந்து சேருகின்றன. வரலாற்றில் அரசு உடைமை என்பதுதான் சமதர்மம் என்றஅர்த்தம் பலபத்தாண்டு கள் உறுதியாக நிலைபெற்றிருந்தது. 1917-ரசியப் புரட்சி என்பது ஏற்கனவே நிலவிய அரசு அதிகாரத்தைத் தகர்த்து பட்டாளி வர்க்கத்திற்கான அரசு அதிகாரத்தை ஏற்படுத்தி விடவும் இல்லை. இந்நிலையில் எல்லாவற்றையும் அரசு எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற புரிதல்தான் சமதர்மம் அல்லது சோசலிசம் என்ற புரிதலாக இருந்தது. சமூக உடைமை அல்லது மக்கள் உடைமை என்ற கருத்து உறுதி பெறுவதற்கான வரலாற்று அனுபவங்கள் சோவியத் யூனியனி லும் கூட பிறகுதான் ஏற்பட்டது. இந்நிலையில் சோசலிசம் என்று பேசப்பட்ட பொழுதிலும் அதன் செயல்பாட்டுக்கு உகந்த காலம் வரும் வரையில் சமூகத்தில் செயல்படுத்தப்படுவது சமதர்மம் என்ற பெயரில் அரசு உடைமைதான். அரசு உடைமை என்பது முதலாளியம் என்பதைத்தவிர வேறு இல்லை.

இந்திய சமூகத்தில் சமதர்மம் தேவை என்பதற்கான போக்கு தோன்றிவிட்டது. அங்கங்கே குழுக்களும் கட்சி அமைப்புகளும் தோற்றம் பெற்றன. இவற்றின் தீவிரமான

பிரச்சாரம் மக்களைப் பெரிதும் கவர்ந்தது. 1917ஐ தொடர்ந்து, உலக அளவில் ஏற்பட்ட பொருளாதார வீழ்ச்சி காரணமாக இந்தியாவிலும் சமதர்மத்திற்கு பெரும் மரியாதை ஏற்பட்டது. இந்தப் போக்கை கேசவன் தன் நூலில் சுட்டுகிறார். தன்மான இயக்கமும், சமதர்மம் நோக்கி தன் புரிதல் பயணத்தைத் தொடங்கியது. பெரியாரின் 1928-32 கால உரைகளை வைத்துப் பார்க்கும் பொழுது, சமதர்மம் பற்றிய அவரது புரிதல் ஆழமாக இருந்தது. சூனா சுட்டிக்காட்டுகிறபடி, அன்று மார்க்சிய வாதிகளுக்கு இருந்த அளவு புரிதல், பெரியாருக்கும் இருந்தது. தன்மான இயக்கம், குறுகிய கால அளவில், சமதர்ம நோக்கிலான புரிதலை முழுஅளவில் பெற்றது என்பது ஐயமில்லை. இந்த சமதர்மம், அரசு உடைமையாக்கம் என்பதை இலக்காகக் கொண்டது

இத்தகைய கருத்தியலில் வளர்ச்சி பெற்ற பெரியாரை, பிறகு சமதர்மத்தை கைவிட்டார் என்று விமர்சனம் செய்யும் பொழுது நாம் கவனமாக இருக்க வேண்டும். பொது உடைமைக்கட்சி. வரலாற்றுச் சூழலில் எப்பொழுதெல்லாம் சமதர்மத்தைப் பின்னுக்குத் தள்ளியது, கைவிட்டது என்பது பற்றியும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். தெலிங்கானா புரட்சிக்குப்பின், கட்சியின் நிலைபாடு, நேருவை நம்பி அவரோடு சென்றது போன்றவை இங்கு நினைவில் கொள்ள லாம். விடுதலைப் போராட்டத்தின் போது 42 வாக்கில், கம்யூனிஸ்ட்டு கட்சி சருக்கியதையும் இங்கு நினைவுகொள்ள லாம். சமதர்மம் பற்றி மக்கள் மத்தியில் பேரார்வத்தை ஏற்படுத்தியதில் பெரியாரின் பணியை நாம் குறைத்துச் சொல்ல முடியாது. பெரியாரின் செயல்பாட்டை, பிரச்சார இயக்கம் என்று சொல்லலாம் என்றால், பொதுவுடைமை இயக் கத்தையும் இதே போலச் சொல்ல முடியும். பெரும் பகுதி பிரச்சார இயக்கம், சில புரட்சிகர செயல்பாடுகள், தொடர்ந்து தோல்வி, தோல்விகளிலிருந்து சரியான படிப்பினைகளைக் கற்றுக் கொள்ளாத மலட்டுத்தனம் என்று நாம் சொல்லவேண்டி யிருக்கும். பார்ப்பனன், பணக்காரன், அரசு ஆகிய மூன்றையும் ஒழிக்க வேண்டும் என்ற புரிதலில் பெரியார் உறுதியாக இருந் தார். இப்பொழுது நிலைமை சாதகமாக இல்லை. பார்ப் பனனை ஒழிக்கிற காரியத்தை எடுத்துக் கொள்கிறேன் என்று பெரியார் 1932-ல் கூறினார். பெரியாரைக் குற்றம் சொல்லி விட்டு, மார்க்சியர் தப்ப முயல்வது சந்தர்ப்பவாதம் அன்றி வேறென்ன? பெரியார் பிழைப்பு வாதி, சந்தர்ப்பவாதி, கவர்ச்சி

அரசியல்வாதி என்றெல்லாம் நண்பர் கேசவன் அடுக்குவது, பெரியாரைப் பற்றிய வசைமொழிகள். ஒரு ஆய்வாளர் இப்படி ஒரு மூன்றாம்தர அரசியல்வாதியாக சரிந்துவிழ வேண்டிய தில்லை.

சந்தர்ப்பம் வாய்த்த பொழுதெல்லாம் திரும்பத் திரும்ப பெரியார் சமதர்மம் பற்றி வலியுறுத்திப் பேசியிருக்கிறார். நேருவின் சோசலிசத்தை, கம்யூனிஸ்டுகளைப் போலவே பெரியாரும் நம்பினார்.

8. இந்த இடத்தில் நெ. து. சுந்தரவடிவேலு தரும் ஒரு விவாதத்தை நாம் கவனிக்கவேண்டும். தமிழகத்தில் இராஜாஜி இந்தியைக் கொண்டுவந்தார். இன்னொரு சமயம் குலக் கல்வியைக் கொண்டுவந்தார். இவற்றுக்கெதிராக திராவிட இயக்கம் கடுமையாகப் போராடியது. தமிழர் வரலாற்றில் இந்தப் போராட்டங்கள் எவ்வளவு முக்கியமானவை என்பதை நாம் மறுக்கமுடியாது. தமிழ்நாடு தமிழர்க்கே என்ற முழக்கமும் இத்தகையது. இவற்றோடு பார்ப்பனியம், மதம், சாதி பற்றியும் பெரியார் தீவிரமாக முழக்கங்களை எழுப்பினார். எனினும் சமதர்மம் நோக்கிய பயணத்தைத் திசை திருப்புவதில் இராஜாஜி வெற்றிபெற்றார் என்று சுந்தரவடிவேலு கூறுகிறார். இவரது கூற்றை அப்படியே நாம் ஏற்க வேண்டியதில்லை. தமிழகச் சூழலில் இந்தி எதிர்ப்பு ஒற்றைக் கேடயத்தைக் கொண்டு பெரிதாகச் சாதித்துவிடலாம் என்று முழக்கம் எழுப்பு வதன் தவற்றை நாம் புரிந்துகொள்ள முடியும். இந்தி எதிர்ப்பு என்று பேசி சமதர்மத்தை திராவிட இயக்கம் கைவிட்டது. கம்யூனிஸ்டுகள் இந்தி எதிர்ப்பில் கலந்து கொள்ளவும் இல்லை. சுந்தரவடிவேலு கூறுகிறபடி இம்மாதிரி சந்தர்ப்பத்தில் பெரியார் இயக்கமும், பொதுவுடைமை இயக்கமும் இனி இணைந்து செயல்பட முடியாது என்ற அளவில் வேறு வேறு திசைகளில் சென்றன. சமதர்ம ஆக்கத்தைப் பொருத்தவரை, இந்தப் போக்கு பெரும் வீழ்ச்சி என்று சொல்லலாம். வீரமணிக்கு இது தேவையாக இருக்க லாம். உண்மையான பெரியாரியம் சார்ந்தவர்க்கு இது தேவையில்லை.

9. திராவிட இயக்கம், அரசு அதிகாரத்திற்கு வந்த பிறகு பெரும் வீழ்ச்சியைச் சந்தித்துள்ளது. வரலாற்றில் திராவிடர் இயக்கம் மேலுக்கு வர முடியாது என்று தோன்று

கிறது. மார்க்சியரும் அரசு அதிகாரத்தைக் கைப்பற்றும் வாய்ப்பு இந்த நூற்றாண்டில் இல்லை. நிலவரங்கள் பெருமளவுக்கு தமிழரின் வீழ்ச்சி நோக்கிச் சென்று கொண்டிருக் கின்றன. வடவர் ஆதிக்கத்திற்கு தமிழகம் விரைவில் முழுமை யாக அகப்பட்டுவிடும். ஏகாதிபத்தியம் இந்தியாவை முற்றுகையிடுவதிலும், இந்தியாவிற்குள் உள்ள விடுதலை இயக்கங்களை அழிப்பதிலும் வெற்றி பெறலாம். எதிர்காலம் மிகப்பெரும் சவால்களை நம்முன் நிறுத்தி இருக்கிறது. தமிழன் தன்னை தேசிய இனமாக உருவாக்கிக்கொள்வதன் மூலம் தன்னை ஓரளவு காத்துக்கொள்ள முடியும். இந்த நோக்கிலிருந்து பார்க்கும்போது, பெரியாரியக்கம் நமக்குத் திரட்டித் தந்திருக்கும் சாதகமான அம்சங்களைப் பெரும் பூரிப்போடு நாம் வரவேற்க முடியும். தமிழினத்தை ஒன்று படுத்துவதற்கும் விடுதலைக்கான பல்வேறு அம்சங்களைப் பற்றிய உணர்வை மக்கள் மத்தியில் திரும்ப எழுப்புவதற்கும் திராவிடர் இயக்கம் நமக்கு பெரும் வாய்ப்பைத் தந்துள்ளது. சாதி ஒழிப்பு, மதம் பற்றிய விமர்சனம், பார்ப்பனியம் பற்றிய விமர்சனம், பார்ப்பனியம் பற்றிய எதிர்ப்புணர்வு, இந்தி எதிர்ப்பு, பெண் விடுதலை முதலிய அம்சங்கள் நமக்குப் பெரிதும் பயன்படும். பெரியாரின் வாரிசுகள் சிலர் சம தர்மத்தை மறுப்பதில் கொண்டிருக்கும் தீவிரத்தை பெரியாரைக் கொண்டே நாம் அழிக்கமுடியும். மக்கள் விடுதலையின் பால் மார்க்சியர் கொண்டிருக்கும் ஆர்வத்திற்கு ஏற்ற அளவில் பெரியாரை நாம் பயன்படுத்திக்கொள்ள முடியும். பெரியார் நமக்கு முன்னோடி- முதல்வர் என்ற முறையில், அவரிடம் நாம் பெரும் மரியாதை கொள்ளவேண்டும். பெரியாரிடம் மரியாதையைக் குறைக்கும் முறையில் எழுதுபவர்கள் தமி ழினத்தின் பகைவர்கள் அல்லது புல்லுருவிகள். இந்தப் பட்டி யலில் சேர சிலர் முந்திக்கொள்கிறார்கள். இவர்களில் ஒருவர் கோ. கேசவன். வசந்தகுமார், கேசவன் அளவுக்கு முந்திக் கொள்ளவில்லை.

10. பெரியாரின் மெய்யியல் பற்றிய ஆய்வை குணா செய்த அளவுக்கு நண்பர் கேசவன் செய்யவில்லை. உண்மையில் பெரியாரின் தன்மானம் என்பது அவரது ஆற்றல் மிக்க மெய்யியல். பெரியார் கூறிய பகுத்தறிவு, அவரது மெய்காண்முறை. காரண-காரிய ஆராய்ச்சி என்பதுதான் பகுத்தறிவு. காரணத்தையும் விளைவையும் பகுத்துப் பார்க்கும் அறிவு, தர்க்கமுறை இது. பெரியாரின் தன்மானம் என்ற

மெய்யியலை, அவரது பகுத்தறிவு கொண்டு மேலும் ஆய்வுக்கு உட்படுத்த இயலுமானால், சமதர்மம் என்ற சிந்தனைக்கு நாம் செல்ல முடியும். பெரியார் இபபடி சென்றிருக்கிறார். ஆகவே, தன்மானம் என்பதன் சில வரைமுறைகளை கேலி செய்வதன் மூலம் பெரியாரைக் கீழிறக்க முடியாது. பெண்ணுக்குத் தன்மானம் என்பது ஆண் அதிகாரத்திலிருந்து விடுதலை. தொழிலாளிக்குத் தன்மானம் என்பது முதலாளி யத்திலிருந்து விடுதலை. கடவுள், ஆன்மா, மோட்சம், ஆகிய மூடநம்பிக்கைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள் வதன் மூலம் ஒருவன் மனிதனாகிறான். மனிதன் தன்னைத் தானே நிர்வாகம் செய்துகொள்ள வேண்டியவன். இவன் யாருக்கும் அடிமை இல்லை. ஏகாதிபத்தியத்திற்கு, அரசு அதிகாரத்திற்கு, மூலதனத்திற்கு, பார்ப்பனியத்திற்கு இவன் அடிமையாக முடியாது. அடிமைப்படும் ஒருவன், தன்மானத்தை இழக்கிறான். அதாவது தன்னை இழக்கிறான். பெரியாரின் வாசகங்களிலிருந்து இப்படி விவரிப்பதற்கான மேற் கோள்களை ஒருவர் எளிதாகத் திரட்ட முடியும். பெரியாருக்குள் வரலாறு பற்றியும் இயங்கியல் பற்றியும் கூட சில உணர்வுகள், கருத்துக்கள் இழையோடுகின்றன. இவற்றிலிருந்து பெரியாரை நாம் முன்னோக்கி நகர்த்தமுடியும். பெரியாரை மார்க்ஸ் என நாம் வண்ணம் தீட்டவேண்டியதில்லை; ஆனால் ஆயிரம் ஆண்டுகளுக்கு அதிகமாக மதம், அரசு, ஆகியவற்றின் பிடியிலிருந்து, சித்தர்கள் மூலம் வள்ளலார்கள் மூலம் தப்பி பெரியாரிடம் வரும் பொழுதுதான் இவன் மனிதன் என்ற அடையாளத்தை, ஆளுமையைப் பெறுகிறான். தமிழக வரலாற்றில் பெரியார் ஒரு மாபெரும் சக்தி. மனிதனை மேலும் வளர்த்து சமதர்மத்தினுள், அதாவது மார்க்சியத்திற்கு நெருக்கமாகத் தமிழனைக் கொண்டுவந்து சேர்க்கிறார். மேற்கொண்டு இவன் இயங்க, முன்னேற இவன் தன் பயணத்தைத் தீர்மாணித்துக்கொள்ள வேண்டும். பெரியாரின் மூலம் மனிதன் என்ற பரிமாணத்தைப் பெற்ற இவன், மார்க்சி யத்தின் மூலம் தன் பயணத்தைத் தொடரவேண்டும். பெரியாரோடு முரன்பட்டு இவன் சீரழியக்கூடாது. ○

---

பார்வைக்கு :


1. திராவிட இயக்கக் கலாச்சாரம் ஆசிரியர் : வசந்தகுமார்
   வெளியீடு : மக்கள் கலாச்சாரக் கழகம்

2. சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும்
   ஆசிரியர் : கோ. கேசவன்
   வெளியீடு : சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம்.

3. பெரியாரும் சமதர்மமும், ஆசிரியர்: நெ. து. சுந்தரவடிவேலு
வெளியீடு : புதுவாழ்வுப் பதிப்பகம், சென்னை.

இணைப்பு :

## கேசவன் நூல் -ஞானியின் திறனாய்வு

பெரியாரின் தன்மான இயக்க வரலாறு பற்றிய நண்பர் கோ. கேசவன் அவர்களின் இந்த நூலில் மார்க்சிய ஆய்வுமுறை வளம் பெறுகிறதா அல்லது பழுதுபடுகிறதா? என்று பார்க்கிற பொழுது வளம் பெறுவதாகச் சொல்ல முடியவில்லை. ஆங்கிலேயர் வருகையைத் தொடர்ந்து தமிழகத்தில் பருத்தி, புகையிலை, நிலக்கடலை போன்ற பணப்பயிர் விளைச்சல் தமிழகத்தின் சாதி முறையில் மாற்றங்களை ஏற்படுத்தின. புதிதாக வளர்ந்த நாயுடு, செட்டியார், கவுண்டர் போன்ற சாதியினர் நீதிக்கட்சியின் ஆக்கத்திற்கு காரணிகளாயினர். அத்துடன் கடவுள், மதம் ஆகியவற்றை தொடக்கத்தில் ஏற்றுக் கொண்ட பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தின் ஆக்கத் திற்கும் காரணமாக இருந்தனர். இவ்வாறு கேசவன் தரும் ஆய்வில் மார்க்சியத்தின் வளம் சிறப்பாகத் தெரிகிறது.

பெரியார் பகுத்தறிவை ஊக்குவித்தாலும் தன் கட்சி அமைப்பினுள் சர்வாதிகாரியாகவே நடந்து கொண்டார் என்று நிரூபணம் செய்ய விரும்பும் ஆசிரியர், காங்கிரஸ் கட்சியினுள் காந்தி கடைப்பிடித்த நடைமுறைதான் இது என்று சாதிக்க முனைகிறார். ஜனநாயக மையத்துவம் பற்றி கோட்பாட்டு ரீதியாகப் பேசிய மார்க்சிய கட்சிக்குள் இதுவரை முழுமையான ஜனநாயக நடைமுறை என்னவாயிற்று? என்பது பற்றிய உண்மையை கேசவன் தன் ஆய்வு நூலில் 'இறுதி வரை' கண்டு கொள்ளவில்லை. இதுமட்டுமல்ல, புரட்சிக்கான தருணங்கள் வாய்ந்த பொழுதெல்லாம் புரட்சியை கைவிட்ட அல்லது புரட்சியில் சாதனை ஏற்படுத்தாத கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நின்று பெரியார் ஏன் தன் சமதர்ம அரசியலைக் கைவிட்டார் என்று கேட்பது நேர்மையான, மார்க்சிய ரீதியான ஆய்வு முறைக்குப் பொருந்தாது. இவ்வாறு செய்வதற்குப் பதிலாக இந்தியாவில் புரட்சியும் ஜனநாயக நடைமுறையும்

வெற்றி பெறாததற்கு / வளர்ச்சி பெறாததற்கு என்ன காரணம் என்று வரலாற்றுக்குள் நுழைந்து கேசவன் ஆய்வு செய்திருக்க வேண்டும். உடனடியாக ஒன்றைச் சொல்ல முடியும். பிரிட்டிஷ்காரன் சென்ற எந்த நாட்டிலும் புரட்சி ஏற்படவில்லை. புரட்சிகர சக்திகளைத் திட்டமிட்டுக் கடுமையாக ஒழித்தான் என்பது ஒரு காரணம். தன் அரசு நிர்வாகத்திற்கு ஏற்ற முறையில் படிப்பாளிகளையும் ஆட்சி நிறுவனங்களையும் தோற்றுவித்து இதற்கேற்றவாறு கல்வி, நிர்வாகத்தின் மூலம் தொடர்ந்து பல மாயைகளை படிப்பாளிகள், நிர்வாகிகள் மூலம் மக்களின் உணர்வில் விதைத்தான் என்பது இன்னொரு காரணம். இங்குள்ள சுதேச மன்னர்கள், சாதி, மதங்கள் முதலியவற்றைப் பயன்படுத்திக் கொண்டான் என்பதும் ஒரு காரணம். பிரிட்டிஷ்காரன் வருகைக்கு முன்னர் இந்திய சமூகத்தில் புரட்சிகரப் போக்குகளுக்கு எதிரான அம்சங்கள் என்ன இருந்தன என்றும் ஆய்வைத் தொடரலாம். ஜனநாயகம், புரட்சி ஆகியவற்றில் உண்மையான அக்கறை உடைய ஒரு மார்க்சியப் படிப்பாளி இத்தகைய ஆய்வை மேற்கொள்வதன் மூலம் தான் பெரியாரின் / கம்யூனிஸ்ட் கட்சியின் குறைகள் / குற்றங்கள் எங்கிருந்து, எப்படி தோன்றின / வளர்ந்தன என்பதைக் கண்டறிய முடியும். கேசவன் இதைச் செய்யவில்லை.

பெரியாரின் மெய்யியல் பற்றிய ஆய்வில் கேசவன் செய்யும் குழப்பம் கடுமையானது. மார்க்சியப் பாட நூல்களில் தரப்பட்டுள்ள புலன் அறிவு, கருத்தாக்க அறிவுக் கோட்பாட்டு, அறிவு பற்றிய விளக்கங்களை கேசவன் புரிந்து கொள்ளவில்லை. கருத்தாக்கங்களில் ஒன்று என பெரியாரின் பகுத்தறிவைக் கொள்ளலாம். கருத்தாக்கமே பகுத்தறிவு அல்ல. பெரியாரின் மெய்யியலைக் கண்டறிவதில் குணாவும் மாதவனும் செய்த தவற்றைத்தான் கேசவனும் செய்திருக்கிறார். பெரியாரின் மெய்யியல் என்பது அவர் கூறிய தன்மானம்தான். மனிதன் எந்த வகையிலும் இன்னொருவனுக்கு / இன்னொரு சக்திக்கு அடிமையாகக் கூடாது. தொழிலாளி முதலாளிக்கோ, பெண் ஆணுக்கோ, சூத்திரன் பார்ப்பனனுக்கோ அடிமையாவதன் மூலம் தன்மானத்தை இழக்கிறான். மனிதன் மனிதனாக சுதந்தரமுள்ளவனாக வாழவேண்டும். தன் பகுத்தறிவு கொண்டு தன் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் எதிரானவை அனைத்

தையும் ஒதுக்க வேண்டும் / ஒழிக்க வேண்டும். மனிதனுக்கு சாதி இல்லை, மதம் இல்லை, இனம் இல்லை, மொழி இல்லை, நாடு இல்லை என்றெல்லாம் பெரியார் கூறும்பொழுது தன்மானம் தான் அவரது மெய்யியல் என்பது புலனாகிறது. நாம் அறிந்த பலவகை மெய்யியல்களையும் தன்மான மெய்யியலோடு உரைத்துப் பார்த்துக் கொள்ளலாம். இந்த மெய்யியலைக் கண்டறிவதற்கான நெறி அல்லது கருவி அல்லது மெய்காண் முறை தான் பெரியார் கூறிய பகுத்தறிவு என்பது, மெய்யியல் அல்ல. மெய்காண்பதற்கான நெறி. பெரியார் ஒரு நாட்டு வைத்தியர் மாதிரி. சுயமான விவேகத்தோடு, அதாவது பகுத் தறிவுகொண்டு அனைத்தையும் சிந்தித்தவர். கேசவன் கூறுவது மாதிரி பெரியார் பெரிய படிப்பாளி அல்ல. அவருடன் இருந்தவர் களும் மேதைகள் அல்லர். ஆற்றல் மிகுந்த சுயமான அறிவுதான் பெரியாரை தமிழகத்தின் தலைசிறந்த சிந்தனையாளராக்கியது. சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறெல்லாம் குடை ரிப்பேர்க்காரனின் கைக்கருவி மாதிரி, பெரியார் தன் பகுத்தறிவை வளைத்தும் நெளித்தும் பயன்படுத்தினார். பெரியார் பகுத்தறிவில் உள்ள 'கோளாறு'களை இப்படித்தான் புரிந்துகொள்ள முடியும். பெரியார் பற்றிய ஆய்வு இன்னும் பல பத்தாண்டுகளுக்கு நம்மோடு உடன் வரும். பெரியாரை இகழ்ந்தொதுக்கி தமிழக வரலாற்றை முன் கொண்டு செல்ல இயலாது. இகழ்ந்து ஒதுக்கும்போது மார்க்சியம் தன் வலிமை இழக்கிறது. கட்சியைக் காப்பாற்ற மார்க்சியத்தைப் பலியிட முடியாது. விவரங்கள் திரட்டுவதில் கேசவன் மேற்கொள்ளும் கடும் உழைப்பு நமக்கு வியப்பளிக்கிறது. தமிழில் வெளிப்படுத்த முடியாத தன் நுட்ப மான கருத்துக்களை பாட்டாளி வர்க்கம் சரிவரப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கினால்தானோ அடைப்புக் குறிக்குள் ஆங்கிலச் சொற்களை விடாப்பிடியாக நூற்றுக்கணக்கில் தரு கிறார்? தமிழை கேசவன் இப்படி அவமதிக்க வேண்டாம். ○

(நிகழ்-18 : ஜூன்' 91)

## கேசவன் பதில்

1. நூலின் தலைப்பான சுயமரியாதை இயக்கமும் பொது வுடைமையும் என்பதை ஒட்டியே சு. ம. இயக்கம் பொது வுடைமையை ஏற்றதும் கைவிட்டதும் மையமாக ஆயப்பட்டன. மார்க்சியக் கட்சியின் ஜனநாயக நடைமுறை குறித்தோ கம்யூ னிஸ்டுகள் பொதுவுடைமையை ஏன் கைவிட்டனர் என்பது

குறித்தோ ஆயும் நோக்கம் கொண்டதில்லை. நூலின் மையத்தோடு தொடர்புடைய பொதுவுடைமையரின் குறைபாடுகள், சில இடங்களில் சுட்டப்பட்டுள்ளன. பசு பற்றிய கட்டுரையில் பசு குறித்து எழுதுவதுதான் கட்டுரை நியாயமாக இருக்க முடியுமே தவிர தென்னை மரத்தைப் பற்றிக் குறிப்பிட்டு 'இந்த மரத்தில் கட்டப்பட்ட பசு' என்பதாக சொல்வது கட்டுரை நியாயமாகுமா?

2. பெரியார் மெய்யியல் குறித்த என் கருத்துகள் குழப்பம் மிகுந்தவை; குணாவும் மாதவனும் செய்த தவறுகளே இங்கும் உள்ளது என்று குறிப்பிட்ட தாங்கள் அத்தகைய தவறுகளைச் சுட்டிக்காட்டியிருப்பின் திருத்திக் கொள்ளவோ மறுமொழி கொடுக்கவோ வசதியாக இருக்கும். என்னதான் சுருக்கம் கருதி எழுதினாலும், வெறுமையை விளங்கிக் கொள்ள இன்னமும் எமக்கு உயர்வு ஏற்பட்டு விடவில்லை.

3. பெரியாரை நான் இகழ்ந்து ஒதுக்கவில்லை. பெரியாரின் சாதக பாதகங்கள் கண்டறியப்பட்டு, தள்ளுவன தள்ளி, கொள்வன கொண்டு பெரியாரியம் வரலாற்று ரீதியாக கடக்கப்பட வேண்டும் என்பது என் கருத்தாகும். அடைப்புக் குறிகள் ஆங்கிலச் சொற்களை குறிப்பிடல் தமிழுக்கு அவமதிப்பாக இல்லை. சொற்கள் பழக்கப்படாமலிருக்கும் பொழுது அடைப்புக் குறிகள் தவிர்க்க முடியாதவை ஆகும். பழக்கப்பட்டபின் அடைப்புக் குறிகள் உதிர்ந்து போகும். ○

(நிகழ்-19 : செப்' 91)

# 7

# பார்ப்பனிய எதிர்ப்பா, சமதர்மமா? எது பெரியாரியத்தின் மையம்?

1. பெரியாரிலிருந்து சில மேற்கோள்கள் :

கோவைக் கூட்டத்தில் (30-1-33) பெரியார் பேசியவை. ''நமது இயக்கம் சீர்திருத்த இயக்கம் அல்ல. அழிவு வேலை இயக்கம். இன்றைய நிலையில் சமத்துவத் தன்மைக்கு மத சம்பந்தமாக, கடவுள் சம்பந்தமாக, பொருளாதார அரசியல் சம்பந்தமாக அனுகூலமானவை இல்லை. ஆகவே எப்படி சீர்திருத்தம் செய்வீர்கள்? இவைகளில் செய்யும் சீர்திருத்தம் இவை இன்னும் நெடுங்காலத்திற்கு நிலைத்து இருக்கத்தான் பயன்படுமே தவிர, மாறுதலை உண்டாக்க முடியாது. வேகமாகப் போவதற்கு இடையூறாய் கடவுளும், மதமும், அரசாங்கமும் குறுக்கே போடப்படுகின்றன. இவற்றை ஒழிக்க வேண்டும். நாம் பொதுநலச் சேவைக்காரர்கள் அல்ல. புரட்சியாளர்கள். நமக்கு சீர்திருத்தக்காரர்களும் பொதுநலச் சேவைக்காரர்களும் பெரிய விரோதிகள், தலைகீழாய்க் கவிழ்ப்பதுதான் புரட்சி. இது குற்றமானால் இதை ஒவ்வொருவரும் தஷாலாகச் செய்ய வேண்டியதுதான்'' (ஆனைமுத்து தொகுப்பு நூல் 509-512)

கட்சிக்குள் எற்பட்ட கடுமையான விவாதம் ஒன்றின்போது பெரியார் கூறியது: ''பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் வேலை செய்யாமல் சமூக முற்போக்கு எப்படி ஏற்படும்? ஒரு சமூகத்திற்கு பொருளாதாரமும் அரசியலும் அவசியமானது அல்லவா? இந்த இரண்டையும் விட்டுவிட்டுச் செய்யும் முற்போக்கிற்காக நமது சுயமரியாதை இயக்கம் தேவையே இல்லை. சும்மா அலங்காரமாக, வேடிக்கையாக, புராணமுட்டாள் தனத்தையும், பார்ப்பனச் சூழ்ச்சியையும் பேசிக் காலம் கழிப்பது மாத்திரமே சுயமரியாதை இயக்கம் என்றால் அது அழிந்து போவதே மேலான காரியம் என்று சொல்வேன்'' (எ. எஸ். கே. நூல் பக்கம் 11, இவர்தான் பெரியார்) குடியரசு இதழில் வந்த அறிக்கை (31-3-35) சுயமரியாதை இயக்கம், சட்டமறுப்பு இயக்கம் அல்ல. சர்க்காரோடு ஒத்துழையாமை இயக்கம் அல்ல. சட்டத்தையும்

சமாதானத்தையும் மதிக்காத இயக்கம் அல்ல. சுயமரியாதை இயக்க வேலைத்திட்டம் சட்ட வரம்பிற்குட்பட்டே நடக்கும்.'' (ஆனைமுத்து நூல்)

2. இந்த மேற்கோள்களிலிருந்து பெரியாரின் இறுதி இலக்கு சமதர்மத்தை நோக்கிய புரட்சிகரமான மாற்றம். இந்த மாற்றத்திற்கு குறுக்கே இருப்பவை சாதி மதம், இவற்றோடு பார்ப்பனியம், அரசு, பொருளாதாரம், அதாவது முதலாளியம், நிலவுடைமை முறையையும் சேர்த்துக் கொள்ளலாம். அரசுத் தடை வந்தவுடன் பெரியார் தன் சுயமரியாதை இயக்கத்தைச் சட்டவரம்பிற் நட்பட்டதாக மாற்றிக் கொள்கிறார். தனது இயக்கத்தைச் சீர்திருத்தவாத இயக்கமாக அமைத்துக் கொள்கிறார். இது பெரியாரின் குறுகிய எல்லை. விரிந்த எல்லை சமதர்மம். அவ்வப்போது குறுகிய எல்லையிலிருந்து விடுபட்டு சட்டத்தையும் அரசையும் மீறிச் செயல்படுபவராகவும் பெரியார் இருந்தார்.

இதற்காகப் பெரியாரை எப்படி விமர்சனம் செய்யலாம்? சமதர்மக் கொள்கையை ஏற்றுக் கொண்டவர்கள், தொடக்கத்தில் பெரியார் மீது அமர்ந்து சவாரி செய்ய விரும்பினார்கள். அரசுத்தடை வந்தவுடன் காங்கிரசுக்குள் நுழைந்து சோசலிசக் கட்சி என்ற பெயரில் தங்கினார்கள். இன்னொரு கட்டத்தில் நேருவின் சோசலிசத்தை ஏற்றார்கள். புரட்சிப் பாதையைக் கைவிட்டார்கள். இன்று இறுதியாகப் பார்க்கும் பொழுது சோவியத் யூனியனிலும் சரி, இந்தியாவிலும் சரி, மார்க்சியம் என்பது பெருமளவில் முதலாளியக் கூறுகளை உள்வாங்கிக் கொண்ட கோட்பாடாகவே இருக்கிறது. பொருளாதார வாதம், தொழிற்சங்க வாதம், அரசியல் அதிகாரவாதம் ஆகியவை இவ்வாறு மார்க்சியத்தை நம் சூழலில் முடக்கியவை. மார்க்சியர் செய்ய வேண்டிய முதன்மையான செயற்பாடு சமதர்மம் நோக்கிய சமூக மாற்றம். வர்க்கப் போராட்டம், புரட்சிக்கான கட்சியமைப்பு முதலிய கருத்துருவங்கள், செயற்பாடுகள் மூலமே இந்தச் சமூக மாற்றம் சாத்தியம். இதற்கான துணைச் சக்தி பெரியாரியக்கம். ஆகவே, மார்க்சியர் தோற்ற இடத்தில் பெரியார் வெற்றி பெறுவாரென்று எதிர்பார்க்க வேண்டியதில்லை. ஆனால் பெரியார் செய்து கொண்ட சுயவிமர்சனத்தின் படி பெரியாரியத்தை அர்த்தப்படுத்தும் பொழுது, அவர் தீவிரப்படுத்திய சாதி மத எதிர்ப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு ஆகிய முனைகளை முற்றான தனிநிலைகளைக் கொள்வது, பெரியாரி

யத்தைக் குலைக்கும். மாறாக, சமதர்மம் என்ற இலக்கி ருந்து சாதி, மத, பார்ப்பனிய எதிர்ப்பு என்ற முனைகளை வேறுபடுத்திவிடக்கூடாது. இந்த முனைகளில் மட்டும் பெரி யாரியத்தை முடக்கினால், அப்புறம் பெரியாரியம் முதலாளிய, அரசு அதிகார எல்லைக்குள் சுழல்வதாகச் சுருங்கிவிடும். வீரமணியின் தலைமையில் பெரியார் இயக்கம் இப்படி முதலாளியமாகத்தான் சுருங்கிக் கிடக்கிறது. இப்படிச் சுருக்கு வதன் மூலம் பெரியாரியத்தை மார்க்சியத்திற்கு எதிரான போக்கு என மாற்றியிருக்கிறார்கள். முதலில் சமூகமாற்றம், பிறகு பொருளியல் மாற்றம் என்று இவர்கள் தத்துவம் வகுக் கிறார்கள். இப்படிக் கூறுவதற்கு ஆதாரமாக பெரியாரிலிருந்தே சில மேற்கோள்களை எடுத்துக் கொள்ள முடியும். இப்படி விளக்குவதன் மூலம் சாதி, மதம், பார்ப்பனியம் ஆகியவற்றை சமூக மாற்றத்திற்குத் தடையான மூலச்சக்திகள் என உருப் பெருக்கிக் காட்ட முடியும். இந்தியச் சமூகமே சாதியச் சமூகம் என்ற வரையறை இதற்குப் பெரிதும் பயன்படும். மார்க்சியர் கூட இன்று இந்த வரையறைக்குள் சரிந்துள்ளனர். இதனால் மார்க்சியமும் தனக்குள் சுருங்கிப் போயுள்ளது. இதற்கு மாறாக சமதர்மம் பற்றிய பெரியாரின் உறுதியான கருத் துக்கள் என்ற ஆதாரத்தில் பெரியாரியத்தை மறு உருவாக்கம் செய்வது நம் காலத்தின் கடமை. சமதர்மம் என்ற ஆதாரத் திற்கு ஒத்த முறையில் சாதி, மதம், பார்ப்பனியம், ஆகிய வற்றைப் பெரியாரிலிருந்து விளக்க வேண்டும். சமதர்மம்தான் முற்றான கோட்பாடு. இடையில் சாதி, மதம், பார்ப்பனியம், அரசு அதிகாரம், முதலாளியம் இவற்றோடு ஏகாதிபத்தியம் ஆகியவற்றையும் சேர்த்துச் சொல்ல வேண்டும் இவை பெரி யாரின் முக்கிய முனைகள்.

3. பெரியாரின் கோட்பாடு என எதைச் சொல்லலாம்? பெரியாரிடம் கோட்பாட்டாக்கம் இல்லையா? என்ற கேள்வியை எடுத்துக் கொள்ளலாம். பெரியாரின் கோட்பாடு அதாவது பெரியாரியம் என்பது சுயமரியாதை அல்லது தன்மானம்தான். இதுதான் பெரியாரின் தத்துவம். சுயமரியாதை ஒரு கருத்து மட்டுமே என்று சிலர் கருதலாம். ஆனால் சுயமரியாதை என்ப தற்கு பெரியார் தந்த விளக்கங்கள் மிக விரிவானவை. ஒரு பெண்ணுக்கு எது சுயமரியாதை? தொழிலாளிக்கு எது சுயமரியாதை? திராவிடனுக்கு எது சுயமரியாதை? தமிழனுக்கு எது சுயமரியாதை? இப்படியெல்லாம் நிறைய கேள்விகளை எழுப்புகிறார். அடிமைத்தனம் எந்த வகையிலும் கூடாது

என்கிறார். சாதி, மதம், இனம், மொழி, தேசம், தேசியம், என்று எதற்கும் மனிதன் அடிமைப்படக்கூடாது. மனிதன் இப்படி தன்மானமுடையவனாக இருக்க வேண்டும். தேசபக்தி, சுரணத்தனம் என்றெல்லாம் பேசுகிறார்.

பெரியாரிடமிருந்து ஒரு மேற்கோள்: (நிறப்பிரிகை - 6 ராஜன்குறை கட்டுரை, பக்கம்-39)

"பொதுவாக, சுயமரியாதை என்கின்ற ஓர் இஞ்ஜினைப் பலப்படுத்தி, சரியாக ஓடத்தகுந்த சக்தியை உண்டாக்கி வைத்துவிட்டால், பிறகு எந்த எந்திரத்தைக் கொண்டு அதோடு இணைத்துத் தோல்பட்டையை மாட்டிவிட்டாலும் அது தானாகவே ஓடும். அது இன்னவிதமான இயந்திரமாகத் தான் இருக்கவேண்டும் என்கின்ற கவலை யாருக்கும் வேண்டியதில்லை என்றே சொல்கின்றோம். மற்றபடி எல்லா உணர்ச்சிகளையும் விட சுயமரியாதை உணர்ச்சியே மேலானதும் மதிக்கத் தக்கதுமாகும் என்பதின் தத்துவத்தை உணர்ந்தவர்களுக்கு இந்த இயக்கத்தில் உண்மையான சந்தேகமே தோன்ற இடமிருக்காது. அது இன்றைய தினம் வேண்டுமானால் ஏதோ ஒரு சிறு வகுப்பாருடன் போராடத் தோன்றியதாகத் தோன்றலாம். இது அல்ல அதன் இலட்சியம். ஒரு இயந்திரத்தை சுழற்றும்போது முதலில் சுற்றும் சிறு வேகம் போல் இன்று ஒரு சிறு வகுப்பார் உணர்ச்சியோடு போராடுவதாகக் காணப்படுவது; மற்றபடி பின்னால் அது உலகத்தையே ஒன்றுபடுத்த - உலக மக்களையே ஒரு குடும்ப சகோதரர்களாகச் செய்யும் முயற்சியின் போதுதான் அதன் உண்மைச் சக்தியும் பெருமையும் வெளியாகும்.

(குடியரசு-தலையங்கம் 17-2-1929)

இந்த மேற்கோளில் சுயமரியாதையைத் தத்துவம் என்றும், இதன் விரிவு உலக சகோதரத்துவம் என்றும் பெரியார் குறிப்பிட்டிருப்பதை நாம் கவனிக்க வேண்டும். சகோதரத்துவம் என்பது இங்கு சமதர்மம்தான். பகுத்தறிவு என்பதை பெரியாரின் தத்துவம் எனச் சொல்வது பொருந்தாது. பகுத்தறிவு என்பது பகுத்தாய்தல். இது ஆய்வு முறை மட்டுமே. காரணம், காரியம், எதார்த்தம், தோற்றம், மாயை, மனிதன், விலங்கு என்றெல்லாம் இந்த ஆய்வு செயல்படும். சில சமயம் மனிதனை விட விலங்கு மேல் என்று இந்த ஆய்வு

முறை சொல்லும். கை, கால், முதலிய உறுப்புகள் மட்டுமே உள்ளன- மனிதன் இல்லை என்று இந்த ஆய்வு முறை சொல்லும். இப்படி குறுக்கும் நெடுக்குமாக மேலும் கீழுமாக இந்த ஆய்வுமுறை தாவும், தடுமாறும். எனினும் இது விடாப் பிடியாக ஒன்றை நிரூபணம் செய்யும். அதுதான் சுய மரியாதை.

புலனறிவு, கருத்தாக்கம் என்பனவற்றின் வழியே இயங்கி, இறுதியில் உருவாகும் கோட்பாடு சுயமரியாதை. ஆய்வு முறை எனப்படும் பகுத்தறிவு, பெரியாரின் மெய்கான் முறை/ அறிதல் கொள்கை மட்டுமே. சுயமரியாதை என்பது ஒரு முழு முற்றான கோட்பாடு ஆகுமா என்று நாம் விவாதிக்கலாம். மனிதன் தன்மானம் உடையவனாக இருப்பதென்றால், சமதர்மியாக இருக்க வேண்டும் என்பது பெரியாரின் அடிப் படையான கருத்து. அரசு அதிகாரம், முதலாளியம் என்ற வரையறைகளுக்குள் மார்க்சியர் இயங்கிய மாதிரிதான் பெரியாரும் இயங்கினார். இந்த வரையறைகளை ஒப்புக் கொண்டவன் தன்மானம் / சுயமரியாதை இருப்பவனாக எடுத்துக் கொள்ள முடியாது. அரசு அதிகாரம், முதலாளியம் ஆகிய வரையறைகளைத் தகர்க்காமல் ஒருவர் தன்மானம் உடையவராகச் சொல்லிக் கொள்ளவும் முடியாது.

(4) இன்றைய நிலையில் எவை மையப்படுத்த வேண்டும் என்பது பற்றி.

இன்று சந்தைப் பொருளாதாரம், தாராளமயமாக்கல், அரசு உடைமையை தனியார்மயமாக்கல், உலகச் சந்தை யோடு இந்தியாவை இணைத்தல் - இப்படியெல்லாம் தீவிர மாகச் செயல்படுவது முதலாளியம். இதற்கு ஒத்த முறையில் செயல்படுவது அரசு அதிகாரம். இவை இரண்டும் ஏகாதி பத்திய நலன்களை தனக்குள் உள்வாங்கிக் கொண்டு தீவிர மாகச் செயல்படுகின்றன. இதற்காகவே இராணுவப் பெருக்கம், அரசு அதிகாரத்தை நவீனப்படுத்தல், நவீன அறிவியல் தொழில்நுட்பங்களை இறக்குமதி செய்தல், பசுமைப் புரட்சி - இப்படி இன்று செயற்பாடுகள் அதிகரிக்கின்றன. தேசிய இன விடுதலைக் குரல்கள் அழிக்கப்படுகின்றன. தனி மாநிலக் கோரிக்கைகள் அமுக்கப்படுகின்றன. மைய அரசு வலுவாக நவீன அரசாக உருவாக்கப்படவேண்டும் - இதுதான் இந்தியாவை ஒரு தேசமென வைத்திருக்கும். எதிர்ப்பு இயக்கங் களை, தன்னுரிமை இயக்கங்களை இது ஒடுக்கும். தொழி

லாளர், உழவர் போராட்டங்களை, சோசலிசக் கோரிக்கைகளை இது ஒடுக்கும். இப்படி ஒரு மைய அரசு தேவை. மாநிலங்களை மொழிவாரி அடிப்படையில் இல்லாமல் வேறு அடிப்படைகளில் பிரித்துவிடவேண்டும். பஞ்சாயத்துகளின் நிர்வாகத்தில் மைய அரசு தலையிட வேண்டும். முதலாளியம் தான் குறிக்கோள். இதன் மூலம் ஆதிக்கம் பெறுவது ஏகாதிபத்தியம். இதுதான் இன்றைய நிலவரம். இந்திய ஒருமை, வலுவான மைய அரசு, என்ற அடிப்படையில்தான் இந்துத்துவம் எழுந்திருக்கிறது. இது தமிழனின் தன்னுரிமைகளை அழிக்கும். பகுத்தறிவு இயக்கத்தை ஒடுக்கும். தமிழனின் வரலாற்றை, தமிழ்மொழியை அழிக்கும். இது இன்றைய சூழல்.

இந்த அடிப்படையான பிரச்சினை, ஏகாதிபத்திய நலன்களை உட்கொண்ட அரசு அதிகாரம் / முதலாளியம். இந்துத்துவம் என்ற பேச்சு, முஸ்லீம்களை ஒடுக்குவதற்காக மட்டுமல்ல, முஸ்லீம்களை ஒடுக்குவதாகத் தொடங்கி, தொழிலாளிகள், உழவர்கள், தாழ்த்தப்பட்டவர், பிற்பட்ட சமூகத்தினர், பெண்கள் ஆகிய அனைவரையும் ஒடுக்குவதற்கானதும்தான். மதம் என்பது இங்கு அரசியலாக, பொருளியலாக மாற்றப்படுகிறது. அதாவது, அரசியலையும் பொருளியலையும் மறைக்க இந்த மதவாதம் பேசப்படுகிறது. அரசு ஆதிக்கத்தை, முதலாளியத்தை நிறுவுவதற்கான கருத்தியல்களில் ஒன்று பார்ப்பனியம். அரசு அதிகாரத்தை, முதலாளியத்தை நிறுவிக்கொள்வதில் உயர்சாதிகள் ஒத்துழைக்கும். தாழ்த்தப்பட்டவர்களை ஒடுக்கும். பிற்பட்டவர்களின் கோரிக்கைகளை அரசு அதிகாரம் உள்வாங்கிக் கொள்வதன் மூலம் அவர்களைத் தன் கட்டமைப்புக்குள் கொண்டுவரலாம். இறுதியில் தொழிலாளர், உழவர்கள், தாழ்த்தப்பட்டவர், பெண்கள் ஆகியவர்கள் மீது கட்டப்படுவது அரசு அதிகாரம், முதலாளியம். பெரியாரின் சமதர்மப் பார்வையை ஆதாரமாகக் கொண்டால் மட்டுமே இப்படி விரிந்த பார்வையைப் பெறமுடியும். சமதர்மத்துக்கான இயக்கங்கள் தகர்ந்த நிலையில்தான் சாதி மதச்சக்திகள் இன்று தமக்குள் திரள்கின்றன. முதலாளியத்தை ஒழித்து மக்கள் நலன்களுக்கு ஒத்த முறையில், தொழில்துறை, வேளாண்மையை உருவமைத்திருக்க முடியுமானால், சாதிகளும் மதங்களும் தம் ஆதிக்கம் குறைந்திருக்கும். புரட்சிக்கான சக்திகள் ஒடுக்கப்பட்டது முதலாளியத்திற்குச் சாதகமானது. இதைச் செய்தது அரசு அதிகாரம். புரட்சிகரமான சமூக மாற்றம் மக்களின் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம்

போன்ற பல சிக்கல்களைக் குறைத்திருக்கும். இதற்கு மாறாக முதலாளியம் உச்ச அளவில் சுரண்டலை அதிகரித்துள்ள நிலையில், அரசு அதிகாரம் உச்ச நிலையில் ஒடுக்குதலைத் திணித்திருக்கிற நிலையில் மக்களின் வேதனைகள் அதிகரிக்கின்றன. அறிவு தடுமாறுகிறது. ஆகவே கோயில்களையும், புதிய புதிய கடவுளர்களையும் தேடிச் செல்கின்றனர். விடுதலைக்கான சக்திகள் திரண்டு செயல்படாத நிலையில், கடவுளர்களையும் தலைவர்களையும் மக்கள் தேடிச் சென்று காலில் விழுந்து வழிபாடு செய்கின்றனர். நவீன முதலாளிய வளர்ச்சிக்கு கணக்கியல் அறிவு, கணிப்பொறிகள் இயக்கம், நவீன தொழில் நுட்ப அறிவு தேவைப்படுகிறது. தேவைப்படும் இவ்விடங்களில் பார்ப்பனர் இடம் பெறுகின்றனர். சமூகச் சிக்கல் மிகுந்த நிலையில் சோதிடர்களைப் போலவே புரோகிதர்களுக்கும் வாய்ப்புகள் கிடைக்கின்றன. சுரண்டலும் ஒடுக்குமுறையும் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டிருக்கிற சூழலில் தான் பார்ப்பனியம், சாதி, மதம் என்ற பிரச்சினைகளைப் பார்க்க வேண்டும். சுரண்டலும் ஒடுக்குமுறையும் முதன்மையாக அரசு அதிகாரத்தின் மூலமும் முதலாளியத்தின் மூலமும் தான் நடைபெறுகின்றன. இவற்றோடு ஒத்துழைக்கும் முறையில்தான் சாதிகளும் மதங்களும் பார்ப்பனியமும் விமர்சனத்துக்குள்ளாக்கப்பட வேண்டும். இவை மூன்றையும் முற்றான தனி நிலைகளென பிரித்துப் பார்ப்பதன் மூலம், நம் சிந்தனையாளர்கள் மீண்டும் பார்ப்பனியம் என்று சிலர் சொல்கிற இந்தச் சுழல் வட்டத்திற்குள் தான் இயங்குகின்றனர். இப்படிப் பார்ப்பதன் மூலம் எந்தச் சிக்கலும் தீராது. தெளிவும் ஏற்படாது. பெரியாரியத்தை இப்படி குறைக்கக் கூடாது. அரசின் அடக்குமுறைக்கு ஒத்து, சீர்திருத்த இயக்கமாகத் தன்னை மாற்றிக் கொண்ட பெரியாரியத்தை இப்பொழுதேனும் தனக்கு இட்டுக் கொண்ட முன்னைய தளையிலிருந்து விடுவிக்க வேண்டும். பெரியாரின் புகழ் பாடி, பெரியாரை சாதி எதிர்ப்பு, மத எதிர்ப்பு, பார்ப்பன எதிர்ப்பு ஆகியவற்றினுள் முடக்குவதன் மூலம் பெரியாரின் ஆற்றலை இன்றைய சூழலை மாற்றுவதற்கேற்ற முறையில் பயன்படுத்த முடியாது. சாதி எதிர்ப்பு, மத எதிர்ப்பு, பார்ப்பன எதிர்ப்பு இவை மூன்றையும் ஆதாரமாக்கினால் முதலாளிய எல்லையைக் கடக்க முடியாது.

---

குறிப்பு : 'நிறப்பிரிகை'யால் 2-5-93ல் ஏற்பாடு செய்யப்பட்ட பெரியாரியம் - கூட்டு விவாதத்தின்போது இக் கட்டுரை முன்வைக்கப்பட்டது.

# 8

# சுயமரியாதையும் சமதர்மமும்

சுயமரியாதை பற்றியும் சமதர்மம் பற்றியும் பெரியாரின் சில உரைகளையும் கட்டுரைகளையும் திரும்ப வாசிக்கிறபோது அங்கங்கே சில கருத்துக்கள் நமக்குள் ஆழமாகப் பதிகின்றன. பெரியாரின் சுயமரியாதை உணர்விலிருந்து சமதர்மத்தைப் பிரித்துப் பார்க்கவே முடியாது. அவரது சுயமரியாதை உணர்வை, தொடர்ந்து ஆழமாகப் பொருள்படுத்திக் கொண்டே சென்றால், சமதர்மம் என்ற ஊற்றை நாம் அவருக்குள் காண முடியும். இறுதியில் இப்படிக் கேட்கலாம்; மனிதன் தன் சுயமரியாதையை எப்பொழுது தனக்கு நிறைவாகப் பெறுவான்? இதற்கான பதில் - பெரியாரின் பதில் 'சமதர்மத்தில் தான் மனிதன் தன் சுயமரியாதையை நிறைவாகப் பெறுவான்.'

மார்க்சு, எங்கல்சு எழுதிய கம்யூனிஸ்ட் கொள்கை அறிக்கையை மொழிபெயர்த்து பெரியார் வெளியிட்டார். இது குறித்து அவர் முன்னுரை எழுதினார். சமதர்மம் என்ற கருத்து, பல நூற்றாண்டுகளாக இருந்து வருகிறது என்று குறிப்பிட்டார். ஜாரின் கொடுங்கோன்மைக்கு எதிராக சமதர்மப் புரட்சி ஏற்பட்டதன் நியாயம் பற்றி பெரியார் எழுதினார். உடனடியாக ஒன்றைக் குறிப்பிடுகிறார். ரஷ்யாவைக் காட்டிலும் இந்தியாவுக்குத்தான் இந்தப்புரட்சியின் தேவை அதிகம் என்றார். ரஷ்யாவுக்கு முன்பே இது இந்தியாவுக்கு வந்திருக்கவேண்டும் என்கிறார். இக்கட்டுரையில் வியப்புக்குரிய ஒரு குறிப்பு - ரஷ்யாவில் பார்ப்பனர்கள் என்று குறிப்பிட்டு வளைவுக்கோட்டில் பாதிரியார் என்று குறிப்பிடுகிறார். இந்தியாவில் இந்தப் போக்கு

---

☐ தோழர் ஆனைமுத்து அவர்கள் தொகுத்துத் தந்திருக்கும் பெரியார் சிந்தனைகள் : முதல் தொகுதி: சுயமரியாதை இயக்கம் (பக்கம்: 448 - 541) மூன்றாம் தொகுதி: சமதர்மம் (பக்கம்: 1675 - 1705), பொதுவுடைமை (பக்கம் 1706 - 1717) ஆகிய பகுதிகள் இக் கட்டுரைக்கான ஆதாரங்கள்.

வராது தடுத்தவர்கள் பார்ப்பனர்கள், மதவாதிகள் என்கிறார். கடவுள், சாதி என்றும் குறிப்பிடுகிறார். தடுத்தது இந்தச் சக்திகள் தானா என்றெல்லாம் ஆய்வைப் பிறகு வைத்துக் கொள்ளலாம்.

சமதர்மத் திட்டம் பற்றி, இத் திட்டத்தின் பல அம்சங்கள் பற்றி பெரியாரின் சில கட்டுரைகள் இருக்கின்றன. பிரிட்டிஷ் காரர்களின் உடைமைகளை தேசம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்கிறார். இழப்பீடு கூடாது என்கிறார். முதலாளிகளின் சொத்துக் களை தேசம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்கிறார். அரசு எல்லாவற்றையும் நிர்வாகம் செய்யவேண்டும் என்கிறார். கல்வி, மருத்துவ வசதி, முதுமைக் காலத்திற்கு உதவி என்றெல்லாம் பேசுகிறார்.

சமதர்மத் திட்டம் வகுத்ததில் சிங்காரவேலருக்கு பங்கு உண்டு என்பதை நாம் அறிவோம். சுயமரியாதை அமைப் பினுள் சமதர்ம இயக்கத்துக்கு இடம் தரப்பட்டது. தமிழகம் முழுவதும் சமதர்மக் குழுக்கள் இருந்தன. ரஷ்யாவுக்குச் சென்று வந்தபிறகு சமதர்மநோக்கு பெரியாரிடம் தீவிரம் பெற்றது. இவையெல்லாம் நாம் முன்பே அறிந்தசெய்திகள். சிங்காரவேலர் வகுத்துத்தந்த சமதர்ம திட்டத்தை சுயமரியாதை இயக்கம் ஏற்றுக்கொண்டது. சுயமரியாதைக்கும் சமதர்மத்துக்கும் வேறு பாடு கற்பித்து காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் விமர்சனம் செய்தபொழுது, பெரியார் மறுத்துப் பேசியிருக்கிறார். கோவையில் பேசிய பெரியார், சமதர்மத்தை ஏற்படுத்துவதுதான் நம் வேலை. இது அழிப்புச் செயல்தான். இதை உற்சாகமாகச் செய்ய வேண்டும் என ஆவேசத்தோடு பேசியிருக்கிறார்.

முன்பே எழுதிய கட்டுரை ஒன்றில் ஜமீன்தார்கள் ஆங்கிலேயர் ஆட்சியின் போது, நிலவுடைமை அதிகாரம் பெற்ற வரலாற்றை தொகுத்துச் சொல்கிறார். ஜமீன்தார்கள் ஒழிக்கப்படவேண்டியவர்கள் என்று சொல்கிறார். உலகப்போர் நடந்த காலத்தில் வியாபாரிகள் அடித்த கொள்ளை பற்றிப் பேசுகிறார். லட்சாதிபதிகளும் கோடீஸ்வரர்களும் உருவான கதையைச் சொல்கிறார். இவர்களிடமுள்ள செல்வத்தைப் பறிக்க வேண்டிய தேவைபற்றி சொல்கிறார். திருடாமல் செய்வதன் மூலம் திருடனைத் திருத்த முடியும், மனிதனாக்க முடியும் என்று பெரியார் சொல்கிறார். இதை ஒரு உருவகமாக நாம் கொண்டால், பல பரிமாணங்களில் நாம் இதைப் பொருள்படுத்த

முழுவதும் பணக்காரனிடமிருந்து அவனது செல்வத்தைப் பறித்தால் தான் அவனை மனிதனாக்க முடியும். நிலவுடைமையாளனிடமிருந்து நிலத்தைப் பறித்தால் தான் அவனை மனிதனாக்க முடியும். மனிதன் என்பவன் இறுதியாகப் பார்க்கும்போது தன் மானமுடையவன். தனது திட்டம் பொதுநலச் சேவையா என்று கேள்விக்கு, இல்லை என்றும் பெரியார் சொல்கிறார். திருடனுக்கும், திருட்டு கொடுத்தவனுக்கும் பொதுவாக நான் சேவை செய்ய முடியாது என்கிறார். ஏழைக்காகத் தான் சேவை செய்ய முடியும் பணக்காரனுக்காக சேவை செய்ய முடியாது என்கிறார்.

சுயமரியாதை இயக்கத்தில் பெரியார் ஈடுபட்ட தொடக்க காலத்திலேயே ஒரு முக்கியமான கருத்தை முன்வைக்கிறார். பணக்காரர்கள், அரசாங்க அதிகாரிகள், அரசியல்வாதிகள், மதவாதிகள் இவர்கள் சமூகத்தில் 5 சதவிகிதத்தினர். இவர்கள் தம் நலத்துக்காகத்தான் உத்தியோகம் என்றும், கட்சி என்றும் அரசியல் என்றும் பேசுகிறார்கள். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் சுதந்திரமா, வெளியில் சுதந்திரமா என்றெல்லாம் இவர்கள் பேசுவதும் இந்தக் கருத்தில்தான். காங்கிரஸ் கட்சியையும் காந்தியையும் ஒழித்தால்தான் சமதர்மம் சாத்தியம் என்று பின்னாளில் பெரியார் பேசினார். சமூகத்தைத் திருத்த நினைக்கிறவன் சட்டசபைக்குள் செல்லக்கூடாது என்றும் பேசியிருக்கிறார். சட்டத்தின் மூலம்தான் சிலவற்றைத் திருத்த முடியும் என்றும் கூட பெரியார் பேசியிருக்கிறார்.

இங்கு நாம் கவனிக்கவேண்டிய முக்கியமான உண்மை என்னவென்றால், அரசியல்வாதி தனது நன்மைக்காகத்தான் அரசியலில் ஈடுபட்டிருக்கிறான். அரசு உத்தியோகத்திற்கு செல்பவன் தனக்குத்தான் நன்மை செய்து கொள்கிறான். அரசியல் என்றும் சுதந்திரம் என்றும் பேசுவது தன்னலத்திற்காகத்தான். பிரிட்டிஷ்காரன் போனபிறகு அந்த இடத்தில் அமர்ந்துகொண்டு இவர்கள் இதைத்தான் செய்வார்கள். மீதி 95 சதவிகித மக்களின் நலன் இவர்களுக்கு முக்கியமில்லை. 95 பேரை இவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். அந்தக்கால நிலைமைகளில் பெரியார் இந்த உண்மைகளை சரியாகவே சொல்லியிருக்கிறார். அரசு அதிகாரம், கட்சி அரசியல் ஆகியவை மக்களைக் கவனிக்கவில்லை. பெரியாரின் பார்வையைத் தொடர்ந்து சென்றால், நம் கால நிலவரங்கள் நமக்குக் கூடுதலாகப் புரியும்.

இன்று மக்களை வைத்தே, அவர்கள் தம் அதிகாரக் கோட்டையை இறுக்கமாகக் கட்டியிருப்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

இந்த இடத்தில் நாம் நிறைய சொல்லவேண்டியிருக்கிறது. பெரியாரின் தீட்சண்யமான பார்வையை ஆதாரமாக வைத்துக் கொண்டால்தான் நாம் இப்படிப் பேசமுடியும். பெரியார் அரசியலை மதிக்கவில்லை. சட்டசபைக்குச் செல்வதை விரும்ப வில்லை என்றெல்லாம் பேசியவற்றை நாம் தவறாகவே புரிந்து கொள்வோம். சட்டங்கள் மூலம்தான் மக்களுக்குச் சில நன்மைகள் செய்ய முடியும். இதை அரசாங்கம் தான் செய்ய வேண்டும் என்று பெரியார் கூறுவதை, அவரோடு நாம் சற்று சென்றுதான் பொருள்படுத்த முடியும். அரசு பற்றி பெரியார் தெரிந்துகொள்ளவில்லை என்று இன்றும் திறனாய்வுகள் உள்ளன. அரசு என்பது பிறிதொரு காலத்தில் உதிர்ந்துவிடும் என்ற கருத்து உடையவர்களும் இடைக்காலத்தில் அரசு அதிகாரம் பற்றி பேசத்தான் வேண்டியிருக்கிறது. அரசாங் கத்தை நிர்ப்பந்தப்படுத்தி சட்டத்தின் மூலம் சில நன்மைகள் பெற்றுக்கொள்ளமுடியும் என்பது பற்றித்தான் பெரியார் கூறுகிறார். சலுகை பெறுவதைப் பெரியார் இகழ்ந்தே பேசி யிருக்கிறார். வகுப்புவாத உரிமை என்று உத்தியோகத்தில் அமர்ந்து கொள்வதை ஆதரிக்கிறபொழுதே விமர்சனமும் செய்கிறார்.

பெரியாரைப் பொருத்தவரை, சமதர்ம உணர்வின் ஆதா ரத்தில் சுயமரியாதைக் கொள்கையை எடுத்து உரைத்தவர். மதம், சாதி, பார்ப்பனர் என்று விடாப்பிடியாகப் பேசுகிறார். பிறவி யிலேயே முதலாளிகள் ஏற்பட்டுவிடுவது பற்றியும் பேசுகிறார். நாம் இவற்றையெல்லாம் கவனமாக இருந்து பொருள்படுத்த வேண்டும். சாதியா வர்க்கமா, பார்ப்பனியமா முதலாளியமா என்ற எதிர்நிலைகளில் விலகிப் போவதால் இன்று நமக்கு ஒரு பயனும் இல்லை. முதலாளிகள் இன்று மதத்தை தம் தேவைக் காகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். சாதி உணர்வைப் பயன் படுத்திக் கொள்கிறார்கள். வாழ்க்கை மிகச் சிக்கலாகியிருக்கிற சூழலில் கடவுள்களுக்கும் மதத் தலைவர்களுக்கும் இன்று அதிகம் பெருமை ஏற்பட்டிருக்கிறது. சாதி உணர்வைப் பயன் படுத்தி தம்மை வளர்த்துக்கொள்பவர் உயர்சாதியினர்தான். பிற்படுத்தப் பட்டவர்களுக்கும் தாழ்த்தப் பட்டவர்களுக்கும் சாதியால் இன்று நன்மை இல்லை. சாதியால் இவர்களுக்குத் தப்

பெருமை இல்லை. இன்று கணிதம், கணிப்பொறி, நிர்வாகம் ஆகியவற்றுக்கு வாய்ப்புகள் அதிகரித்திருக்கின்றன. இந்த இடத்தில் அமர்ந்திருப்பவர் பார்ப்பனர்கள். சந்தைப் பொருளாதாரம் இவர்களுக்கு அதிக வாய்ப்புகளைத் தருகிறது. தன்னலத்தில் சுருங்கிவிட்டவர் பார்ப்பனர்கள். நாடு, மொழி என்ற அக்கறைகள் இவர்களுக்கு இல்லை. பார்ப்பனர் என்று மட்டுமில்லாமல், இன்று எவ்வளவோ பேர்களுக்கு இவற்றில் அக்கறை இல்லை.

சமதர்மம்தான் நமக்குத் தேவையான மைய உணர்வு. சுயமரியாதை என்று தொடங்கி சமதர்மத்தை நோக்கித்தான் நாம் இயங்க வேண்டும். பெரியாரிடமிருந்து சமதர்மத்தைப் பிரிக்கும் முயற்சி பெரியாரைக் குறைத்துவிடும். பெரியாரை முதலாளிகளுக்குச் சாதகமாக்கிவிடும். பெரியாரியம் பேசுபவர்களுள் முதலாளிய உணர்வு உடையவர்கள், சமதர்ம உணர்வு உடையவர்கள் என்று இருவேறு உணர்வுடையோர் இன்று உள்ளனர். எங்களுக்கும் சமதர்ம உணர்வு உண்டு என்று சொல்லி தம் முதலாளிய உணர்வை மூடிமறைத்துக்கொள்பவர்கள்தான் சாதி, மதம், பார்ப்பனியம் என்பவற்றில் முனைந்து நிற்கிறார்கள். இவர்களின் பெரியாரியம் இன்றைய சூழலில் நம்மைக் காப்பாற்றாது.

இன்றைய சூழல் பற்றித்தான் நாம் கருத்து செலுத்த வேண்டும். முதலாளியம், அரசு அதிகாரம், புதிய காலனியம் என்றெல்லாம் நாம் விரிவாகச் சொல்லவேண்டும். கல்வி, வேளாண்மை, மருத்துவம், தொழில் என்றெல்லாம் நாம் பேச வேண்டும். ஆங்கிலக் கல்வி, அலோபதி மருத்துவம், நவீன அறிவியல், தொழில்நுட்பம், அணுமின்திட்டங்கள் பசுமைப் புரட்சி, ஏற்றுமதிக்கான உற்பத்தி, விரைந்து செல்வதற்கான போக்குவரத்துச் சாதனங்கள் அன்னியக் கடன், வங்கிமோசடி, பொதுத்துறை நிறுவனங்களைத் தனியார்மயப்படுத்தல், நகர வசதி, போதைப் பொருட்கள், விளையாட்டுகள், தமிழின் அழிவு, அரசியல் சட்டம், மைய அரசு, தேர்தல் முறை, மாநில அரசு, இராணுவம் இப்படி 100 பொருட்கள் பற்றி நாம் பேச வேண்டும். இன்று சுரண்டலும், ஒடுக்குமுறையும் கடந்த 20 ஆண்டுகளுக்குள் பல மடங்கு அதிகரித்திருக்கின்றன. நம் வாழ்க்கை பெருமளவு நாசமாகியிருக்கிறது. நம்மை வைத்து பலர் சம்பாதிக்கிறார்கள். நம் நிலம், ஆறு, காடு. இயற்கை ஆகியவற்றை அழித்து பலர் வாழ்கிறார்கள். நம் வாழ்க்கையையும்,

பண்பாடுகளையும் தம் நலத்திற்காக இவர்கள் அழிக்கிறார்கள். கோழைத்தனமும் விகாரமும் உடையவர்களாக நம்மை மாற்றி விட்டார்கள். நாம் செல்லவேண்டிய திசையையும் இலட்சியங்களையும் அழிக்கிறார்கள். நம் குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் இவர்களால் ஆபத்து அதிகம். சாதிச்சண்டைகளை இவர்கள் தான் மூட்டுகிறார்கள். மதக்கலவரங்களை இவர்கள்தான் திட்டமிட்டு உருவாக்குகிறார்கள். லாட்டரி சீட்டு, மது விற்பனை என்று தொடங்கியவர்கள், பங்குப் பத்திரங்களை இன்று நம்முன் பரப்பி வைத்திருக்கிறார்கள். தமிழனுக்கு வாழ்க்கை இல்லை, மொழி இல்லை, தன்மானம் இல்லை என ஆக்கியவர்கள் இவர்கள் தான். இப்படிச் செய்தவர்களின் முகங்கள்பெயர்கள் உங்களுக்குத் தெரியும், கட்சிகளின் பெயர்கள் தெரியும். ஆம்! இவர்கள் தான் நம்மை அழிப்பவர்கள். பெரியார் பெயரைச் சொல்லி இவர்களைத் தாக்க முடியுமா? தாங்கலாமா என்ன செய்யலாம்?

சமதர்மத் திட்டத்தை பெரியார் முன்வைத்தார். அந்தத் திட்டம் இன்று நமக்குத் தேவையான திட்டம். நம் இயக்கம் சீர்திருத்த இயக்கம் அல்ல என்றார். சீர்திருத்தம் ஏழைகளை அதிகம் ஏழையாக்கும், பணக்காரர்களை பெரிய பணக்காரர்களாக்கும் என்றார். நம் திட்டம் புரட்சித்திட்டம் என்றார். சீர்திருத்தத்துக்கு எதிரானது இந்தத் திட்டம், பெரியாரியம் என்று பேசுபவர்கள் இன்று மையப்படுத்த வேண்டியது இந்தத் திட்டத்தைத்தான். இந்தத் திட்டத்தைச் செயல்படுத்துவதன் மூலம் நம் தன்மானத்தைப் பெறமுடியும். நாம் நம் நாட்டை, மொழியை, இயற்கையை, பண்பாட்டைப் பெறமுடியும்.

மேலும் சில

1. கடவுள், மதம், சாதி, மூடநம்பிக்கைகள், சடங்குகள், முதலியவை வரலாற்றில் எந்தக் கட்டங்களில், எந்தக் காரணங்களால் தோன்றின என்ற ஆய்வு பெரியாரிடம் இல்லை. வரலாற்றுக்கு வெளியே வைத்து இவைபற்றி பேசுகிறார். தன் காலத்தில் இவற்றின் தீங்கு காரணமாக இவற்றை முதன்மைப்படுத்தி - முற்றான முதன்மைப்படுத்திப் பேசுகிறார். இப்படிப் பேசுவது கருத்துமுதல்வாத சிந்தனை. இதுதான் பகுத்தறிவுவாதம் இந்தப் பகுத்தறிவுவாதம் பொருளியலோடு இணைக்கப்பட வேண்டும். இந்த இணைவுக்கான சில புள்ளிகளும் பெரியாரிடம் இருக்கின்றன. இவற்றிற்கு அழுத்தம் கொடுத்துப் பார்க்கவேண்டும்.

2. திருவள்ளுவர், கபிலர் முதலியவர்களால் சாதியை ஒழிக்க முடியவில்லை. சுயமரியாதை இயக்கம்தான் சாதியை ஒழிக்க முனைந்து இருக்கிறது என்கிறார் பெரியார். சாதியை முதன்மைச் சக்தியெனக் கருதுகிறார் பெரியார். சாதியோடு தொடர்புடைய பிற சிக்கல்களை பெரியார் பார்க்கவில்லை. ஆனால் தன் சாதியை உயர்த்திக்கொள்ள முயற்சி செய்பவர் களையும், பார்ப்பனனைப் போலவே தம் சாதிப் பெருமையில் மகிழ்ச்சி அடைகிறவர்களையும் பெரியார் கண்டிக்கிறார்.

3. மக்களுக்கு மான உணர்ச்சி, ஒற்றுமை தேவை. இதற்குத் தடையாக இருக்கின்றன என்ற முறையில்தான் சாதி, மதம், கடவுள்களை ஒழிக்கவேண்டும் என்கிறார் பெரியார். (நாமக்கல் உரை) மற்றபடி சாதி மதங்களை அழிக்கும் இயக்கம் சுயமரியாதை இயக்கம் அல்ல என்கிறார். பெரியாரின் திசை வழி சரியானதுதான்.

4. சுயராச்சியம் பேசுபவர், உத்தியோகம், பதவி, பட்டம், பெற்று அவற்றை தம் நன்மைக்குப் பயன்படுத்திக் கொள் கிறார்கள். பார்ப்பனர் அல்லாதார்க்கும் இவை தேவை. இவற்றைப் பெறுவதன் மூலம் சாதி ஒழிப்புக்குப் பாடுபடு கிறோமா, குடியானவர்களுக்கு உழைக்கிறோமா, சமத்துவ உணர்வை ஏற்படுத்துகிறோமா? உத்தியோகத்திற்கு வெளியில் என்ன செய்கிறோம் என்று கேட்கிறார் பெரியார். இவை தேவையான கேள்விகள். சுயமரியாதை என்று சொல்லும் போதே சமத்துவம், சுதந்திரம் பற்றிப் பேசுகிறார். குடியானவர் பற்றிப் பேசுகிறார். பெரியாரின் பார்வை விரிவாகத்தான் இருக் கிறது.

5. 1925. சமூகத் தொண்டையும் அரசியல் தொண்டையும் முற்றாகப் பிரிக்கவேண்டும் என்கிறார். தென்னிந்திய நல உரிமைச் சங்கத்திலும் இப்படி பிரிவு வேண்டுமென்கிறார். சட்டசபைக்குள் நுழைந்ததும் காங்கிரசுக்காரர்கள் கெட்டார்கள், அரசியல் யாரையும் அயோக்கியர் ஆக்கிவிடும் இத்தகைய ஏற்பாடு தேவை என்கிறார் பெரியார். சமூகத் தொண்டில் பெரியாரின் ஈடுபாடு உறுதியாகப் புலப்படுகிறது. அரசியலும் ஊழலும் எப்படியோ சம்பந்தப்பட்டுவிட்டன. கொஞ்சம் நெருங்கினால் கூட ஊழல் பற்றிக்கொள்கிறது என்கிறார் பெரியார்.

இக்கருத்துக்களின் உண்மையை நாம் மறுக்க முடியாது. பெரியாரை வாசிக்க நாம் பழகிக்கொள்ளத்தான் வேண்டும்.

# 9

# எது தமிழனுக்கான இலக்கியம்?

இன்றைய தமிழ்க்கவிதை என்பது தமிழனைப் பற்றிய, தமிழனுக்கான கவிதை. இன்றைய தமிழன் அனேகமாக எல்லாக் களங்களிலும் அடிமைப்படுத்தப் பட்டுள்ளான். அரசிய லிலும், பொருளியலிலும், கலாச்சாரத்திலும், கல்வி, கலை முதலியவற்றிலும் இவன் மீது செயல்படும் அதிகாரம் இவனை எல்லாவற்றிலிருந்தும் பிரித்து வைத்திருக்கிறது.

வரலாற்றிலிருந்து பெருமளவு இவன் துண்டிக்கப்பட்டுள் ளான். தமிழன், தமிழ் என்ற பெயர் சொல்லியும் இவனது வேர்கள் பிடுங்கப்பட்டுள்ளன. இவனுக்கு நாடு இல்லை. நிலம் இல்லை. ஆட்சி உரிமை இல்லை. இவனுக்கான கல்வி இல்லை, இவனுக்கான வணிகம் இல்லை என்று சொல்லும் படியாக இவன் நிலை உள்ளது.

கட்சிகளும் கட்சிகள் மூலம் நடைபெறும் ஜனநாயகமும் கட்சிக்காரர்களை - கட்சித் தலைவர்களை - அதிகாரத்தில் அமர்த்தியுள்ளன. அரசின் உயர் பீடங்களில் அமர்ந்துள்ள அதிகாரிகளுக்கு இவன் சேவகம் செய்கிறான். வணிகர்கள் தம் செல்வப் பெருக்கத்திற்கான கலாச்சாரத்தை இவன் மீது திணித்துள்ளனர். தொழில் வளர்ச்சி என்ற பெயரால் தமிழ ரல்லாத பிற தேசத்தவர்களால் சுரண்டப்படுகிறான். மைய அரசு இவனை மதிக்கவில்லை. மாநில அரசு இவனை மைய அரசுக்கு அடிமைப்படுத்துகிறது.

தேசிய ஒருமைப்பாடு என்ற முழக்கத்தால் இவன் தன் தேசமிழக்கிறான். கல்வி நிறுவனங்கள் இவனை மேலும் மேலும் அடிமைப்படுத்தக் கூடிய வல்லுநர்களை உற்பத்தி செய்கிறது. பத்திரிகைகள், தொடர்புச் சாதனங்கள் இவனை மேலும் அடிமைப்படுத்தக் கூடிய நோக்கில் பொய்களையும் பிரமைகளையும் இவனுக்கு ஊட்டுகின்றன.

மதவாதிகள் ஆளும் வர்க்கத்தின் பகுதியாகச் செயல்படு கின்றனர். இவனுக்கான தமிழ்க் கல்வி தரப்படுவதில்லை. ஆங்கிலக் கல்வி இவனை அடிமைப்படுத்துவதற்கானப் பிரமை களைப் படைக்கிறது. பசுமைப் புரட்சியால் இவனது விளை நிலங்கள் தொடர்ந்து நாசமாகின்றன.

இவனுக்கான காடுகள் தொழில் வளர்ச்சி என்ற பெயரால் முதலாளிகளால் அழிக்கப்படுகின்றன. இவனுக்கான கலாச் சாரம் என்று வணிகக் கலாச்சாரம் - ஆடம்பரப் பொருள்களை யும் திரைப்படங்களையும் பொழுதுபோக்குகளையும் உற்பத்தி செய்கிறது. மதம் அபினைத்தான் வழங்குகிறது. பெண்கள் சுக போகங்களுக்கு உரியவரென்ற மடமையை முதலாளியக் கலாச்சாரம் பரப்புகிறது.

அலோபதி மருத்துவர்கள் நோய்களை உற்பத்தி செய்கிறார் கள், வக்கீல்களும் நீதிமன்றமும் காவல்துறையும் ஏழை எளியவர்களைக் குற்றவாளிகளாக்குகிறார்கள். கல்வி ஏணியிலும் அதிகார ஏணியிலும் ஏறமுடியாத மக்கள் மடையர்களாகவும் போக்கிரிகளாகவும் சித்தரிக்கபபடுகிறார்கள்.

மக்களை அடிமைப்படுத்தும் செயலை அதிகார வர்க்கங் களுக்காக மத்தியதர வர்க்கம் முழு அளவில் செய்கிறது. பார்ப்பனர் மட்டுமல்லாமல் இடை நிலையிலுள்ள சாதிகளால் தாழ்த்தப்பட்டவர் மீது அடக்குமுறை அதிகரிக்கிறது. இவை யெல்லாம் இன்றைய தமிழனின் யதார்த்த நிலை.

## அடிமைத் தளை

அடிமைத்தனத்தில் ஆழமாகப் புதைந்துள்ள தமிழனை விடுவிக்கும் நோக்கில்தான் அரசியல் முதல் இலக்கியம் வரை அனைத்தும் செயல்பட வேண்டும். தமிழனின் விடுதலைக்கான இலக்கியம்தான் தமிழனின் இலக்கியம்; தமிழ் இலக்கியம். இந்த மையத்தை ஒதுக்கிவிட்டு இலக்கியம் பற்றிப் பேசுவது, தமிழனுக்கான இலக்கியம் ஆகாது.

இலக்கியத்தின் நோக்கம் இன்பம் என்றும், பொழுது போக்கு என்றும் பேசுவது முதலாளிய இலக்கியம் / அடிமைப் படுத்தும் இலக்கியம். மத்தியதர வர்க்கம் போலித்தனமான இலக்கியம் பற்றிதான் பேசமுடியும். ஆளும் வர்க்கத்திற்கு

இலக்கியம் கூடத் தேவையில்லை. அவர்களுக்கானப் பொழுது போக்குச் சாதனங்கள் நிறையவே உற்பத்தி செய்யப் பட்டுள்ளன.

வாழ்வின் யதார்த்தங்களை மூடியிருக்கும் பிரமைகளைக் கலைக்கும் இலக்கியம் தமிழனுக்குத் தேவை. வரலாற்று வழியாகத் தமிழனிடம் சேர்ந்துள்ள ஆற்றல்களை, கலைத் திறன்களை - கலாச்சாரப் பண்புகளை எடுத்துச் சொல்லும் இலக்கியம் தேவை.

புதிய நாகரிகங்களுக்குத் தமிழன் தன்னைப் பலிகொடுக்க வேண்டியதில்லை. வடவர்களையோ வேறு இனத்து மக்களையோ இன்னும் ஒருமுறை அடிமைப்படுத்துவது தமிழனின் நோக்கம் அல்ல. தமிழன் தன் விளைநிலங்களையும் தொழில்களையும் தனக்கான ஆட்சியையும் மீட்டுக் கொள்ள வேண்டும்.

தலைவர்களுக்குத் துதிபாடி புதிய தெய்வங்களை உருவாக்கிச் சுமக்கும் அடிமைத்தனம் இனி தேவையில்லை. தமிழனை அடிமைப்படுத்தும் சக்திகள் தமிழகத்தில் மட்டு மல்லாமல் இந்தியாவிலும் ஏகாதிபத்திய நாடுகளிலும் செயல்படு கின்றன. ஆகவே தமிழனின் பார்வை உலக அளவில் விரியத் தான் வேண்டும்.

நகரத்தின் பலவகையான வாழ்க்கைச் சுகங்களில் தமிழன் தன்னை இழந்துவிடக் கூடாது. இந்த வாழ்க்கைச் சுகங்கள் தமிழனுக்குள் வேட்கைகளையும் அதிகார விருப்பத்தையும் பொய்களையும் ஆணவத்தையும் விளைவித்தவை. வாழ்க்கை என்றால் என்ன என்பது பற்றிய அவனது பார்வையையும் அழித்துள்ளவை.

## அழிபவர் மக்கள்

சுகம், அதிகாரம் இவற்றைத் தேடும் வாழ்க்கை பெண் ணுக்கு விடுதலை தரவில்லை. குழந்தைகளை ஆக்க முறையில் வளர்க்கவில்லை. கைத்தறியை அழித்து ரசாயன இழைகளால் துணி நெய்யும் தொழிற்சாலைகளை நாம் எதற்கு ஊக்குவிக்க வேண்டும்? இதன் மூலம் ஏகாதிபத்தியத்திற்கு நாம் ஏன் உட்பட வேண்டும்? ஐரோப்பியர்களின் தேவைக்காக நம்

விளைநிலங்களை அழித்துப் புகையிலையையும் தேயிலையையும் பயிரிடத்தான் வேண்டுமா?

ஐரோப்பியர்களுக்கு அழகிய காலணிகளையும் வண்ண உடைகளையும் தயாரிப்பதற்காக நம் விளை நிலங்களில் கழிவுப் பொருள்களைக் கொட்டி நமக்கான விளை நிலங்களை முற்றாக அழிக்கத்தான் வேண்டுமா? 'ஏற்றுமதியைப் பெருக்குவதற்காக உற்பத்தியைப் பெருக்கு' என்ற முழக்கம் உண்மையில் யாரை வளர்க்கிறது? முதன்மையாக ஏகாதிபத்தியத்தையும் அடுத்தபடியாக இந்தியாவில் உள்ள பெரிய முதலாளிகளையும் அதற்கு அடுத்தபடியாக அரசு அதிகாரத்தையும் அப்புறம் உயர் மத்தியதர வர்க்கத்தையும் இவற்றோடு கூட ராணுவத்தையும் மைய அதிகாரக் குவிப்பையும்தானே பெருக்குகின்றது. இவற்றின் கனத்தில் மேலும் சிறுத்து, அழிபவர் மக்கள் தானே.

தேசியம், ஒருமைப்பாடு என்றெல்லாம் பேசுவது வேறு எதற்காக? மக்களுக்கான ஆட்சி என்று சொல்வது அடிப்படையில் உடைமை / அதிகார வர்க்கத்திற்கான ஆட்சியின்றி வேறில்லை.

அதிகாரம் என்றைக்குத் தன்னைத்தானே உடைத்துக் கொண்டு மக்களுக்கு இறங்கி வந்தது? அதிகாரத்திலும் உடைமையிலும் ஏறிச் செல்பவர் என்றைக்காவது இறங்கியது உண்டா?

### சிதைந்து... சீரழிந்து...

இப்போக்குகளை எல்லாம் ஏற்றுச் செயல்படும் இலக்கியத்தைத் தமிழனுக்கான இலக்கியம் என்று சொல்ல முடியாது. ஏற்கனவே தமிழ் இலக்கிய வரலாற்றில் சில வகை இலக்கியங்களை நாம் தமிழனுக்கான இலக்கியம் அல்ல என்று ஒதுக்கியுள்ளோம். இலக்கியவாதிகளின் பெருமைகள் பேசும் இலக்கியம் தமிழில் எழுதப்பட்டதாக இருக்கலாம். இவை தமிழனுக்கான இலக்கியம் அல்ல.

ஒட்டக்கூத்தனையும் ஜெயங்கொண்டானையும் நாம் தமிழனுக்கான இலக்கியம் படைத்தவர் என்று சொல்ல மாட்டோம். இலக்கியங்கள் வரலாற்றின் ஆற்றல்களை

உள்ளே பொதிந்து வைத்துள்ளன என்ற அர்த்தத்தோடுதான் தமிழ்க் காவியங்களையும் புராணங்களையும் நாம் படிக்கிறோம். எவ்வளவுதான் நாம் ஈடுபாட்டோடு படித்தாலும் சீவக சிந்தாமணி நம் இதயத்தோடு ஒட்டவில்லை. கந்த புராணம் நம்மோடு ஒட்டவில்லை.

திருக்குறளின் நீதியும், இளங்கோவின் புரட்சி உணர்வும், மணிமேகலையின் தொண்டுள்ளமும் நமக்குள் சில பதிவுகளை ஏற்படுத்தியுள்ளன. வள்ளுவரும் இளங்கோவும் கடவுளர்களை தம்மளவு உயரத்தில்தான் வைத்துக் கண்டனர். கடவுளர் தம்மை அதிகாரம் செய்வதை இவர்கள் ஏற்கவில்லை.

தேவாரப் பாடல்களிலும் ஆழ்வார் பாசுரங்களிலும் கடவுளர் இன்னும் மனித குணத்தோடுதான் மனிதரை வலம் வருகின்றனர். மனிதனை முற்றாக தம் கைக்குள் வைத்து அடக்கும் கடவுளை நம் இலக்கியங்கள் போற்றவில்லை. எல்லாம் அவனே, பிரம்மம் ஒன்றே உண்மையென்ற ஒருமைக் கோட்பாடு தமிழ் மக்கள் மத்தியில் ஆதிக்கம் பெறவில்லை.

பொருளையும் அதிகாரத்தையும் துச்சமென மதிக்கும் சித்தர்கள் தமிழகத்தில் நெடுங்காலமாக உலவி வந்திருக்கின்றனர் சங்க இலக்கியத்தில் அன்பே பெரிதும் கொண்டாடப் படுகிறது. வாழ்க்கையில் அறம் போற்றப்படுகின்றது. முறை செய்து காப்பாற்றும் மன்னவன் போற்றப்பட்டான். கடுமையான அடக்குமுறை செய்து பணம் பறித்தவன் கொள்ளையன் எனத் தூற்றப்பட்டான். எனினும் வரலாற்றில் மன்னனை அகற்றிக் காணும் பார்வை உலகில் எந்தச் சமூகத்து மனிதர்களையும் போலவே தமிழனுக்கும் நெடுங்காலம் இருந்தது இல்லை.

மன்னனின் அதிகாரத்திற்கு அடங்கி அவனது படையில் சேர்ந்து இவர்களும் கொள்ளையடித்தனர். இத்தகைய வாழ்க்கை நெடுங்காலம் தொடர்ந்தது. அரசு அதிகாரத்தோடு ஒத்துக் கொள்ளையடிப்பதும் தம்மை இழந்துவிடுவதுமான வாழ்க்கை தமிழனுக்கு இனி தேவையில்லை.

உலக இயக்கத்தின் சமூக இயக்கத்தின் நெறி அறியாத காலத்தில் மன்னன் தேவைப்பட்டிருக்கலாம் கடவுள் தேவைப்

பட்டிருக்கலாம். இனி அரசு அதிகாரத்தையும் கடவுள் அதிகாரத்தையும் தமிழன் களைந்து கொள்ள முடியும். உடைமைப் பெருக்கமும் அரசு அதிகாரப் பெருக்கமும் ஓங்கிய சூழலில் இந்த அதிகாரத்திற்கு இடையில் அகப்பட்டு மனிதன் சிதைந்து சீரழிந்து வாழ்வதை அவன் அன்று கண்டுகொள்ளவில்லை.

## சாதனைகள் உள்ளன

மதப் பீடங்களுக்கும் சடங்குத் தொகுப்புகளுக்கும் கடவுள் கூட அகப்பட்டு ஆற்றல் அழிந்து எளிமைப்பட்டுப்போனது கடவுளர்க்குத் தெரியாது. வரலாற்றின் வழியே இன்று பார்க்கும் பொழுது நமக்கு இந்த உண்மைகள் தெளிவாகத் தெரிகின்றன. மனிதன் வரலாற்றின் பல சிக்கலான போக்குகளுக்கிடையில் நாகரிக மோதல்களுக்கிடையில் அகப்பட்டு, துயரங்களில் அமிழ்ந்து, அடக்கு முறைகளில் துன்புற்று, அப்புறம் இவற்றிலிருந்து தன்னை மீட்டுக்கொள்ளும் முறையில் தன் அடிமைக் குணங்களை ஒதுக்கி ஆற்றல்கள் வழியே வெடித்துத் தன்னை ஒளிமயமாக்கிக் கொண்டு வரலாற்றின் வழியே மனிதன் வளர்ந்தும் வந்துள்ளான்.

பொதுவான இந்த வரலாற்றுப் போக்கில் தமிழனுக்குச் சொல்லிக்கொள்ளத்தக்க சில சாதனைகள் உள்ளன. இவற்றின் மூலம் தமிழன் மீண்டும் தனக்கான கல்வியை, பார்வையை கண்டறிய முடியும்.

இவ்வாறெல்லாம் தமிழன் தன் முன்னைய இலக்கியத்தை வரலாற்றை வாழ்வை மீண்டும் திரும்பிப் பார்த்துக் கற்றுக் கொள்ள வேண்டும். இடையிடையே வரலாற்றின் நீரோட்டத்திலிருந்து தான் துண்டிக்கப்பட்டதையும் தெரிந்துகொள்ள வேண்டும். தமிழனுக்கான அடையாளங்கள் வரலாற்றில் பல சமயங்களில் தகர்க்கப்பட்டுள்ளன. அநேகமாகத் தமிழனின் வரலாற்றில் இன்றைய காலம் தான் அதிக அளவிலான நெருக்கடிகளுக்கு உள்ளாகியிருக்கிறகாலம். இந்தக் கட்டத்தில் தமிழன் தன்னை மீட்டுக் கொள்கிற முயற்சியில் தோற்றுப்போவான் என்றால் இனிவரும் வரலாற்றில் தமிழன் இருக்கமாட்டான்.

தமிழ்க்கவிதை இனி எவைபற்றிச் சொல்ல வேண்டும்? தமிழகத்தில் மிச்சமிருக்கும் இயற்கைப் பற்றிச் சொல்ல வேண்டும். தமிழர்களுக்குப் பிரியமான நெற்பயிர், தானியங்கள், வயல்வெளிகள், ஆறுகள், ஓடைகள் பற்றிச் சொல்ல வேண்டும்.

கிராமங்கள், உழவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் இவர்களின் வாழ்க்கை - இவர்களின் குணங்கள் - இவர்களின் உழைப்பு - இவர்களுக்குப் பிரியமான உறவு- செல்வங்கள்- இவர்களின் திரு விழாக்கள் பற்றிச் சொல்லவேண்டும்.

வேம்பு அழகான மரம். அரளிப்பூ அழகான மலர், கற்றாழைகூட அழகானதுதான். அரசமரம், பூவரசு, அழகான மரங்கள். இவைபற்றியெல்லாம் சொல்லவேண்டும். மக்களின் நியாயமான போராட்டங்கள் பற்றிச் சொல்லவேண்டும்.

ஆறு என்றால் என்னைப் பொருத்தவரை அருகில் நொய்யல், தூரத்தில் காவிரி; இவற்றில் இப்போது நீர் இல்லை. தமிழகம் என்ற நாட்டை உருவாக்கியது காவிரியாறு. இந்தக் காவிரி தமிழகத்துக்குத் தாய். காவிரியாறு தமிழக நாகரிகத்தில் அழுத்தமாகப் பதிந்துள்ள ஆறு. இதற்கு அடுத்த படி வைகை. இத்தகைய ஆறுகள் பற்றிச் சொல்ல வேண்டும்.

கிராமங்களில், தொன்மையான பண்பாடுகளை இன்றும் தமக்குள் தங்கியுள்ள பெரியவர்கள் பற்றிச் சொல்லவேண்டும். அதிகாரம் இங்கெல்லாம் பரவி மக்களை அழித்துவரும் கொடுமை பற்றிச் சொல்லவேண்டும். மக்களை அழிக்கும் வாழ்வில் பங்குபெறும் கவிஞர்களின், படிப்பாளிகளின் சிறுமைக் குணங்கள் பற்றிச் சொல்ல வேண்டும்.

## இவைபற்றியெல்லாம்...

தமிழ் எனக்குத் தாய். இந்தத் தாயைக் கொடுமைக்கு உள்ளாக்கும் தலைவர்கள் பற்றி, ஆசிரியர்கள், அதிகாரிகள் பற்றிச் சொல்லவேண்டும். தமிழன்னையின் கரங்கள் உலகின் தொலை தூரங்களிலிருந்து சங்கிலிகளால் கட்டப்படுகின்றன என்பதைப் பற்றிச் சொல்லவேண்டும். தமிழரின் வரலாறு பற்றிச் சொல்லவேண்டும்.

நமக்கான புதிய அறம் சோசலிசம் அன்றி வேறில்லை. இவைபற்றிச் சொல்ல வேண்டும்.

இசை என்றால் மக்களின் ஆடல் பாடல்களோடு கலந்திருக்கும் இசை. இசை நமக்குள் சில சலனங்களை ஏற்படுத்து கிறது. இந்தச் சலனங்களை நமக்குள்ளேயே பாதுகாத்து

வைத்திருப்பது சாஸ்திரிய இசை / செவ்வியல் இசை. இது தியானத்திற்கு உரிய இசை. இது போதாது. இசை நமக்குள் ஏற்படுத்தும் அதிர்வுகளோடு இணைந்து, உடல் அசைவுகளோடு தெருவில் இறங்கிச் சேர்ந்து பாடவேண்டும். சேர்ந்திசை நமக்குள் கூட்டுணர்வை வளர்க்கும்.

இலக்கியம் என்ற தளத்தில் நாம் சில கணங்களில் வள்ளுவரோடும் பாரதியோடும் ஆழ்வார்களோடும் இணைந்துவிடுகிறோம். இந்தத் தளத்தில் காலவேறுபாடுகள் அழிந்துவிடுகின்றன. இது முக்கியமான தளம். இந்த மனவெளி பெருமளவு சுதந்திரமானது. இந்த மனவெளிக்குள்தான் இயற்கையோடும் பிரபஞ்சத்தோடும் உயிர்வகைகளோடும் நாம் உறவாடுகிறோம்; இந்த உறவில் நம்மைக் கரைத்துக் கொள்ளும்பொழுது உலக அளவிலான மனிதர் ஆகிறோம்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பண்பாடு இப்படித்தான் நமக்குள் உரம்பெறும். இந்த மனத் தளத்தில்தான் கடவுளர்களோடு நாம் கைகோர்த்துக் கொள்ள முடியும். கடவுள் நிலையை நமக்குள் காண முடியும். நமக்குள்ளிருந்துதான் கடவுளர்களை, கலைகளை, இலக்கியத்தை நம் தேவைக்கு ஏற்றவாறு படைத்துக்கொண்டதை நாம் புரிந்து கொள்ள முடியும்.

தமிழரின் பண்பாடு இத்தகைய மனத்தள விரிவைத் தனக்குள் இயல்பாகக் கொண்டிருக்கிறது. யாருடைய உழைப்பையும் சுரண்டி நாம் வாழவேண்டியதில்லை. நாம் உழைத்து, பெற்று, கொடுத்து வாழ முடியும். எளிய வாழ்க்கை நமக்குப் போதுமானது. மனிதர்களோடும், உயிர்களோடும், இயற்கையோடும் இணைந்து உறவாடுவது மனித வாழ்க்கை. அதிகாரத்தின் கெடுபிடிகள் நம்மைச் சுற்றிவளைத்து நமக்குள்ளும் ஊடுருவி நம்மைச் சிறைபிடிக்கின்றன. நம்மைச் சிறுமைப்படுத்துகின்றன. நம்மை மூடர்களாக, பொய்யர்களாக மாற்றுகின்றன. இந்நிலையில் நம் வாழ்க்கை மனித வாழ்க்கை இல்லை.

அதிகாரங்களைத் தகர்ப்பதன் மூலமே வாழ்க்கைக்கான மனிதத் தரத்தை நாம் பெறமுடியும். தகர்த்தபின்னர்தான் வாழ்க்கை என்பதுகூட இப்போது சாத்தியமில்லை; தகர்ப்பதுதான் வாழ்க்கை. தகர்ப்பதுதான் தரமான வாழ்க்கை என்பதுதான் இன்றைய நிலைமை. இதற்குத்தான் இலக்கியம் தேவை. கவிதைக் கோட்பாடு என்பது இதற்காகத்தான்.

(தமிழர் வாழ்வுரிமை மாநாட்டுச் சிறப்புமலர் - 1992)

# 10

# தமிழ் எப்படி வாழும்? வளரும்?

தமிழக வரலாற்றில் முன் எப்போதையும்விட தமிழ் மொழியை அழிக்கும் சக்திகள் இன்று பேரளவில் திரண்டுள்ளன. மொழியுணர்வு மட்டும் இன்று தமிழைக் காப்பாற்ற இயலாது. தமிழ் மொழியை அழிக்கும் அரசியல் சக்திகள் பற்றி நமக்கு ஏற்பட்டிருக்கும் உணர்வுகூட இன்று போதாது. தமிழை அழிக்க முனைந்துள்ள பொருளியல் (பொருளாதார) சக்திகள் பற்றி இன்றும்கூட நமக்குப் போதிய கவனம் இல்லை. தமிழைக் காக்கும், காப்பாற்ற விரும்பும் சக்திகள் இவ்வுணர்வு பெறாத நிலையில் இன்று தேய்ந்து வருகின்றன. அடுத்த நூற்றாண்டில் தமிழ் என்ற ஒரு மொழி இருக்க இயலுமா? என்றுகூட சிலர் ஐயப்படுகின்றனர். இவை பற்றியெல்லாம் நாம் ஊக்க சிந்திக்க வேண்டிய தேவை இன்று மிகுந்துள்ளது.

தமிழை யாரும் அழித்துவிட முடியாது. வரலாற்றுக் காலம் முழுவதும் மக்கள் மத்தியில் தமிழ் நிலைபெறத்தான் செய்யும் என்று கருதுவதற்கான ஆதாரங்கள் பற்றி ஆராய்கிறபோது சில மெய்ம்மைகள் நமக்குத் தெரிகின்றன. தமிழக மக்களின் தொகை இன்று ஏறக்குறைய ஆறு கோடி என்று வைத்துக் கொண்டால் இவர்களில் பெரும்பான்மையினர் கிராமப்புறங்களில் வாழ்கிற உழவர்கள், கைவினைஞர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், பெண்கள், நகர்ப்புறங்களிலும், கூலித் தொழில் செய்யும் கூட்டத்தினரையும் இவர்களோடு சேர்த்துக் கொள்ளலாம். இவர்கள் தமிழக மக்களில் ஏறக்குறைய 80 விழுக்காட்டினர். தம் வீடுகளில் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகள் பேசுகின்றவர் தெருவிலும், பொது இடங்களிலும் தமிழில் பேசுபவர்கள். இவர்களின் குழந்தைகளும் இன்று ஆங்கிலம் கற்கின்றனர். ஆங்கில மொழி வழியாகவும் கற்கின்றனர். வாழ்க்கைத் தரத்தில் கீழ் நிலையிலுள்ள இவர்கள் அனைவரும் சமூக வாழ்வில் உயர் மட்டங்களுக்குப் பெரும்பாலும் செல்ல இயலாது. தெலுங்கர், கன்னடியர் என்று தமிழகத்தில் சில நூற்றாண்டுகளாக வாழ்கின்றனர். ஆந்திராவிற்கோ, கர்நாடகத்திற்கோ இனி செல்லப் போவ

தில்லை. இவர்கள் தெலுங்கர்கள் அல்லது கன்னடியர்கள் என்ற வேற்றுமை உணர்வை கிளப்பும் மனப்பான்மை தமிழர்கள் மத்தியில் அதிகமில்லை. உழைக்கும் மக்கள் என்று இந்தச் சமூகப் பிரிவினரை நாம் வகைப்படுத்திக் கொள்வோம் என்றால் இவர்கள் மத்தியில் தமிழ் வாழும் என்பதில் ஐயமில்லை. கிராமப்புறங்களிலும் சரி, நகர்ப்புறங்களிலும் சரி தொடர்ந்து ஆங்கில மொழிவழிப் பள்ளிகள் அதிகரித்து வரும் சூழலில் இவர்களில் ஒரு பகுதியினரைத் தவிர பெரும் பாலானவர் பள்ளிகளுக்கு வெளியில் தமிழ் பேசுபவர்களாக இருப்பார்கள். தினத்தந்தி, தினமலர், தினமணி முதலிய செய்தித் தாள்களும், குமுதம் வகையறா வார இதழ்களும் இவர்களை வைத்து தமிழில் வெளிவரத்தான் செய்யும். கடைத் தெரு, கோயில், கணவன் - மனைவி உறவு, தெருச்சண்டை, கோயில் / சாதிக் கலாச்சார நிகழ்ச்சிகள் முதலியவற்றின் மூலம் தமிழ் நிலைபெறும். மொரீஷியஸ், மலேசியா ஆகிய நாடு களில் வெறும் பேச்சளவில் மட்டுமே எஞ்சியிருக்கும் தமிழின் அவலநிலை, தமிழ்நாட்டைப் பொருத்தவரை பெரும்பாலும் இன்னும் சில நூற்றாண்டுகளுக்கேனும் வராது என்று நாம் உறுதிக் கொள்ள முடியும். அதாவது பள்ளிக் கல்வி, உயர் நிலைக் கல்வி, அரசு நிர்வாகம், நீதி நிர்வாகம் ஆகியவற்றில் தமிழ் இடம்பெறாத நிலையிலும் உழைக்கும் மக்கள் மத்தியில் தமிழ் வாழத்தான் செய்யும். இந்த வாழ்வு எத்தகையது? எத்தகைய ஆதாரங்களில் அமைகிறது? எவ்வளவு காலத்திற்கு? என்பன பற்றி நாம் பிறகு சிந்திக்கலாம்.

தமிழ் உணர்வு பற்றிப் பேசும் அடுத்த சமூகப்பிரிவு பற்றி இப்பொழுது பார்க்கலாம். தமிழ் ஆசிரியர்கள், கல்லூரி / பல்கலைக் கழகங்களில் பணிபுரியும் தமிழ்ப் பேராசிரியர்கள், மேடைகளிலும் சட்டசபைகளிலும் தமிழ் முழக்கம் செய்யும் அரசியல்வாதிகள், தனித்தமிழ் இயக்கத்தினர், தமிழில் கவிதை, சிறுகதை, புதினம் எனப் படைக்கும் படைப்பாளிகள், தமிழில் சிறிய அல்லது பெரிய இதழ்கள் நடத்துபவர், நூல் வெளியீட்டாளர்கள் என்று தொடங்கி இன்னும் பலரையும் இவர்களில் அடக்கலாம். இவர்கள் படிப்பறிவுள்ளவர்கள், பதவியில் உள்ளவர்கள். இவர்களில் பெரும்பாலானவர்கள் நடுத்தர வர்க்கத்தினர். அறிவியல் முதலிய கலைகளை தமிழில் ஆக்க வேண்டும் என்ற விருப்பமும் முயற்சியும் உள்ள பலரையும் இவர்களோடு சேர்த்துக் கொள்ளலாம். இவர்கள் தமிழ் உணர்வு பற்றிப் பேசுபவர்கள். தமிழைக் காக்க முடியு

மென இவர்கள் நம்புகிறார்கள். தமிழுக்காக தாம் உழைப் பதன் மூலம் தமிழைக் காப்பாற்ற முடியும் என நம்புகிறார்கள். இவர்களின் தமிழ் உணர்வு பற்றி நாம் ஐயப்பட வேண்டிய தில்லை. புதிய கலைகளைத் தமிழுக்குக் கொண்டு வருவதன் மூலம் தமிழின் ஆற்றலை இவர்கள் வளர்க்கிறார்கள் என்பதிலும் ஐயமில்லை. எனினும் படிப்பாளிகள் என்ற இந்தச் சமூகப் பிரிவினர் தமிழைக் காப்பாற்ற இயலுமா? வளர்க்க இயலுமா என்பது பற்றி இங்கு சிலவற்றைச் சிந்திக்க லாம்.

இந்தியாவில் தமிழ் அழியும் என்று சில பத்தாண்டு களுக்கு முன்பே இந்தியை நாம் எதிர்க்கத் துவங்கினோம். போராட்டங்கள் நடத்தினோம். இந்தியோடு ஆங்கிலமும் மைய அரசின் மொழியாக இருக்குமென்று நேரு அவர்களிடம் உறுதி பெற்றோம். இந்தியை தமிழகத்தில் வரவிடாது தடுக்கும் சில முயற்சிகளையும் செய்தோம். தமிழைக் காக்க உயிர்த்தியாகங் களையும் செய்தோம். ஆனால், இவற்றின் விளைவுகள் என்ன என்பதையும் நாம் சில அனுபவங்கள் மூலம் தெளிவாக அறிந் துள்ளோம். இதற்கு மாற்றாக ஆங்கிலத்தை வரித்துக் கொண்ட தன் மூலம் தமிழின் வளர்ச்சிக்கு நாம் முதன்மை தரவில்லை. 1968-ல் தமிழக சட்டசபையில் நிறைவேற்றிய தீர்மானம், மாநில மொழிகள் அனைத்தும் மைய அரசோடு மாநிலங்கள் தொடர்பு கொள்ளும் முறையில் வளர்க்கப்பட வேண்டும் என்று கோரியது. இதைச் செயல்படுத்துவதற்கான முயற்சியில் தமிழகம் முனைந்து நிற்கவில்லை. மாநில சுயாட்சி மூலம் நம்மவர்கள் தொடர்ந்து பேசினாலும் நாளடைவில் தம் மாநில அரசு பீடத்தைத் தக்கவைத்துக் கொள்ளும் நோக் கில் இக்கோட்பாட்டின் வலிமையை நம்மவர்களே குறைத்தனர். 40-களின் இறுதி வரை மொழிவாரி மாநிலங்களின் சுய நிர்ணய உரிமை பற்றிய அரசியல் உணர்வு காங்கிரஸ், பொதுவுடைமைக் கட்சி வட்டாரங்களில் இருந்தது. இந்த அரசியல் உணர்வு பிறகு அவர்களாலேயே கைவிடப்பட்டது. அல்லது அழிக்கப்பட்டது. உயர்கல்வியிலும் நீதிமன்றத்திலும் தமிழ்தான் இடம்பெற வேண்டுமென்று கல்வியியலாளர், மார்க் சியக் கட்சியினர், அரசுத் துறையிலும் சில நல்லவர்கள் கடுமை யான முயற்சியில் 60-களின் தொடக்கம் முதல் ஈடுபட்டிருந் தனர். தொடக்கத்தில் தனித்தமிழ் இயக்கத்தினர் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் இந்த முயற்சியை ஏற்கவில்லை. இந்த முயற்சியோடு ஒத்துழைக்கவில்லை. இந்தக் காலத்தில்

தான் கலைக்களஞ்சியம் தோன்றியது. கலைச் சொல்லாக்க முயற்சிகள் மேம்பட்டன. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலம் பலதுறை நூல்கள் மொழியாக்கம் செய்யப்பட்டன. அல்லது தமிழிலேயே எழுதப்பட்டன. கல்லூரிகளிலும் தமிழ் பயிற்று மொழி இடம் பெற்றது.

இத்தகைய முயற்சிகளெல்லாம் இன்று என்னவாயின? தமிழின் ஆக்கம் இன்று தாழ்ந்த நிலையில், தளர் நிலையில் உள்ளது. தமிழை ஊக்குவிக்கும் அரசுத் திட்டம் இன்று இல்லை. இந்திக்கு மாற்றாக ஆங்கிலத்தை ஏற்றுக் கொண்டதன் விளைவை இன்று உச்ச அளவில் நாம் அநுபவிக்கிறோம். தொடக்ககாலத்தில் சிறுபான்மையினர் தமக்கு ஆங்கிலவழிக் கல்வி தேவை என்றனர். தமிழகத்தில் பணியுரியும் பிற மாநிலத்தவர்க்காக ஆங்கில வழிக் கல்வி என்றனர். மேற்கில் மெத்த வளரும் அறிவியல் கல்வியின் தேவைக்காக ஆங்கிலம் என்றனர். உயர்மட்டங்களில் மைய அரசோடும் பிற மாநிலங்களோடும் தொடர்பு கொள்ள ஆங்கிலம் என்றனர். இக்கூற்றுக்கள் இன்று பொய்யாய், பழங்கதைகளாய் மாறிவிட்டன. ஆங்கிலப்பயிற்று மொழி என்பது, இன்று தமிழகம் முழுவதும் கல்விக்கூடங்களை ஆக்கிரமித்துள்ளது. மாணவர்களுக்கு அறிவு வளம் பெற தாய்மொழிதான் பயிற்று மொழியாக இருக்கவேண்டும் என்ற உண்மையை ஆசிரியர் சமூகம் கூட காணத்தவறி கண்களை மூடிக் கொண்டது. தமிழ் பயிற்சி மொழியாக வேண்டும் என்று முனைப்புக் கொண்டிருந்த சில இயக்கங்களும் இன்று சோர்ந்து விட்டன. பெற்றோர்கள் தம் குழந்தைகள் ஆங்கிலம் வழி கற்பதைத்தான் விரும்புகின்றனர் என்று பலர் 'ஜனநாயகம்' பேசுகின்றனர். ஆங்கிலம் கற்றால்தான் வேலைவாய்ப்பு என்றும் பேசுகின்றனர். தமிழகத்தில் தொடக்கத்தில் தொடக்கப் பள்ளிக் கல்வியை தனியார்களிடம் தாரை வார்த்தது தமிழக அரசு. இன்று உயர்கல்வி, தொழிற்கல்வி, மருத்துவம், பொறியியல் கல்லூரி ஆகிவற்றையும் தனியார் துறைக்குத் தருகிறது. பணப்பற்றாக்குறை என்று அரசே நியாயம் சொல்கிறது. சந்தைப் பொருளாதாரம் பற்றி அரசு பரிந்துரை செய்கிறது. பெற்றோர்களிடமிருந்து பத்தாயிரக் கணக்கில், இலட்சக்கணக்கில் பணம் பறிக்கப்பட்டு தனியாரிடம் குவிகிறது. அரசியல்வாதிகளுக்கும் ஒரு பங்கு போய்ச் சேர்கிறது. தனியார் துறையைப் பெருமைப்படுத்தும் முறையில் நாளிதழ்கள் பேசுகின்றன.

பல்கலைக்கழகங்களில், கல்லூரிகளில் தமிழ் இலக்கியம் படிக்க மாணவர்கள் இன்று முன்வருதில்லை. தொழில்கல்வி

தான் வேலைவாய்ப்புக்கு வழி செய்யுமென்று இன்று தொழிற் கல்வி நிலையங்களை நோக்கி மாணவரும் பெற்றோரும் படை யெடுக்கின்றனர். கல்வி வாசனையற்ற மூடர்கள் பலர் இன்று முதலாளிகளாய், பேராசிரியர்களை கூலிக்கு அமர்த்தியிருக் கின்றனர். தமிழிலக்கியம் கற்க பிற்பட்ட சமூகத்தினர், தாழ்த்தப்பட்டவர், ஆதிவாசிகள், பெண்கள் தான் முன் வருகின்றனர்.

ஆங்கிலத்தை மனப்பாடம் செய்து கற்றுக்கொள்ளச் செய்த முயற்சியின் விளைவாக மனவலிமை இழந்து, மற்ற பாடங் களுக்கு நேரம் ஒதுக்க முடியாமல், குறைந்த மதிப்பெண்கள் பெற்ற நிலையில், இத்தகைய மாணவர் தமிழிலக்கியம் கற்க வருகின்றனர். இவர்களிடம் தமிழ்ப்பற்று இன்று எஞ்சியிருக் கிறது. தமிழ்ப் பேராசிரியர்கள் தமிழின் நுட்பம், வளம் அறிந்து தமிழ் கற்பிப்பதில்லை. தற்காலத்திற்குத் தேவை யான சமூக உணர்வோடு, வரலாற்று உணர்வோடு இவர்கள் தமிழ் இலக்கியம் கற்றுத் தருவதில்லை. இலக்கணத்தை நவீனப்படுத்தவில்லை. தமிழிலக்கிய வரலாறு என்பதை இலக்கிய உணர்வோ வரலாற்றுணர்வோ இன்றி கற்பிக்கின் றனர். தமிழ் ஆய்வின் தரம் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. தனித்தமிழ் இயக்கத்தின் தேவை பற்றி இவர்கள் சொல்வ தில்லை. தக்க முறையில் திறனாய்வுக் கல்வியை மாணவர் களுக்குத் தந்திருந்தால், தமிழ் உணர்வு மாணவர்களுக்கு சமூக எழுச்சிக்கு வழிகாட்டியிருக்கும். சில பத்தாண்டுகளுக்கு முன்பு திராவிட உணர்வை ஊட்டிய தமிழ்க் கல்வித் துறை யினர் இன்று, சமகால உணர்வற்றுக் கிடக்கின்றனர். கல்வி நிலையங்களில் மார்க்சிய அறிவு நுழைவதைத் தடுக்க முயன்று இவர்கள் தோற்றனர். எனினும் மார்க்சிய அறிவை கண்டும் காணாதும் ஒதுக்குவதில் இவர்கள் வெற்றி பெற்றுள்ளனர். தொன்மையான தமிழ் இலக்கியம், இலக்கணம் பற்றிய அறிவிலும் ஆய்விலும் கூட இவர்கள் முனைப்போடு செயல்பட வில்லை. பட்டத்திற்காகவும் பதவிக்காகவும், வாழ்க்கை வசதி களுக்காகவும் முனைப்புக் கொள்ளும் இவர்கள் மொழி வளர்க்கும் முயற்சியில் ஈடுபடவில்லை. கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் தமிழாசிரியர்கள் பற்றி அதிகம் சொல்ல வேண்டிய தில்லை. அரசோடும், நிர்வாகத்தோடும் ஒத்து இயங்குவதன் மூலம் வல்லமையை அதிகம் சேகரித்துக் கொண்ட தலைமை யோடு ஒத்துச் செயல்படும் முயற்சிகளில் தமிழாசிரியர்கள் வலிமை அழிந்துள்ளனர். தமிழ்பாடத் திட்டம் மாணவர்களை

அவர்களின் இலக்கிய உணர்வை, அறிவுத்திறனை, மொழி ஆற்றலை வளர்ப்பதாக இல்லை. மாணவர்கள் இதன் காரணமாக தமிழ் பாடத்தில் அக்கறை கொள்வதில்லை. ஆங்கிலத்திற்கும் அறிவியலுக்கும் தொடர்ந்து முதன்மை அதிகரித்து வரும் சூழலில் மாணவர்கள் தமிழை, தமிழாசிரியர் களைப் பொருட்படுத்துவதில்லை.

தமிழ் இலக்கியக் கழகங்கள் இன்று நாடு முழுவதும் உச்ச அளவில் விழாக்களும் வேடிக்கைகளும் நடத்துகின்றன. பட்டி மன்றங்கள், கவியரங்குகள் தமிழ் மக்களை நாசமாக்குகின்றன. பொழுதுபோக்கெனத் தொடங்கி மக்களின் உணர்வை இவை மலினப்படுத்துகின்றன. பாரதியாருக்கும் வள்ளுவருக்கும் கம்பருக்கும் இளங்கோவுக்கும் விழா எடுக்கும் முறையில் பட்டிமன்றக் கனவான்கள் பலர் முன் நிற்கின்றனர். பாரதி, கம்பர் முதலியவர்களின் அறிவாற்றலை, இலக்கிய உணர்வை, தம் பெருமைக்கும் புகழுக்கும் வளமான வாழ்வுக்கும் பயன் படுத்திக் கொள்கின்றனர். வறுமையில் வாழ்ந்து கொண் டிருந்த பாரதி இன்று இவர்களின் கொள்கைக்கு உதவுகிறார். பட்டிமன்றம், கவியரங்கம் ஆகியவை இன்று வணிக மயமாகி வருகின்றன. தமிழை வளர்ப்பதற்குப் பதிலாக தமிழ் உணர்வை அழிப்பதில் இவை முன் நிற்கின்றன. வானொலி, தொலைக் காட்சி நிறுவனங்களும் மக்களிடம் தம் செல்வாக்கைத் தக்க வைத்துக் கொள்வதற்காக இத்தகைய வேடிக்கைகளைச் செய்கின்றன. தமிழின் ஆக்கத்திறன் இவர்களுக்கு நோக்க மில்லை. மக்களின் அறிவாற்றலை மேம்படுத்தல் இவர்கள் நோக்கமாக இல்லை. தமிழை வைத்து வணிகம் செய்ய வேண்டும். புகழ் பெருக்க வேண்டும் என்பது இவர்களின் நோக்கம். இன்று கவிதை நூல்கள் பெரும் அளவில் வெளி வருகின்றன. இவற்றின் வழியே தமிழ் வளர்கிறதா? என்ற கேள்விக்கு ஆம் என பதில் கூற இயலாது. தேங்கிக் கிடக்கும் சமூகத்தில் ஆசைகளும் கனவுகளும் கவிதைகளாய் வெளிப்படு கின்றன. சொற்களை மேலும் மேலும் மெருகேற்றி உருவாக்கப் படும் கவிதைகள் ஓர் இனத்தின் வாழ்வுக்கு வழி அமைக்க இயலாது. மேடைத் தமிழும் கவியரங்கத் தமிழும் செய்யும் செயலைத்தான் வேறு வடிவங்களில் பத்திரிகைகள், வார, மாத இதழ்கள் செய்கின்றன.

தமிழ் உணர்வோடும் தமிழ் மொழியோடும் உறவு கொண் டிருக்கிற படிப்பாளிகள், அரசியல் வாதிகள் என்ற சமூகப்

பிரிவினர் பற்றி இப்பொழுது தொகுத்துச் சொல்லலாம். இவர்களுக்கு மொழி வளர்ச்சியோ, சமூக மேம்பாடோ மக்கள் விடுதலையோ நோக்கமாக இல்லை. மொழி உணர்வென்பது தமக்குக் கிளர்ச்சியூட்ட வேண்டும், சுகம் தரவேண்டும். மொழி என்பது தொழிலுக்கு, பதவிக்கு வழி செய்ய வேண்டும். மொழி என்பது அரசியல் அதிகாரத்தில் தம்மை இருத்த வேண்டும். நிலைப்படுத்த வேண்டும். மொழி என்பது தம் வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்ள, செல்வம் சேர்க்கப் பயன்படவேண்டும். உயர்கல்வி பெறாத அல்லது போதுமான கல்வி அறிவு பெறாத மக்களை மொழி என்று சொல்லி குளிப்பாட்டி, கிளர்ச்சியூட்டி வாக்கு தருபவர்களாக மாற்றி வைத்துக் கொள்ளப் பயன்படவேண்டும். அவர்களின் சுய உணர்வை மழுங் கடிக்க வேண்டும். வரலாற்றில் வைத்து அவர்கள் தம்மைக் கண்டு கொள்ளக் கூடாது. மக்களை, எப்பொழுதுமே நுகர்பவர்களாக, தமக்கு வாடிக்கையாளர்களாக, தம் பெருமை சொல்பவராக மாற்றி வைத்திருக்க வேண்டும். தம் சமூக வாழ்நிலையைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டுமானால் மக்களைத் தொடர்ந்து அதே தரத்தில் வைத்திருக்க வேண்டும். பதவியும் மேடையும் அரசு அதிகாரமும் பட்டங்களும் தங்களுக்கு; மாறாக, தரை, பொழுதுபோக்கு, புத்தகம் வாங்குவது மக்களுக்கு. இவர்கள் தமிழைக் காப்பார்களா, வளர்ப்பார்களா என்ற கேள்விக்கு என்ன பதில் சொல்ல முடியும்? தமிழை இவர்கள் வைத்துக் கொள்வார்கள். தமிழுக்கு இவர்கள் விடுதலை தரமாட் டார்கள். மக்களை அடிமைப்படுத்துவதில் அரசு அதிகாரத் தோடும் முதலாளிகளோடும் ஒத்துழைக்கும் இவர்கள், தமிழுக்கு விடுதலை தரமாட்டார்கள். இவர்களுக்குத் தமிழ் உயிராக இல்லை. பாரதியும் பாரதிதாசனும் கூட இவர்களுக்கு வணிகப்பொருட்கள். பாரதிக்குள்ளும் பாரதிதாசனுக் குள்ளும் பொதிந்துள்ள மக்கள் விடுதலைக்கான ஆற்றல்களை இவர்கள் வெளிப்படுத்த மாட்டார்கள். சிலப்பதிகாரத்தினுள்ளும் திருக்குறளினுள்ளும் பொதிந்துள்ள அற உணர்வை, புரட்சி உணர்வை இவர்கள் வெளிப்படுத்த மாட்டார்கள். வரலாற் றினுள் பொதிந்துள்ள விடுதலைக்கான குரல்களை இவர்கள் கண்டு கொள்ளமாட்டார்கள். மீண்டும் சொல்லலாம், இவர்கள் தமிழை வைத்து வாழ்கிறவர்கள். தமிழை நினைவுபடுத்து வார்கள், தமிழின் வாழ்வுக்காக, வளர்ச்சிக்காக இவர்கள் தம்மை அழித்துக் கொள்ள மாட்டார்கள். அரசியல்வாதி களைப் பொருத்தவரை, சட்டசபையில் கத்துவதற்கும் சண்டை போடுவதற்கும், மேடைகளில் கொட்டி முழங்குவதற்கும் எதிர்

கட்சிகளை ஏசுவதற்கும் தமக்கான பத்திரிகைகள் நடத்துவதற்கும் தமிழ் தேவைப்படுகிறது. இவர்கள் கத்தலைப் புரிந்துகொள்ள தமிழ் மக்களுக்கு அதிகப் படிப்பறிவு கூடாது. எழுத்தறிவு இயக்கம், தினத்தந்தி இவர்களது அரசியலுக்கு உதவும். உலகத் தமிழ்மாநாடு, வள்ளுவர்கோட்டம், மாவட்டப் பெயர் மாற்றங்கள் ஆகியவற்றுக்காகவும் இவர்களுக்குத் தமிழ் தேவை.

சமூகத்தின் உயர்மட்டத்திலுள்ள முதலாளிகளுக்கும் உயர் நிர்வாகத்தினர்க்கும் தமிழ் எந்த அளவுக்குத் தேவை? ஏன் தேவை என்பது பற்றி இப்பொழுது பார்க்கலாம். மனைவியோடு பேசுவதற்கு, வேலைக்காரர்களுக்கு ஆணையிடுவதற்கு, எப்பொழுதாவது தெருக்களில் சந்திக்கும் சிலரோடு பேசுவதற்கு இவர்களுக்குத் தமிழ் தேவை. கோயில் திருவிழாக்களில் தமிழில் பேசவேண்டிய தேவை இருக்கத்தான் செய்கிறது. பக்தி நூல்கள் படிக்கிற அளவுக்கு, இவர்களுக்குத் தமிழ் தேவை. ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் தமிழை எந்த இடத்தில் வைக்கவேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் சக்திகள் இவர்கள்தான் என்பது தெரியும். ஒரு நாட்டின் / தமிழ்நாட்டின் தொழில் வேளாண்மை, மருத்துவம், கல்வி முதலிய துறைகள் பற்றி இறுதியாகத் தீர்மானிப்பவர்களில் இவர்களும் அடங்குவர். உயர் பீடங்களில் உள்ள அரசு அதிகாரிகள், தொழில் முதலிய துறைகளில் மையஅரசின் திட்டங்களை நிறைவேற்றுகிறார்கள். தனியார் துறை வளர்ச்சியோடு ஒத்துழைக்கிறார்கள். மக்களின் போராட்டங்கள், கலவரங்கள் ஆகியவற்றை அடக்கி வைக்கிறார்கள். அரசு அதிகாரம் தேவைதான் என்பதை ஒவ்வொரு நாளும் மக்கள் மத்தியில் உறுதிப்படுத்துகிறவர்கள் இவர்கள்தான். மைய அரசு தேவை. இராணுவம் தேவை. அந்நிய நாடுகளோடு உறவு தேவை. தொழில் வளர்ச்சி தேவை. அந்நிய நாட்டுக் கடன்கள் தேவை. மேற்கத்திய நாடுகளின் தொழில் நுட்பங்கள் நமக்குத் தேவை. பன்னாட்டு நிறுவனங்கள் தேவை. உலக வங்கியின் உதவி தேவை. அனைத்துலக நிதி நிறுவனத்தின் கடன் தேவை. பெட்ரோலியம், பிற வேதியியல் பொருட்கள் தேவை. உயிர்தொழில் நுட்பம் தேவை. கணிப்பொறி தேவை. அணுமின் நிலையங்கள், ஏவுகணைகள் தேவை. போர் ஆயத்த நிலையில் நாடு இருக்க வேண்டும் தேவைப்படும்போது நூற்றுக்கணக்கானவரைக் கொன்று கலவரங்களை அடக்க

வேண்டும். போக்குவரத்தை விரிவுபடுத்த வேண்டும். மைய அரசின் அதிகாரத்தை மாநில அரசுகள் பகிர்ந்து கொள்ள முடியாது. வங்கித்துறை வலிமை பெறவேண்டும். புதிய தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான மூலதனத்தைத் திரட்ட பங்குச் சந்தைகள் விரிவுபடுத்தப்பட வேண்டும். இப்படியெல்லாம் நாள்தோறும் தம் அறிவை, ஆதிக்கத்தை தமக்கு கீழ் உள்ள படிப்பாளிகளுக்கும் / நடுத்தர வர்க்கத் தினர்க்கும், அவர்களுக்கும் கீழ் உள்ள இயலுமானால் உழைக் கும் மக்களுக்கும் தொடர்ந்து வற்புறுத்தி அவர்கள் மனத்தில் பதிய வைக்கிறவர்கள் இவர்கள்தான். ஆங்கிலத்தின் உதவி இல்லாமல் இதை அவர்கள் செய்யமுடியாது. ஆங்கிலத்தி லிருந்து இந்த அறிவை அல்லது ஆதிக்கத்தை தமிழுக்குக் கடத்துவதற்கு இடையில் பலர் தேவை. கல்வியாளர்கள், பத்திரிகையாளர்கள், ஆசிரியர்கள் இதைச் செய்கின்றனர். தமிழில் முடியாதென்று சொல்லியும், ஆங்கிலம் நிறைய கலந்த தமிழிலும் இந்த அறிவை இவர்கள் கடத்துகிறார்கள். முழு அறிவையும் தமிழில் தர இயலாது, தவிர ஒவ்வொரு நாளும் அறிவுலகம் மேலும் மேலும் பலகளங்களில் விரிவும் நுட்பமும் பெற்று வருகின்றன. இதற்கேற்ற முறையில் தமிழில் மொழி யாக்கம் சாத்தியமில்லை. அறிவும் தொழிலும் அனைத்துலக மயமாகிவருகிற இந்த நாட்களில் ஆங்கிலத்தை நாம் ஏற்கத் தான் வேண்டும். தொழில் வளர்ச்சிக்காக தனியார் துறையை ஊக்குவிக்கவேண்டும். பொதுத்துறை, தனியார்மயப்படுத்தல் மூலம், தொழில் வளர்ச்சி பெறும் தனியார்துறையை அரசு கட்டுப்படுத்த முடியாது. அரசு நிதி நிறுவனங்களும் தனியார் துறையோடு ஒத்துழைக்க வேண்டும். தனியார் துறை தமிழை வைத்துக்கொள்ள வேண்டுமென்று அரசு கட்டாயப்படுத்த முடியாது. தொழில் முதலியவை வளர்ச்சி பெற்றால்தான், மக்களின் வாழ்க்கை வளர்ச்சிகள், வாழ்க்கைத்தரம் உயரும். அறிவியல், தொழில் நுட்பம் முதலிய அறிவை நாம் உடனுக் குடன் பெற வேண்டும். ஆங்கிலவழிதான் இதைப் பெற முடியும். ஆகவே ஆங்கிலப் பயிற்சி, ஆங்கிலம் மூலம் கல்வி தேவைப்படுகிறது. மறுத்துப் பயனில்லை. இதற்குத் தமிழ் இடம் கொடுத்துத்தான் ஆக வேண்டும். தமிழ் நம் தாய்மொழி, தமிழ் நம் தெய்வ மொழி. தாயோடு பேசுவதற்கு தமிழ் தேவைதான். தெய்வத்தோடு பேசுவதற்கு தமிழ் தேவைதான். நாங்கள் மறுக்கவில்லை. உலகில் தமிழ் இருக்கத்தான் செய்யும் தமிழை யாரும் அழிக்க முடியாது-இவ்வாறெல்லாம் நியாயம் பேசுகிற வர்கள், சமூகத்தின் உயர்மட்டங்களில் உள்ள கனவான்கள்.

பெரிய மாளிகைகளில் உயர்தரமான வாழ்க்கை வசதிகளோடு நவீன நாகரிக சாதனங்களோடு வாழ்கிறவர்கள் இந்த சமூகப் பிரிவினர், இவர்கள்தான் இப்பொழுது சுயநிதிக் கல்லூரிகள் முதலியவற்றை நிர்வாகம் செய்பவர்கள்.

இவர்களின் ஆட்சியமைப்பை, தொழில் நிர்வாகத்தை, கல்விக் கொள்கையை பெரும்பகுதி மறுக்காமல் ஏற்றுக்கொள்பவர்கள் சமூகத்தின் அறிவாளிப் பகுதியினர். இவர்களில் விஞ்ஞானிகள், பொறியியலாளர், மருத்துவர், வழக்கறிஞர், கல்லூரிப் பேராசிரியர்கள், உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர்கள் என பலரும் அடங்குகின்றனர். அரசு அதிகாரத்தை, முதலாளியத்தை அப்புறம் ஏகாதிபத்தியத்தை தம் கல்வி மூலமும் பதவியின் வழியாகவும் நவீன வாழ்க்கை வசதிகள் மூலமாகவும் ஏற்றுக்கொண்டவர்கள் இவர்கள். நகர வாழ்க்கை வசதி தேவை, நவீன சாதனங்கள் தேவை, விரைந்து செல்லும் வாகனங்கள் தேவை. உயரகத் துணிமணிகள் தேவை. அழகு சாதனங்கள் தேவை. தொலைபேசி, தொலைகாட்சி தேவை. கார், விமானம் தேவை. முதல் தர மருத்துவமனைகள் தேவை. மதுவகைகள் தேவை. பல்வகை உணவுப் பொருள்கள் தேவை. மின்சாதனம் தேவை, உயர்படிப்பு தேவை. மேல்நாட்டுப் படிப்பு தேவை. இவ்வாறெல்லாம் வாழ்க்கை நலன்களில் தம்மை மூழ்கடித்துக் கொண்டவர்கள் இந்த நடுத்தர வாக்கப் பகுதியினர். கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் உட்பட பலரும் இந்த சமூகப் பிரிவில்தான் அடங்குகின்றனர். தமிழ்ச் சமூகத்தின் தலைவர்கள். 40 ஆண்டுகளுக்கு மேலாக அரசியல் என்றும், கட்சி என்றும் அரசு அதிகாரம் என்றும் பேசி இடம் பிடித்துக் கொண்டவர்கள், இவர்களின் துணைவர்கள், இரண்டாம் தர மூன்றாம்தரத் தலைவர்கள் இவர்கள்தான். அரசியல் அதிகாரம் கிடைத்தவுடன் மெல்ல தொடங்கி, விரைவாக முன்னேறி கோடிக்கணக்கில் செல்வங்களைக் குவித்துக் கொண்டவர்கள் இவர்கள்தான். தமிழ் இனம் பற்றியும் தமிழின் பெருமை பற்றியும் பேசிப்பேசி தம் முகங்களில் அழகு சேர்த்துக் கொண்டவர்கள் இவர்கள். நகரங்களிலும் நிறைய சொத்துக்களை முடக்கிக் கொண்டவர்கள் இவர்கள். பெரிய மாடி வீடுகள், கடைத்தெருக்கள், பெரிய பத்திரிகைகள், வணிக நிறுவனங்கள், உணவு விடுதிகள், மூலதனம் திரட்டும் நிறுவனங்கள், இப்படி பல களங்களில் தம்மைத் திரட்டிக் கொண்டவர்கள் இவர்கள். மருத்துவர்கள், பெரிய மருத்துவ நிலையங்கள், மருந்து வாணிகம் இப்படியெல்லாம் நிறைய சொல்லலாம். நூற்றுக்கணக்

கான இந்தச் சமூகப் பிரிவினர் தாங்கள் இல்லாமல் இந்தச் சமூகம் இயங்காது என்பதை நிலைப்படுத்தியுள்ளனர். திரும்பவும் சொல்லலாம். இந்த இரண்டாம் நிலைச் சமூகப் பிரிவினர் மூலம் தான் முதலாளியமும் அரசு அதிகாரமும் இறுதியாக ஏகாதிபத்தியமும் நம் சமூகத்தில்/ தமிழகத்தில் உறுதிப்பட்டிருக்கின்றன. பிரச்சாரத்திற்கு தமிழ் மொழி. அரசியல் அதிகாரத்தை திரட்டிக் கொள்ள தமிழ் மொழி. இவை வெளிப்புறத்தில் தெரிகின்றன. இவர்களுக்குள் ஆழ்ந்து பார்த்தால் அரசு அதிகாரத்தோடு முதலாளியத்தோடு ஏகாதிபத்தியத்தோடு இவற்றுக்காக ஆங்கிலத்தோடு இவர்கள் ஒத்து இயங்குவதைக் காண முடியும். இன்றைய நிலையில் நாம் காண வேண்டிய மிகப் பெரிய சமூக உண்மை இது. முகத்தில், வாயில், சிரிப்பில் தமிழும், அகத்தில் அதிகாரமும் ஆங்கிலமும் கொண்டவர்கள் இவர்கள். இவர்களில் ஒரு பகுதியினருக்கு தமிழ்மட்டும் தான் தெரியும். என்பதால் இவர்களை நாம் பெருமைப் படுத்த முடியாது. அரசு அதிகாரத்தோடும் நவீன தொழில் முறைகளோடும் ஒத்தியங்கும் வகையில் இவர்கள் மக்களை அழிக்கிறவர்கள். தமிழை அழிக்கிறவர்கள். தொழில் வளர்ச்சிக்கும் அரசு அதிகாரத்திற்கும் ஆங்கிலத்தின் தேவையை இவர்கள் ஏற்றுக்கொண்டவர்கள்.

இன்னும் அதிகமாகப் பார்த்தால் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை மறுக்க மாட்டார்கள். சோவியத் யூனியன் சிதைந்ததை இவர்கள் வரவேற்பார்கள். இந்தியா அணு ஆயுதம் தயாரிப்பதை வரவேற்பார்கள். அணுமின் நிலையத்தை மறுக்க மாட்டார்கள். அப்போலோ மருத்துவ மனையிலும் அமெரிக்காவிலும் மருத்துவம் செய்து கொள்கிறவர்கள் இவர்கள் தான். லட்சக் கணக்கானவரை தொழில் கூடங்களிலிருந்து வெளித் தள்ளுகிற கணிப்பொறியை இவர்கள் மறுக்க மாட்டார்கள். விளைநிலங்களில் இராசயன உரத்தையும் பூச்சிக்கொள்ளி மருந்துகளையும் கொட்டி வேளாண்மைக்கு ஆதாரமாக இருக்கும் விளை நிலங்களை நாசமாக்குவதை இவர்கள் மறுக்க மாட்டார்கள். அந்நிய செலாவணி வேண்டுமென்பதற்காக தோல் பதனிடும் தொழிற்சாலையும் சாயப்பட்டறையும், நிலத்தையும் நீரையும் நாசப்படுத்துவதை இவர்கள் மறுக்க மாட்டார்கள். இவர்களுக்கு உழவர்களிடம், பிற்பட்ட சமூகத்தினரிடம், தாழ்த்தப்பட்ட சமூகத்தினரிடம் அக்கரையில்லை. அவர்களின் உழைப்பின் மீது தான் தம் வாழ்க்கைக் கட்டப்பட்டிருப்பதை இவர்கள் ஏற்

கிறார்கள். இன்னும் ஆழ்ந்து பார்த்தால் தம் வாழ்க்கை வசதி பெருக்கத்திற்காக உழவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும் பிற்பட்ட சமூகம் சார்ந்த கைவினைஞர்களும் தொடர்ந்து அழிவதை இவர்கள் ஏற்கத்தான் செய்வார்கள்.

நம் அரசியல் வாதிகள் இப்படி சமூக உண்மைகளைப்புரிந்து கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. அரசியல் அதிகாரம் தமக்கு வேண்டும் என்பதில் ஆர்வம் கொள்கிற இவர்கள் முதலாளியத்திற்கும் அதன் வழியாக ஏகாதிபத்தியத்திற்கும் தாம் சேவை செய்வதை உணரவில்லை. முதலாளியத்திற்கும் ஏகாதிபத்தியத்திற்கும் சாதகமான முறையில் மக்கள் வாழ்வுக்கு ஆதாரமாக நிலமும் நீரும், வாழ்வின் பிற ஆதாரங்களும் தம் அரசு அதிகாரத்தின் மூலம் அழிக்கப்படுவதை இவர்கள் உணரவில்லை. மக்களின் உரிமைகள் தம் அரச அதிகாரத்தால் அழிக்கப்படுவதை உணரவில்லை. ஏகாதிபத்தியம் தன் அசுர கரங்களைக் கொண்டு உலகின் எல்லா மூலை முடுக்குகளிலும் உச்ச அளவில் சுரண்டலையும் ஒடுக்கு முறையையும் திணித்து வருவதையும், தொடர்ந்து ஒவ்வொரு நாட்டிலும் அரசு அதிகாரத்தை தனக்குள் முடக்கி வருவதையும் இவர்கள் அறியவில்லை. படிப்பாளிகள் மட்டும் அல்லாமல் இந்த அரசியல்வாதிகளின் வாழ்வும் ஏகாதிபத்தியத்தின் சுரண்டலுக்கும், ஒடுக்குமுறைக்கும் உள்ளாகி நாளடைவில் நாசமாவதை இவர்கள் அறியவில்லை. தமிழக மக்களின் வாழ்வை ஏகாதிபத்தியத்திடம் ஒப்படைக்கிற செயலை உயர் அளவில் செய்வதன் மூலம் தமிழக மக்களை, தமிழர்களை அவர்களின் வாழ்வை இவர்கள் அழிக்கிறார்கள். தமிழக மக்களை அழித்த பிறகு இந்த அரசியல் வாதிகள் எந்த அரசு பீடங்களைத் தமக்கென தக்க வைத்துக் கொள்ள முடியும்? அப்புறம் எந்தத் தமிழை இவர்கள் காப்பாற்ற முடியும்? தமிழை வைத்தே தமிழ் மக்களை அழிக்கிற காரியத்தை, இவர்கள் அப்புறம் எப்படி தொடர்வார்கள்?

இவ்வளவும் விவாதித்த பிறகு சில வெளிச்சப் பகுதிகளை, சில சமூக உண்மைகளை நோக்கி நாம் முன்னேறியிருக்கிறோம். வரலாற்றில் சில உண்மைகளை நாம் தெரிந்து கொள்ளாததால் சறுக்கி விழுந்திருக்கிறோம். பிரிட்டிஷ் அரசு போன பிறகும் ஏகாதிபத்தியத்திற்கு நாம் அதிக அளவில் இடம் கொடுத்திருக்கிறோம். தொழில் முறை, வேளாண்மை, கல்வி, மருத்துவம், அரசியலமைப்பு ஆகியவற்றின் மூலம் நூற்றாண்டு

களாக, 47-க்கு பின் அதிக அளவில் ஏகாதிபத்தியம் நம்மை வசப்படுத்தியதை நாம் தெரிந்து கொள்ளவில்லை. அரசு அதிகாரம் என்பது பெருமளவில் முதலாளியத்திற்குச் சாதகமானது என்பதை நாம் தெரிந்துகொள்ளவில்லை. இந்திய அரசியலமைப்பில் மைய அரசின் அதிகாரம் பெருக்கத்திற்கானதுதான் மாநில அரசு என்பதை நாம் புரிந்து கொள்ளவில்லை. பிரிட்டிஷ் அரசு விட்டுச் சென்ற குற்றவியல் தொகுப்புகள், நிர்வாக முறை முதலியவை மக்களைத் தொடர்ந்து ஒடுக்குமுறைக்கு உள்ளாக்கியதை நாம் புரிந்து கொள்ளவில்லை. மக்களாட்சி முறைமூலம் முதலாளியம் / முதலாளிய முறைதான் இங்கு வலுப்பெற்றிருக்கிறது. தனித் தமிழ்நாடு என்பதனை அடைந்துவிட்டால் போதும் என்று அன்றும், இன்றும் பலர் கருதுகின்றனர். தமிழ் நாட்டின் இயற்கை வளங்களை, வேளாண்மையை, நீர்நிலைகளை, மக்களின் உடல்நலத்தை தொடர்ந்து அழித்து வருகிற முதலாளியத்தையும் ஏகாதிபத்தியத்தையும் வைத்துக் கொண்டு எந்த நாடு தன் மக்களைக் காப்பாற்ற முடியும்? படிப்பாளிகளையும் அரசியல்வாதிகளையும் தமக்கு பக்க துணையாக வைத்துக் கொண்டு, மக்கள் மீது ஒடுக்குமுறையை உச்ச அளவில் செலுத்துவதற்கான அரசு அதிகாரம் நமக்கு எந்த அளவில் தேவை? ஏகாதிபத்தியத்தை அகற்றாமல், ஏகாதிபத்தியத்தின் பொருளியல் அமைப்பில் தொடர்ந்து இருக்கிற ஆங்கிலத்தின் ஆதிக்கத்தை நாம் மாற்ற முடியுமா? உயர் கல்விக்கும் ஆட்சி நிர்வாகத்திற்கும், நீதி மன்றத்திற்கும், பிற நாடுகளின் தொடர்பிற்கும் தமிழை ஏற்றாமல் தமிழை எவ்வாறு காப்பாற்ற முடியும்? வளர்க்க முடியும்? சட்டசபைச் சண்டைகளுக்கும் தெருச் சண்டைகளுக்கும் பயன்படுகிற தமிழைப் பற்றி நாம் என்ன சொல்ல இருக்கிறது? சந்தைப் பொருளாதாரம் என்ற பெயரில் கல்வித் துறையை மட்டுமல்லாமல் பிற துறைகளையும் முதலாளிகளிடம் ஒப்படைக்கிற அரசு அதிகாரம் தமிழைக் காப்பாற்றுமா? தமிழினத் தலைவர்கள் என்றும் தமிழறிஞர்கள் என்றும் ஒரு நூற்றாண்டுக்காலமாக நாம் போற்றி வருகிற பெரியவர்கள் இத்தகைய உண்மைகளை தெரிந்து வைத்திருந்தார்களா? நமக்குச் சொன்னார்களா? இந்தி எதிர்ப்பு என்ற ஒற்றைக் கேடயம் தமிழைக் காப்பாற்றுமா? தமிழ் மக்களின் விடுதலைக்குப் பயன்படாத தமிழ் வாழமுடியுமா? வளருமா? தமிழ்நாட்டில் குடியேறி தமிழ் மக்களைச் சுரண்டி தமிழ் மக்களின் நிலங்களையும் உடைமைகளையும் தமக்கு உரிமைப்படுத்திக் கொள்ளும் உடைமை முறையை நாம் ஏற்கமுடியுமா? நிலத்தை

யாவது நமக்கென உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டாமா? மேடைகளில் முழங்கப்படும் தமிழ் உணர்வு நம்மைக் காப் பாற்றுமா? தமிழ் மக்களின் உடைமைகளையும் உரிமை களையும் தொடர்ந்து கொள்ளையடித்து கோடிக்கணக்கில் சொத்துக்களை தமக்கும் தம் உறவினர்களுக்கும் குவித்துக் கொண்ட-தமிழ் இனம் பற்றி பேசும் தலைவர்களை நாம் என்ன செய்யப் போகிறோம்? இப்படி நூற்றுக்கணக்கான கேள்விகள் நமக்குள் எழுகின்றன. நம்மைத் துன்புறுத்துகின்றன.

நமக்குத் தமிழ் உணர்வு தேவை என்பதில் மாற்றுக் கருத் துக்கு இடமில்லை. தமிழ் உணர்வை நமக்கு ஒரு நூற்றாண் டுக்கு மேலாக ஊட்டி தக்க வைத்துக் கொண்டிருக்கிற பெரியவர் களை நாம் நன்றியோடு நினைத்துக் கொள்கிறோம். புதிய வகைப் படைப்புகள் மூலம் தமிழின் ஆற்றலைப் பெருக்கி வருகிற படைப்பாளிகளை நாம் மதிக்கிறோம். நமக்குள் சாதி வேண்டாம். மதம் வேண்டாம். தனி உடைமை முறை வேண் டாம் என்றெல்லாம் அறிவும் உணர்வும் நமக்கு ஊட்டி வருகிற பெரியவர்கள் நமக்குள் வாழ்கிறார்கள். யாதும் ஊர், யாவரும் கேளிர் என்பதன் மூலம் நமக்குள் சமத்துவ உணர்வைத் தக்க வைத்துக் கொண்டிருக்கிறோம். தமிழ் வாழ்வும் சோசலிசமும் வேறானவை அல்ல. வள்ளுவர் கூறிய அறமும் இளங்கோ கூறிய புரட்சியும் தமிழர் வாழ்வுக்குத் தேவையானவை. உழவுத் தொழில்தான் தமிழ் மக்களின் ஆதாரத் தொழில். இங்குள்ள நீர்நிலைகள் தூய்மையாக இருக்கத்தான் வேண்டும். மேற் கத்தியானின் தேவைக்காக நம் நிலங்களை, காடுகளை, மலை களை நாம் நாசமாக்க வேண்டாம். ஆட்சி என்பது மக்களுக் கானதாக மக்களால் நடத்தப்படுவதாகத்தான் இருக்கவேண் டும். கல்வியாளர்களும் நிர்வாகத் துறையில் பணிபுரிபவர்களும் மக்களின் ஊழியர்கள். மக்களை ஒடுக்குமுறைக்கு உள்ளாக்கும் அமைச்சர்கள் அநீதியின் சின்னங்கள். தமிழில் அறிவு நூல்கள் ஆக்கப்படவேண்டும். ஆங்கிலக் கல்வியை மாணவர்கள் மீது சுமத்தி அவர்கள் அறிவை முடமாக்க நாம் அனுமதிக்கக் கூடாது. ஆங்கிலம் நமக்குத் தேவை என்பதற்கான எல்லையை நாம் நிர்ணயிக்க வேண்டும். மையத்தில் எல்லாக் களங்களிலும் தமிழுக்குத்தான் இடம். எல்லைகளில் ஆங்கிலத்தோடும், பிற மொழிகளோடும் உறவு கொள்ளலாம். அந்த உறவும் தேவை தான். வெளி நாடுகளில் குடியேறும் ஒரு சிலரின் தேவைக்காக இந்த இலட்சக் கணக்கில் மாணவர்கள் ஆங்கிலம் கற்க வேண் டியதில்லை. ஆங்கிலம் கற்பிப்பது என்பது கூட சுரண்டல்

முறையின் ஒரு வடிவமாகத் தொடர்வதை நாம் ஏற்பதற் கில்லை. ஒரு தனி நாடு என்ற அமைப்பினுள் பிற மொழியின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்பது உண்மைதான். ஆனால் அரசியலைக் காட்டிலும் பொருளியல் ஆற்றல் மிக்கது. இறுதியில் பொருளாதாரம் அரசியலையும் தீர்மானிக்கக் கூடிய வல்லமை உடையதாகத் தெரிகிறது. நம் கல்வி நிலை யங்களில் பொருளியல் (பொருளாதார) அறிவு தரப்படுவ தில்லை. அரசியல் வரலாறும் கற்பிக்கப்படுவதில்லை. தமிழ் இனத்தின் வரலாறு, அதன் ஏற்ற இறக்கங்களுக்கான காரணங் களோடு கற்பிக்கப்படுவதில்லை. மொழி என்பது உணர்வளவில் மட்டும் காப்பாற்றக் கூடியது இல்லை. ஆங்கிலம் கலந்து பேசுவது நமக்குத் தேவையில்லை. முதல் எழுத்து உட்பட நம் கையெழுத்தை தமிழில் இட வெட்கப்பட வேண்டியதில்லை. கட்டுரைகள் எழுதுகிறபோது அடைப்புக்குள் ஆங்கிலச் சொல் தேவையில்லை. தேவை என்றால் கட்டுரையின் கீழ் ஆங்கிலச் சொல்லும் தமிழாக்கமும் தரப்படலாம். இதனால் தமிழாக்கத் திற்கான முயற்சி அதிகப்படும். ஆங்கிலத்திலுள்ள அறிவு நூல் களைத் தமிழுக்குக் கொண்டு வருகிறபோது தொடக்க நிலை களில் பிற மொழிச் சொற்களைத் தமிழில் எழுதி கற்பிக்கலாம். தனித் தமிழ் என்பது ஒரு இலட்சியம். இப்படி ஒரு இலக்கு தொடர்ந்து வற்புறுத்தப்பட்டால் தான் பொதுத் தமிழில் வேற்று மொழிச் சொல் கலப்பு குறையும். தமிழ் இலக்கியத் தின் மூலம் வரலாற்று வழியாகத் தொடர்ந்து வருகிற ஆற்றல் மாணவர்களுக்குள் சேர்ப்பிக்கப் படவேண்டும். வரலாற்று உணர்வுடைய ஆசிரியர் இதைச் செய்ய முடியும். தமிழ்ப்பெருமை என்பது வெறியாக, ஆணவமாக மாற வேண் டியதில்லை. அறிவுத் துறையில் புதிய அணுகு முறைகள் தமிழுக்கு வந்து சேர வேண்டும். தமிழை, தமிழ் வளத்தை இந்தப் புதிய அணுகுமுறைகள் வளர்ப்பதாக இருக்கவேண்டும். கோடிக்கணக்கில் உள்ள உழைக்கும் மக்களோடுதான் நமக்கு வாழ்க்கை என்ற நெறி கற்பிக்கப் படவேண்டும். அவர்களின் கல்வித்தரம் உயர வேண்டும். அறிவுத்தரம் வளர வேண்டும். கவிதை எழுதி தம் தமிழ் பெருமை சொல்லி தமிழைக் காப் பாற்ற முடியாது. படிப்பாளிகள் தமிழறிஞர்கள் மட்டும்தான் தமிழுக்கு அதிகாரிகள் என்பதில்லை. தமிழ் மக்களின் மொழி; அரசியல்வாதிகளோ, தமிழ்ப் புலவர்களோ, மேடைப் பேச்சாளர் களோ தமிழை தமக்கென அகப்படுத்திக் கொள்ள வேண்டிய தில்லை. இவ்வாறெல்லாம் சூழல் ஏற்பட்டால் ஒழிய தமிழைக் காப்பாற்ற முடியாது. வளர்க்க முடியாது. தமிழை வைத்து

வணிகம் செய்வது எளிது. தமிழை வளர்ப்பது அரிது. இன்று தமிழை அழிக்கிற சக்திகள் ஏகாதிபத்தியத்தின் நலன்களை உள்வாங்கிச் செயல்படுகிற மைய அரசும், தமிழகத்து முதலாளியமும், அரசு அதிகாரமும் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். இவற்றோடு ஒத்துழைப்பவர்கள் தமிழுக்குப் பகைவர்கள். இவற்றுக்கு எதிராக செயல்படுகிறவர்கள் தமிழைக் காப்பவர்கள். அந்த ஏழை உழவனை, அவன் நிலத்தை, அவன் சூழலை- அவன் வாழ்வுக்கான சமூக சூழலை, அவன் வாழ்க்கை முறையை, அவனுக்கான அரசியல் அதிகாரத்தை ஏற்படுத்துவதன் மூலமே தமிழ் நிலத்தை, மொழியை காப்பற்ற முடியும்.

இடையில் தமிழின் ஆற்றல் கருதி உழைக்கும் மனிதர்கள் நம் வணக்கத்துக்குரியவர்கள். இக்கட்டுரையின் கருத்துக்களை கீழ்க்கண்டவாறு தொகுத்துச் சொல்லலாம். உழைக்கும் மக்களோடு தமிழ் வாழும். பேச்சளவில் இது எஞ்சும். இலக்கியத்தில், கல்வித் துறையில், நிர்வாகத்தில் இடம் பெறாத மொழி அழியும். 2. தமிழ் உணர்வு கவிதைக்கும் இலக்கியத்திற்கும் மேடைக்கும் பயன்படும். கல்விப் பயிற்சிக்கும் ஆட்சிக்கும் நீதிநிர்வாகத்திற்கும் அயல்நாட்டு உறவுக்கும் இந்தத் தமிழ் பயன்படாது. இதுவும் அழியும். தமிழ் இனத் தலைவர்கள் அரசியல்வாதிகள் தமிழைக் காப்பாற்றமாட்டார்கள். 3. தமிழைத் தக்கவைப்பதென்பது இன்று அரசிலாக மட்டுமல்லாமல் பொருளியல் சிக்கலாகவும் மாறியிருக்கிறது. முதலாளியம் அரசு அதிகாரம் ஆகியவற்றின் வழியே ஏகாதிபத்தியத்தை ஏற்றுக் கொள்பவர் தமிழக மக்களை அழிப்பவர்கள். இவர்கள் தமிழைக் காப்பாற்ற முடியாது. அரசியல் அதிகாரத்திற்காக அலைபவர் தமிழை அழிப்பவர்கள். 4. உணர்வளவில் தமிழைத் தக்க வைப்பவர்கள்- இவர்கள் மீது கொண்டிருக்கும் மரியாதை நம் பார்வையை மறைக்க நாம் அனுமதிக்க முடியாது. தமிழ் உணர்வில் நம்மைக் குளிப்பாட்டுவதன் மூலம் நம்மை மேலும் அடிமைப்படுத்துகிறவர்கள் இவர்கள். நம் கவனம் இவர்கள் மூலம் இவர்களைக் கடந்து செல்லவேண்டும். தனி நாடு என்பது தமிழ் ஆக்கத்திற்குப் போதாது. நமக்குள் பதிந்துள்ள ஏகாதிபத்தியத்தின் தடங்களை முழு அளவில் அழிப்பதன் மூலம்தான் தமிழைக் காக்க முடியும். வளர்க்க முடியும். இடையில் நம் தமிழ் உணர்வைத் தக்கவைப்பவர்கள் நமது வணக்கத்துக்குரியவர்கள். வள்ளுவரும் இளங்கோவும் நம்மை உணர்வளவில் தமிழர் ஆக்கியவர். இவர்

களுக்கு நாம் என்றும் கடமைப்பட்டுள்ளோம். சமூகத்தில் அறத்தை நிலைநாட்டுவதின் மூலமே நம் கடமையை நிறை வேற்ற முடியும். தமிழ் என்பது நம்மைப் பொருத்தவரை, வெறும் மொழியோ, உணர்வோ அல்ல. தமிழ் என்பது அறம். தமிழ் என்பது தமிழ்நிலம். தமிழ் என்றால் மக்கள். தமிழ் என்றால் விடுதலை. தமிழ் என்றால் அன்பு. தமிழ் என்றால் வீரம். தமிழ் என்றால் மீண்டும் மீண்டும் விடுதலை. பாரதி தாசன் மூலம் நமக்கு வந்து சேர்ந்தது இந்தத் தமிழ்தான். ●

# 11

# தமிழ், தமிழர், தமிழியக்கம்

1. தமிழுக்கு இன்று நேர்ந்துள்ள கடுமையான நெருக்கடிகள் நம் அனைவரையும் பாதிக்கின்றன என நம்புகிறேன். சமுதாயத்தின் அனைத்துக் களங்களையும் இந்த நெருக்கடி பாதித்திருக்கிறது. இதன் விளைவு தமிழுக்குள்ளும் தெரிகிறது. தமிழ் கற்பதில் மாணவர்களுக்கு இன்று ஆர்வம் இல்லை. தமிழ் மாணவர்களின் தேவைகளை நிறைவு செய்யக்கூடியதாக தமிழ்க் கல்வி இல்லை. தமிழ் மாணவர்களுக்கு வேலைவாய்ப்பு இல்லை. எல்லாத் துறைகளிலும் தமிழ் ஆட்சி மொழியாக உருவாகவில்லை. நீதிமன்ற மொழியாக இல்லை. கல்வி இன்று முதலாளிகளிடம் ஒப்படைக்கப்படுகிறது. தமிழ்க் கல்வி உட்பட அனைத்துக் கல்வியையும் அவர்கள் தொழிலாக, வணிகமாக மாற்றி வருகிறார்கள். சந்தைப்பொருளியல் என்றும், உலகச் சந்தையோடு இந்தியாவை இணைப்பது என்றும் இன்று உச்ச அளவில் பேச்சுக்களும் முயற்சிகளும் நடைபெறுகின்றன. இதன் காரணமாக, நவீன அறிவியலும் தொழில் நுட்பமும் முன் என்றும் இல்லாத அளவுக்கு இந்தியாவின் எல்லாக் களங்களிலும் இனி இடம் பெறும். இதன் விளைவுகள் நம் சமுதாயத்தைக் கடுமையாகப் பாதிக்கும். நவீன அறிவியலையும், தொழில் நுட்பங்களையும் வரவேற்கும் முதலாளிகளுக்கு தமிழ்க் கல்வி தேவையில்லை. இவர்களுக்காகவே பொதுத் துறை நிறுவனங்களை விட்டுக்கொடுக்கும் அரசுக்கும் தமிழ் வளர்ச்சி தேவை இல்லை. ஏற்கனவே தொழில் வளர்ச்சி என்ற பெயரில் இயற்கை அழிந்துகொண்டிருக்கிறது. சூழல் மாசுபடுகிறது. மக்களின் உடல்நலம் பாதிப்புக்குள்ளாகிறது. கிராமங்கள் அழிகின்றன. இந்தச் சூழல் நம் வாழ்க்கைக்குள் நெருக்கடிகளைத் தோற்றுவித்திருக்கிறது. வாழ்வுக்கான வழிகள் அடைபடுகின்றன. பொருளுக்கும் அதிகாரத்திற்கும் இன்று மரியாதை அதிகம். நேர்மைக்கு இன்று மதிப்பு இல்லை. இந்தச் சூழலில் தான் தமிழின் ஆக்கம் பற்றி நாம் பேச வேண்டி

யிருக்கிறது. தமிழ் அழிந்து கொண்டிருக்கிறது. அடுத்த நூற்றாண்டில் தமிழின் இடம் என்ன என்பது பற்றி நம்மில் பலர் கவலைப்படுகிறோம். தமிழ் அழிந்த பிறகு எதை வைத்து நாம் வாழப்போகிறோம்? என மனக்கவலைகள் அதிகம், ஓரளவுக்கே இதை நான் உங்களிடம் பகிர்ந்து கொள்கிறேன்.

2. இன்றைய நிலை பற்றி சிந்திக்கும் பொழுது நேற்று வரை நாம் என்னவாக இருந்தோம்? தமிழின் ஆக்கத்திறன் களோடு எவ்வகையிலான உறவைக் கொண்டிருந்தோம்? எவற்றை எடுத்தோம், முன்னிறுத்தினோம்? எத்தகைய நம்பிக்கையில் நாம் வாழ்ந்தோம்? என்ற முறையில் சிலவற்றை இங்கு நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

தமிழை நாம் பெரிதும் நேசித்தோம். ரசித்தோம். ரசனை உணர்வு நமக்குள் மேம்பட்டிருந்தது. தமிழின் மேன்மை என்றும், தமிழர் மேன்மை என்றும், தமிழர் நாகரிகத்தின் மேன்மை என்றும், தமிழ் பண்பாட்டின் தன்னிகரற்ற தன்மை என்றும், தமிழின் தொன்மை என்றும் நாம் நிறைய பேசினோம். தமிழ் பற்றிய ரசனை உணர்வில் நாம் மிதந்திருந்தோம். தமிழை தெய்வம் என்றோம். தமிழ் விழாக்கள் கொண்டாடினோம். இப்படியெல்லாம் செய்த நாம் இன்று கேட்டுக் கொள்கிறோம். இந்த ரசனை இனி நம்மை எந்த அளவில் காப்பாற்றும்? இந்த ரசனை நமக்குள் உரமேற்றுமா? தமிழுக்கு வலிமை சேர்க்குமா?

பகுத்தறிவு நோக்கில் சில பத்தாண்டுகளாக தமிழ் இலக் கியத்தின் மீது நாம் பார்வை செலுத்தியிருக்கிறோம். சிலப்பதி காரத்திலும் மணிமேகலையிலும் இயற்கை கடந்த நிகழ்ச்சிகள் என்று பேசினோம். தமிழ் மக்களுக்கு சாதி இல்லை. மதம் இல்லை என்று பேசினோம். புராணங்களை ஒதுக்கினோம். மதப்போக்கை மறுத்த பொழுதே வாழ்வின் அர்த்தங்கள் தேடித் தொகுக்கும் மெய்யியலையும் சேர்த்தே மறுத்தோம். பகுத் தறிவுப் பார்வை நம் அறிவாற்றலை, கலைத்திறன்களை எந்த அளவுக்கு மேம்படுத்தியது என்று நாம் சிந்திக்கிறோம்.

மார்க்சிய நோக்கிலிருந்தும் தமிழை நாம் ஆராய்ந்தோம். தமிழுக்குள் வர்க்கப் பார்வை என்பதைக் கொண்டு வந்தோம். திருவள்ளுவரும் இளங்கோ அடிகளும் வணிக வர்க்கத்தினர் என்றோம். திராவிடன் என்றும் தமிழன் என்றும் பேசுவதை

இனப்பார்வை என்றோம். புலவர்கள் மன்னர்களைப் போற்றினார்கள். என்றும், மக்களுக்கு எதிராக இருந்தார்கள் என்றும் கூறினோம். பொற்காலம் இறந்த காலத்தில் இருக்க முடியாது, எதிர்காலத்தில் தான் ஏற்படும் என்று பேசினோம்.

இவ்வாறெல்லாம் சில பார்வைகளை முன்வைத்து கடந்த ஒரு நூற்றாண்டில் தமிழாய்வு செய்தோம். இத்தகைய பார்வைகள் எழுந்ததற்கான நியாயங்கள் பற்றி இங்கு சுருக்கமாகப் பார்த்துக் கொள்வோம். வரலாற்றின் தேவைகளை ஒட்டித்தான் இப்பார்வைகள் எழுந்தன. நிகழ்காலத் தேவைகள், பழங்கால வரலாறு மற்றும் இலக்கியம் பற்றிய பார்வையை அதிக அளவில் தீர்மானிக்கின்றன. தூய்மையான வரலாற்றுக்கு வழி இல்லையா என்ற ஆய்வுக்குள் நாம் இப்பொழுது செல்லவில்லை.

இந்தியாவில் தம் ஆட்சியை நிறுவிக் கொண்ட ஆங்கிலேயர் தம் மேற்கத்திய நாகரிகத்தின் உயர்வு குறித்தும் இந்திய நாகரிகத்தின் இருண்மை குறித்தும் பேசிய பொழுதுதான் தமிழகச் சூழலில் தமிழர் நாகரிகத்தின் மேன்மை குறித்த ஆய்வுகள் எழுந்தன. இந்திய நாகரிகம், முழு அளவில் ஆரிய நாகரிகம்தான் என்று சிலர் அழுத்தம் தந்து பேசிய பொழுது, அதற்கு எதிர்வினையாக திராவிட நாகரிகத்தின், தமிழர் நாகரிகத்தின் உயர்வு பேசுவது தேவையாக இருந்தது. ஆங்கிலேயர் அகன்ற பிறகும் தமிழர் வாழ்வு மீது ஆதிக்கம் குறையவில்லை. இந்தச் சூழலில் தமிழர்களுக்கு நாடு என்றும், அரசு என்றும், வணிகம் என்றும், நகர நாகரிகம் என்றும் ஆய்வுகளும் பெருமித உணர்வுகளும் நியாயமாகவே எழுந்தன.

இப்போக்குக்கு எதிர்வினையாக தமிழன் தன்னைப் பழமையில் நிறுவிக் கொள்ள முடியாது என்ற பகுத்தறிவுப் பார்வை எழுந்தது. இனப்பார்வை என்பது உலக மனிதனிலிருந்து தமிழனைத் துண்டித்துவிடும் என்ற முறையில் இனப்பார்வை மார்க்சியரால் மறுக்கப்பட்டது. தமிழின் பழங்கால வரலாறு, சமதர்மப் பார்வைக்கு ஆதாரமாக இல்லை என்ற முறையில் பழமைப்பற்று மறுக்கப்பட்டது.

4. நெருக்கடிகள் உச்ச அளவில் நம்மைத் தாக்குகிற இன்றைய சூழலில் இன்று எல்லாவற்றையும் மீண்டும் ஒரு

முறை ஆய்வுக்கு உட்படுத்தத்தான் விரும்புகிறோம். இன்று நமக்கு புறத்திலும் நம் அகத்திலும் நுழைந்து நம்மைச் சீர்குலைக்கிற நெருக்கடிகள் மிகுந்துவரும் சூழலில் நமக்குள் எந்த ஆற்றல்கள் மிஞ்சியுள்ளன? அவற்றை எவ்வாறு திரட்டுவது என்பது பற்றி சிந்திக்கிறோம். தமிழர்கள் என்ற முறையில் இன்றைய வரலாற்றுச் சூழலில் எவ்வாறு நம்மைத் தக்க வைத்துக் கொள்ள முடியும்? தமிழ் இலக்கியத்திற்குள்ளி ருந்து எத்தகைய ஆற்றல்களை நாம் மீட்டெடுக்கப் போகி றோம்? இதற்காக நாம் மேற்கொள்ளும் அணுகுமுறைகள், ஆய்வு முறைகள் என்ன? இவற்றை நம் மாணவர்களுக்குள் எவ்வாறு கொண்டு செல்வோம்? நம் முன்னைய பார்வைகளில் திருத்தங்கள் தேவையா? அல்லது பார்வைகளை முற்றாக மாற்றிக் கொள்ள வேண்டுமா? இத்தகைய கேள்விகளோடு நம் சிந்தனையைத் தொடர்வோம்.

தமிழ் உணர்வு என்று நாம் இப்பொழுது அடிக்கடி பேசு கிறோம். தமிழ் உணர்வு என்பதனுள் பொதிந்துள்ள ஆக்கக் கூறுகள் என்ன? இப்படி சிந்திக்கும் பொழுது தமிழ் உணர்வு என்பதை உச்ச அளவில் தனக்குள் கொண்டிருந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களை இப்பொழுது நினைத்துக் கொள்கிறோம். தமிழ் உணர்வு என்பதற்கு நாம் கொள்ளும் பொருளும், பாரதிதாசன் அவர்களுக்குள் இயங்கிய உணர்வு களும் எவ்வகையில் வேறுபட்டவை என்றும் நாம் சிந்திக்க வேண்டும். பாரதிதாசன் அவர்களைப் பொருத்தவரை தமிழ் என்றால் காதல் மற்றும் வீரம்; தமிழ் என்றால் அன்பு, அறிவு, ஆண்மை, பெண்மை, தாய்மை; தமிழ் என்றால் அழகு, கலை, இயற்கை; தமிழ் என்றால் நாடு, நிலம், தமிழ் ஆட்சி; தமிழ் என்றால் தவம், விடுதலை. இப்படி தமிழுக்கு நூறு பொருள்கள் கண்டவர் பாரதிதாசன். அகர முதலியில் பாரதிதாசன் தமிழுக்குக் கண்ட பொருள்கள் இல்லை; இருக்க முடியாது. அறிவு, ஆய்வு என்று சொல்லி பாரதிதாசனை நாம் மறுக்க முடியாது. தமிழ் அறிஞருக்குள்ளும் இவற்றுள் சில பல உணர்வு களைக் காண்கிறோம். பாரதிதாசனுக்குள் தமிழ் உணர்வின் திரட்சியை, உச்சத்தைக் காண்கிறோம்

பாரதிதாசன் அவர்களுக்குள் இருந்த தமிழ உணர்வை நமக்குள்ளும் திரட்டிக்கொள்ள வேண்டும். நமக்குள்ளிலிருந்து எழுப்பிக் கொள்ள வேண்டும். இப்பொழுது நாம் சொல்லலாம். தமிழ் நிலம் அழிய முடியாது. தமிழ் நிலத்தின் இயற்கை

வளத்தை நாம் காப்பாற்ற வேண்டும், காடுகள் அழியக்கூடாது. ஆற்று நீர் மாசுபடக்கூடாது. நிலத்திலும் நீரிலும் காற்றிலும் நச்சுப்பொருள்கள் சேரவிடக்கூடாது. அயலார் தேவைகளுக்காக நம் காடுகளையும், நில வளங்களையும், நீர் வளங்களையும் நாம் விட்டுக் கொடுக்க முடியாது. அழிக்க முடியாது. இவை நம் மக்கள் வாழ்வுக்கான ஆதாரங்கள். இவற்றை அழித்து முதலாளிகள் திரட்டும் செல்வம் மற்றும் அதிகாரம், நம் வாழ்வை அழிக்கும். தமிழ் மக்களுக்கு வாழ்வு வேண்டும். வாழ்வுக்கான ஆதாரங்கள் வேண்டும். அடிமைத்தனம் எந்த வடிவத்தில் தமிழர் மீது திணிக்கப்பட்டாலும் நாம் ஏற்பதற்கில்லை. தமிழ் மக்களுக்கு உரிமை வேண்டும். சுரண்டலிலிருந்தும், ஒடுக்குமுறையிலிருந்தும் விடுதலை வேண்டும். தமிழனுக்கு சமதர்மம் வேண்டும். இந்தச் சூழலில்தான் அன்பும் அறமும் தழைக்கும். அறம் என்பதை மையப்படுத்திய தான வாழ்வு நமக்குத் தேவை. சமதர்மத்தில் தான் இந்த வாழ்வு சாத்தியம். அரசு என்பது தமிழ் மக்களின் நலன்கள் காக்கும் அரசாக, நலன்கள் வளர்க்கும் அரசாக அமைய வேண்டும். இதுதான் தமிழ் வளர்க்கும் சூழல். தமிழர்கள் இத்தகைய அரசை அமைத்துக் கொள்ள வேண்டும். இன்றைய சூழலில் தமிழ் உணர்வு என்பதனுள் இவ்வளவையும் நாம் சேர்த்துச் சொல்ல வேண்டும். தமிழ் உணர்வு என்பதை வெறும் இலக்கிய உணர்வாக மரபின் மேன்மை சொல்லும் உணர்வாகக் குறுக்கி விடக்கூடாது.

5. தமிழ் இலக்கியத்திலுள்ளிருந்து இந்த உணர்வை நாம் வளர்த்தெடுக்க இயலுமா என்று நாம் சிந்திக்க வேண்டும். சித்தர் பாடல்களை மையப்படுத்தி தமிழ் இலக்கியப்பரப்பு முழுவதையும் ஒரு பார்வைக்குள் இன்று நாம் கொண்டு வர முடியும். சித்தர்களுக்குள்ளும் சிவவாக்கியரை மையப்படுத்தலாம். சித்தர்களுக்கு சாதி இல்லை, மதம் இல்லை, சடங்குகள் இல்லை. பொருளையும் அதிகாரத்தையும் இவர்கள் துச்சமென மதித்தார்கள். ஒதுக்கினார்கள். இயற்கையோடு இவர்கள் மிக நெருக்கமாக இருந்தார்கள். அறத்தின் அடிப்படையில் வாழ்வு அமைவதை இவர்கள் விரும்பினார்கள். இந்த இடத்திலிருந்து முன்னும் பின்னும் தமிழ் இலக்கியத்தினுள் நாம் போய் வர முடியும். கணியன் பூங்குன்றன் முதலிய சான்றோர்களுக்குள் சித்தர் குரலை நாம் கேட்கமுடியும். கடையெழு வள்ளல்கள் பற்றி நாம் கவனம் கொள்ள முடியும். ஒப்புரவை மையப்படுத்தி வள்ளுவரின் அறத்தைத் தொகுக்க முடியும். அநீதிக் கெதிரான

இளங்கோவின் புரட்சி உணர்வைப் பற்றி நாம் பேசமுடியும். வறுமை அறவே கூடாது என்ற சாத்தனார் குரலை நாம் புரிந்துகொள்ள முடியும். இதே பார்வையினுள் வள்ளலாரும் அப்புறம் பெரியாரும் நமக்குள் இடம் பெறுவார்கள். புதுமைப் பித்தனுக்குள்ளும், திரு. வி க. வுக்குள்ளும், ஜெயகாந்தனுக் குள்ளும் சித்தர் குரலைக் கேட்க முடியும். தமிழன் குரல் சித்தர்களின் குரல். நம் வாழ்க்கை எளிமைப்படத்தான் வேண் டும். பொருளுக்கும் அதிகாரத்திற்கும் அடிபணிந்து, இடம் கொடுத்து நம் வாழ்வை நம் கைகளாலேயே அழித்துக் கொள்ள முடியாது. திருவள்ளுவருக்கும் இளங்கோவுக்கும் நாம் துரோகம் செய்ய முடியாது.

சித்தர்கள் வழியே தென்படும் கடவுள் காட்சி பற்றியும் கொஞ்சம் பார்ப்போம். ‘இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின்’ என்று கூறிய வள்ளுவருக்குள் எத்தகைய கடவுள் இடம் பெற் றிருந்தார்? வறுமையை கடவுள் படைத்திருக்க முடியாது. அப்படிப் படைத்தவர் கடவுள் அல்லர். அவர் ஒழியவேண்டும். மனித நலத்திற்கு கடவுள் உதவ வேண்டும். ஒத்துழைக்க வேண்டும். இப்படி இருந்தால் அவர் கடவுள். இளங்கோ அடிகளிடம் என்ன பார்க்கிறோம்? மனிதனுக்குள் தெய்வத் தன்மை இருக்கிறது. தெய்வங்கள் மனித நலம் காக்கவேண்டும். அநீதிகள் நடைபெறும் சூழலில் கோவிலில் அமர்ந்து கொண்டு வழிபாட்டை எதிர்பார்த்து காத்திருக்க முடியாது. அப்புறம் அவசரமாய் வெளிப்பட்டு கண்ணகியிடம் மதுராபதி தெய்வம் கெஞ்சுகிற மாதிரி கடவுள் கெஞ்சக்கூடாது. சாத்தனார் பார் வையில் வறுமையை ஒழிப்பதில் தெய்வங்கள் பங்கு பெற வேண்டும். ஆழ்வார்களுக்குள்ளும் நாயன்மார்களுக்குள்ளும் நாம் காணும் கடவுளர் இயற்கையோடு கலந்திருக்கிற கடவுள். மனித எல்லை கடந்தும் கடவுள் அங்கு வளர்ந்து செல்கிறார். மனிதனுக்குள்ளிருந்து கிளம்பி அப்புறம், மனிதனைவிட ஆயிரம் மடங்கு வலுப்பெற்று, மனிதனை அடிபணியக் கோரும் கடவுள், இந்தக் கடவுளைத் திறனாய்வுக்குட்படுத்தி நாம் குறைக்க வேண்டும். நமக்குள் அகப்படுத்திக் கொள்ள வேண்டும். வெளியேற்றுவதற்கு முன் கடவுள் என்ற திரட்சி யினுள், கருத்தாக்கத்தினுள் என்ன வரலாறு அடங்கியிருக் கிறது என்று நாம் சிந்திக்க வேண்டும். பகுத்தறிவுப் பார்வை இப்படி கடவுளை ஆராயவில்லை. கடவுளை இப்படி அழிக் கவும் முடியாது. சித்தர்களின் கடவுள் நம்மை ஏறி மிதிப் பவரல்ல.

6. ஏற்கனவே நமக்குள் பதிந்திருக்கிற பார்வைகளை இப்பொழுது நாம் சற்றுக் கிளறிப் பார்த்துக் கொள்ளலாம்.

தமிழர் நாகரிகம் தொன்மையானது என்பதில் ஐயமில்லை. தமிழ் இலக்கியங்கள் மேன்மையானவை என்பதில் ஐயமில்லை. இவை பற்றிய பெருமித உணர்வில் நாம் திளைத்திருந்தோம். பெருமிதம் சில சமயம் செருக்காக மாறியது. நம்மை நாமே பார்த்துக் கொள்கிற பார்வையை மறைத்தது. தமிழர் வாணிகத்தின் மேன்மை பற்றிச் சொல்லிக் கொண்டோம். தமிழரின் நகர நாகரிகம் பற்றிப் பெருமை பேசினோம். பழங்கால வரலாற்றுச் சூழலில் தமிழர்களின் ஆற்றல் பெரியதுதான் ஐயமில்லை. இன்று வணிகரின் நடுவு நிலைமை பற்றி நாம் பெருமை சொல்ல முடியாது. இன்று நகரங்கள் கிராமங்களை அழிக்கின்றன. நகரங்களில் முதலாளியமும் அரசு அதிகாரமும் குவிந்திருக்கின்றன. நகர வாழ்க்கை மனிதர்களை இன்று சீரழிக்கிறது. தமிழன் பல நாடுகளை வெற்றி கொண்டான் என்ற பெருமை இன்று தேவையில்லை. இன்று மக்களியக் காலம். படையெடுப்பு, சுரண்டல், ஒடுக்குமுறை என்பன எல்லாம் இன்று மக்களை அழிக்கும் கொடுஞ் செயல்கள். வள்ளுவரும் இளங்கோவும் மக்கட் சார்பில் பேசியவர்கள்.

பழங்காலம் இருண்ட காலம் உண்மையல்ல. பழமைக்குள்ளிருந்தும் ஒளிச்சுடர்களை நாம் திரட்டிக் கொள்ள முடியும். நெடுங்காலமாக தொடர்ந்து வரும் மரபினுள் நமக்கான ஆக்கக் கூறுகள் கண்டு தொகுக்க முடியும். ஆதிக்கம் ஓங்கிய காலங்களில் எல்லாம் அதற்கெதிரான எதிர்வினைகள் கலவரங்கள் இல்லாமல் வரலாற்றில் இயக்கம் இல்லை. மனிதன் தன் படைப்புத்திறனை இழந்துவிட முடியாது. தன் படைப்புத் திறனைக் காத்துக் கொள்வதற்காக, ஆதிக்கத்திற்கெதிராக மனிதன் போராடத்தான் செய்வான். தமிழனும் இப்படிப் போராடியவன்தான். தொன்மையான சமுதாயம் என்ற முறையில் பல காலம் பற்பல தலைமுறைகள் பொருளோடும் அதிகாரத்தோடும் வாழ்ந்து அனுபவித்து வாழ்வின் உறுதிப் பொருள் கண்டது தொன்மைச் சமுதாயம். மனிதன் முக்கியம். அறம் முக்கியம். பகிர்ந்து உண்பது முக்கியம். பொதுநலத்திற்காகத் தன்னை இழப்பதன் மூலம் ஒருவன் தன்னைப் பெற முடியும். பொருளும் அதிகாரமும் மனிதனை அழிக்கும்.

இப்படிக் கண்டவர்கள் நம் தொன்மைத் தமிழ் மக்கள். இவ்வா றெல்லாம் இன்று நம் வரலாற்றின் மீது மீள்பார்வை செலுத்த முடியும். நம் பகுத்தறிவுப் பார்வையை விரிந்துக் கொள்ளமுடியும். மார்க்சியம் தன்னை ஆழப்படுத்திக் கொள்ள முடியும். தமிழனின் எல்லையைக் குறுக்குவதாக, ஆழத்தைத் தூர்ப்பதாக நம் அணுகுமுறைகள் இருக்கக்கூடாது. தமிழன் என்று நாம் சொல்லுகிறபோது நமக்குள் இனப்பார்வை இல்லை. நமக்குள் இயங்குவது, தமிழன் ஒரு தேசிய இனம் என்ற பார்வை. பகுத்தறிவுப் பார்வை தனக்குள் இறுகும் பொழுது, அதன் எதிர்நிலையில் மதவாத அரசியலை வளர்க்கும். முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும் தனக்குள் உள்வாங்கிக் கொண்ட மார்க்சியம் அப்புறம் அவற்றால் வெளியேற்றப் படும்.

இன்றைய சூழலில் நெருக்கடிகள் பற்றி நாம் சிந்திக்கும் பொழுது எண்பதுகளின் தொடக்கத்திலிருந்தே தோன்றி தொடர்ந்து வளர்ச்சி பெற்று இன்று அந்த நெருக்கடிகள் உச்ச அளவை அடைந்துள்ளன என்ற கருத்தில்தான் நெருக்கடிகள் பற்றி நாம் பேசினோம். எண்பதுகளில் தமிழிலக்கிய ஆய்வுக்குள் முற்றிலும் புதியதான சில அணுகுமுறைகள் வந்தன. நெருக்கடிகள் தீவிரப்படுகிறபொழுதே அவற்றுக்கு எதிர்வினையாகத் தான் இந்த ஆய்வுமுறைகள் வந்திருக்கின்றன என்பதை நாம் இப்பொழுது புரிந்து கொள்கிறோம். முன்னைய ஆய்வு முறைகளோடு சம அளவில் தகுதி பெறக்கூடியவை இந்தப் புதிய அணுகுமுறைகள். நெருக்கடிகளுக்கு இவை எந்த அளவில் எதிர்வினைகளாகி நமக்கு உற்ற துணையாகி உதவ முடியும் என்பது பற்றி நாம் சிந்திக்க வேண்டும்,

மொழியியல் வழியே நமக்கு வந்து சேர்ந்தது, அமைப்பியல் பார்வை. இதன் தொடர்ச்சியாக தமிழகச் சூழலில் ஆக்கம் பெற்றது பெண்ணியப் பார்வை. அதனோடு தலித்தியப்பார்வை. மரபுக்கு எதிரானவை இப்பார்வைகள் என்ற முறையில் நமக்குள் இறுக்கம் கொள்ளக்கூடாது. இறுக்கத்தினுள் அதிகாரம் சேரும். அதிகாரம் நம்மை அடிமைப்படுத்தும். நம் சுதந்திரத்தை அழிக்கும். ஆகவே நாம் நம்மைத் திறந்து கொள்ளத்தான் வேண்டும். இலக்கியத்தை மட்டுமல்லாமல், கலை, பண்பாடு, அரசியல் முதலிய அனைத்துக் களங்களையும் உடைத்து, கட்டுடைத்துப் பார்க்க முனைகிறது அமைப்பியல். இலக்கிய வாசிப்பில், மாணவனுக்கு சுதந்திரம் தருகிறது

அமைப்பியல். இலக்கியத்திலிருந்து தனக்கான பொருளை வாசகன் எடுத்துக் கொள்ளலாம். இலக்கியத்தினுள்ளும் அதிகாரங்கள் குவிந்து உள்ளன. இந்த அதிகாரம் என்ற கட்டு, இறுக்கம் எப்படிச் சேர்ந்தது என்பதை அமைப்பியல் ஆராய்ந்து காண்கிறது. கட்டை உடைப்பதன் மூலம் இலக்கிய வாசிப்பிற் கான சுதந்திரம் கிடைக்கிறது. இலக்கியத்தினுள் பன்முகப் பரிமாணங்களை அமைப்பியல் தேடுகிறது. வணிக வர்க்கச் சார்பினர் வள்ளுவர் என்று சொல்லி, ஒற்றைப் பரிமாணத்தில் வள்ளுவரை வாசிக்கக்கூடாது. காவியம் தலைவனுக்கே புகழ் பாடுகிறது. தலைவனை உயரத்தில் வைக்கிறது. பல நூறு / ஆயிரம் மக்களின் ஆற்றல்களை பயன்படுத்திக் கொண்டு அப்புறம் அவர்கள் மீது ஏறி அமர்பவன் தலைவன். இப்படி தலைவனை அமைப்பியல் கிழித்துப் பார்க்கிறது. மேன்மை, உயர்வு, உன்னதம் என்றெல்லாம் சொல்லிக் கொண்டு நம் முதுகை நாமே தட்டிக் கொடுத்துக் கொண்டிருக்க முடியாது. இப்படியெல்லாம் தொடங்கி அமைப்பியல், இலக்கியத்தி னுள்ளும் வாழ்க்கையினுள்ளும் நம்மை தரையில் நெடும் பயணத்திற்கு அழைத்துச் செல்கிறது. கோட்டைகள் வேண் டாம். குடிசைகள் கூட வேண்டாம் என்கிறது அமைப்பியல். வெட்ட வெளியில் திரிகிற வாழ்க்கையை அமைப்பியல் வேண்டு கிறது. கோபுரத்தில் வாழ்ந்தவர்களுக்கு தொடக்கத்தில், இது சிரமமாகத்தான் இருக்கும். அப்புறம்தான், வெட்ட வெளியில் வாழ்க்கை இனிக்கும். எவ்வளவு தூரம் வெட்ட வெளிக்குள் செல்ல முடியும் என்ற கேள்விக்கும் இடமிருக்கிறது.

தமிழ் இலக்கியத்திற்குள் ஆணாதிக்கம் என்று சொல்லக் கூடிய போக்கு நெடுங்காலமாக இருக்கிறது. நமக்குள்ளும் இருக்கிறது. காலம் காலமாக பெண்ணின் வலிமையை அழித் திருக்கிறோம். நாம் தமிழ் இலக்கியப் பரப்பில் அவ்வையார் என்றும் ஆண்டாள் என்றும் காரைக்காலம்மையார் என்றும் ஒரு சில படைப்பாளிகளைத் தான் பார்க்கிறோம். இவர்களையும் கூட ஆணாதிக்கம் தனக்குச் சேவை செய்ய வைத்திருக்கிறது பெண்ணியம் கேட்கும் கேள்வி தமிழ் இலக்கியப் பரப்பு முழு. வதையும் அதிர்வுகளுக்கு உள்ளாக்கும். இந்த அதிர்வுகள் மூலம் தன் ஆதிக்கக் கோட்டைகளை தமிழன் தனக்குள் தகர்த்துக்கொள்ளத்தான் வேண்டும். எத்தனையோ வகை களில் நாம் பிறர் மீது ஏறி அமர்ந்திருக்கிறோம். அதிகாரத்தில் அமர்ந்திருக்கிறோம். அதிகாரம் என்பது அதை உடையவனை அடிமையாக்கும். தலித் மக்கள் இன்று அதிகாரத்தில் இருக்கும்

உயர் சாதியினரை நோக்கி கேள்வி எழுப்புகிறார்கள். உயரத்தில் இருப்பவர் தாமாக தரைக்கு இறங்கி வர முடிவதில்லை. உயரத்தில் இருப்பது ஆபத்தானதுதான். தரைக்கு வந்தால் ஆபத்து இல்லை. தரையில் இறக்கிவிடுவதற்கு தலித் மக்களை நாம் அனுமதிக்கத்தான் வேண்டும். எவ்வளவு காலம் சமூக வாழ்விலும் தமிழ் இலக்கியத்தினுள்ளும் தலித்மக்கள் விளிம்பிலேயே தொங்கிக்கொண்டிருக்க முடியும். இந்தப் புதிய அணுகுமுறைகள் வருவதன் வழியே தமிழ் இலக்கியத்தினுள் கலவரங்கள் எழத்தான் செய்யும். நாம் இவற்றைத் தடுக்கவும் முடியாது. தமிழ் இலக்கியத்தின் அழகுகள் இதனால் கொஞ்சம் குறையலாம். புதிய அழகுகள் தோன்றவும் செய்யலாம். முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும் இவை கடுமையான கேள்விகளுக்கு உள்ளாக்கும். பகுத்தறிவுப் பார்வைக்குள்ளும் மார்க்சியப் பார்வைக்குள்ளும் நுழைந்து இவை சில தகர்வுகளை ஏற்படுத்தக்கூடும். இப்படிச் செய்பவர் நம் மக்கள், நம் இளைஞர்கள், நம் மாணவர்கள். உரிமையோடு இவர்கள் தம் கடமைகளைச் செய்யட்டும். இவர்களால் நம் அடிமைத்தளைகள் நொறுங்கும், விடுதலைகள் அதிகரிக்கும். நாம் நம்பிக்கையோடு இருக்கமுடியும்.

8. இந்தப் புதிய அணுகுமுறைகளோடு இவற்றுக்குச் சற்று முன்னரே தமிழ் இலக்கியக் கல்விக்குள் வந்த வேறு சில அணுகுமுறைகளையும், இன்றைய நெருக்கடிச் சூழலில் இனிமேலாவது ஆற்றல் மிக்கதாக வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒப்பியல் ஆய்வு என்பது ஓர் அணுகுமுறை. இலக்கியம் மட்டும்தான் கலை என்பதில்லை. சிற்பம், நாடகம் முதலியவைதான் கலைகள் என்பதுமில்லை. நெசவும், தச்சு வேலையும், சமையல் செய்வதும்கூட கலைகள்தான். கலைகளைப் பற்றிய இவ்வகைப் புதிய பார்வைக்கு ஒப்பியல் நெறி நம்மை அழைத்துச் செல்கிறது. இடையில் நாட்டார் கலைகள் பற்றியும் நாம் படிக்க முனைந்துள்ளோம். மாணவர்களுக்கு படைப்பிலக்கியப் பயிற்சி என்பதையும் ஒரு பாடமாக்கி வருகிறோம்.

இவ்வகை அணுகல் முறைகளின் மூலமாக ஓர் உண்மை நமக்குள் உறுதிப்படும். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் கலைஞன் இருக்கிறான். தன்னைத் தானே படைத்துக் கொள்பவன் மனிதன். தன் வாழ்க்கையை, தன் சூழலை, பிற மனிதர்களோடு தான் கொண்ட உறவை, தன்னோடு தான்

கொள்கிற உறவை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சிக்கலின் போதும், புதியதாகப் படைத்துக் கொள்வதன் மூலம்தான், மனிதன் தனக்குள் நிறைவு காண்கிறான். அடிமைப்படுத்தும் சூழல், படைப்பியக்கத்தை அழிக்கும். இலக்கியம் படிக்கிறபோது மாணவன் தனக்குள் ஒரு கலைஞனை, ஒரு படைப்பாளியை உணர்கிறான். இலக்கியப்படிப்பு என்பது மாணவனுக்குள் கலைஞனை உயிர்ப்பிக்கவேண்டும். திறனாய்வாளனுக்குள்ளும் இந்தக் கலைஞன் உயிர்த்துடிப்போடு இயங்குகிறான். அப்படி இயங்கினால்தான் அவன் திறனாய்வாளன். இவர்கள் அனைவர்க்குள்ளும் இயங்குபவன் கலைஞன்

கலைஞனைக்கண்டுகொள்ளாமல் வெறும் பட்டியல் தொகுக்கும் ஆய்வால் என்ன பயன்? இலக்கியம் படிக்கிறபோது ஆசிரியரும், மாணவரும் நேர்முகத்தில், ஒரு தளத்தினுள் வருகிறார்கள். இருவரும் இங்கு மாணவர்கள் தான். இலக்கிய வாசிப்பு, படிப்பு, திறனாய்வு என்பதன் மூலம் தம்மைத்தாமே இவர்கள் கண்டுகொள்கிறார்கள்- தாம் சமுதாயத்தினுள்ளும் வரலாற்றினுள்ளும் கரைந்திருப்பதைக் கண்டுகொள்கிறார்கள். வரலாற்றின் ஆக்கத்திறன்கள் தமக்குள் இயங்குவதைக் கண்டுகொள்கிறார்கள். இலக்கியம் என்பதை ஒரு சுமை என இவர்கள் தம் தோளில் தாங்கிச் செல்வதில்லை. இலக்கியம் இவர்களுக்குள் காற்றாக, ஒளியாகக் கலந்திருக்கிறது. தமக்குள் அங்கங்கே இறுகியிருக்கும் அதிகாரத்தை உடைத்துக் கொண்டால் ஒழிய இவர்களது மனவெளியில் காற்றும் ஒளியும் உலாவுவதற்கு சுதந்திரம் இருக்க முடியாது. இத்தகைய படைப்பாளியைத் தனக்குள் கொண்டிருக்கும் ஒரு மனிதன், எத்தகைய அடிமைத்தனத்திற்கும் தனக்குள் இடம் கொடுக்க மாட்டான். தமிழ் இலக்கியம் ஆற்றல்மிக்கதென்றால், தமிழ் மாணவனுக்குள் இத்தகைய படைப்பாளி உருவாக முடியும். வேலை வேண்டுமெனத் தேடி இவன் முதலாளியத்தோடு ஒத்துழைத்து, அரசு அதிகாரத்தோடு ஒத்துழைத்து அவர்களுக்கு வலிமை சேர்ப்பதன் மூலம் தன் ஆற்றலை இவன் அழித்துக் கொள்ளமாட்டான் அவர்கள் வாழ்வுக்காக தன் மக்கள் வாழ்வுக்கு ஆதாரமான இயற்கையை அழிக்கமாட்டான். இயற்கையை அழித்தபிறகு தனக்கென எந்த வாழ்வைத் திரட்ட முடியும்?

9. எனது உரையில் இறுதிப் பகுதிக்கு இப்பொழுது வந்துள்ளேன். தமிழ் இலக்கியம் எனத் தொடங்கி இலக்கியத்

திற்கான அணுகுமுறைகள், சமூகம், வாழ்வியல், என்று பல வற்றினுள்ளும் நாம் பயணம் செய்து வந்திருக்கிறோம். தற்கால நெருக்கடிகளைக் கடந்து செல்வதற்கு தமிழ் இலக்கியத் திலிருந்து பற்றிக் கொள்ளத்தக்க கருவிகள் உண்டா, ஊன்று கோல் உண்டா என்று தேடுகிறோம். ஒரு திறனாய்வுக் கோட்பாட்டுக்கான முயற்சியில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். இலக்கியத்தினுள்ளிருந்து நாம் கடைந்தெடுத்து, அப்புறம் இலக்கியத்தின் மீது செலுத்துவதாக நம் திறனாய்வுக் கோட் பாடு இல்லை. இலக்கியத்தின் தனித்தன்மையை நாம் மறுக்க வில்லை. அதே சமயம், இலக்கியம் சமூகத்தோடும், வரலாற் றோடும், மெய்யியலோடும் உறவுடையது என்பதை நாம் காண் கிறோம். இவையனைத்தும் ஒன்றோடொன்று உறவுடை யதைப் போலவே, முரணும் உடையவை. இந்த முரணியக்கம் தான் இவற்றை உயிர்த்துடிப்போடு வைத்திருக்கிறது. முரணி யக்கத்தைக் கண்டறிவது கோட்பாடு. ஒன்று மற்றதோடு கொண்டுள்ள உறவைக் காண்பது கோட்பாடு. எத்தகைய நெருக் கடிகளை உள்ளடக்கியதாக, அவற்றுக்கு எதிர்வினை புரிவா தாக இலக்கியம் எழுகிறது என்பதைக் கோட்பாடு விளக்குகிறது. இறுதியில் மனிதர்க்கான வாழ்வை, விடுதலையை மீட்டுத் தரும் செயல்பாட்டின் ஒரு பகுதியாக, திறனாய்வுக் கோட்பாடு செயல்படுகிறது. இந்த அம்சத்தை உள்ளடக்கியதாகத்தான் இலக்கியக் கோட்பாடு அமைய முடியும்.

10. தமிழ் மக்களின் சமூக விடுதலை என்ற இலக்கை ஆதாரமாக வைத்துத்தான் இலக்கிய ஆய்வுக்கான ஒரு திற னாய்வுக் கோட்பாட்டை நாம் உருவாக்க முனைகிறோம். ஏற்கனவே தமிழ் இலக்கிய ஆய்வுக்குள் செயல்படும் பல்வகை அணுமுறையிலிருந்து, இன்றும் செயல்படத்தக்க ஆக்கத்திறன் களை நாம் திரட்டிக்கொள்கிறோம். முன்னைய அணுகுமுறை கள் என்பதால் அவற்றை நாம் ஒதுக்கவில்லை. இன்றைய நெருக்கடிச் சூழலுக்கு ஏற்ற வகையில் அவற்றின் ஆக்கத்திறன் களை நாம் உள்வாங்கிக் கொள்கிறோம்.

இலக்கியத் திறனாய்வோ, தமிழ் இலக்கியத்திலிருந்து இன்று நமக்குத் தேவையான ஆற்றல்களைத் திரட்டிக் கொள்வது என்பதோ, வெறும் சிந்தனைக்களத்தில் மட்டும் நடைபெறக் கூடியதாக இல்லை. சமூகத்தின் விரிந்த பரப் போடு உயிர்த்துடிப்புள்ள உறவை நமக்குள் நாம் தக்கவைத்துக் கொள்ளவேண்டும். நிகழ் கால வாழ்வோடு நமக்குள் இருக்கும் சுமைகளைத் தொடர்ந்து நாம் களைந்து கொள்ளவேண்டும். மாணவர்களோடு அமர்ந்து மாணவர்களாக இருந்து நாம்

அதிகம் கற்றுக் கொள்கிறோம். நம் கால இலக்கியங்களின் வழியே நாம் சமூகத்தை நம் கால உணர்வை கூடியவரை நாம் உள்வாங்கிக்கொள்கிறோம். இவையெல்லாம், நம் படைப்புத் திறன்களை நமக்குள் வளர்க்கின்றன. நிலத்தோடும் நீரோடும் இயற்கையோடும் தொடர்ந்து நெருக்கடிகளோடும் வாழ்கிற அடித்தள மக்களோடு நாம் கொள்ளும் உறவு நமக்குள் நாம் புதிதாய் பிறப்பெடுக்க நமக்குப் பயன்படும். தமிழ் மக்களின் வாழ்வோடும் மேம்பாட்டோடும்தான் நமக்கான வாழ்க்கை அடங்கியிருக்கிறது.

தமிழ் இயக்கத்தோடு தமிழ் வளர்க்கும் இயக்கத்தோடு நாம் தொடர்பு கொள்வோம். இலக்கிய ஆய்வு முதலிய நம் முயற்சிகள் அனைத்தும் தமிழிலக்கியத்திற்கான முயற்சிகள். 'விதியே! தமிழ்ச்சாதியை என் செய்ய நினைந்தாய்' என்ற பாடலில் பாரதியின் அவலக்குரலை இன்றும் நாம் கேட்கிறோம். வள்ளுவரையும் இளங்கோவையும் கம்பரையும் வைத்து அவர்களுக்குள் திரண்டிருந்த ஆற்றல்களை தமிழர்கள் தமக்குள்ளும் தொடர்ந்து பெற்று வாழ முடியுமென பாரதி நம்பினார். தன் காலச்சூழலில் மேற்குலகின் அடி உட்பட எத்தனையோ அடிகள் அவருக்குள் விழுந்தன. பாரதி தன்னைத் தக்கவைத்துக் கொண்டார். அடிகளிலிருந்து தன்னை உயிர்ப்பித்துக் கொண்டார். நம் காலத்திற்கான தமிழிலக்கிய முயற்சிகளில் நம்மைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டும். உயிர்ப்பித்துக்கொள்ள வேண்டும். தமிழ் இயக்கம் என்ற முயற்சிகள் பலவகைப்பட்டவை, பலதரப்பட்டவை. இவ்வகை முயற்சிகள் பற்றிச் சிந்திக்கிற பொழுது இன்றைய சூழலில் தமிழர்களின் நிலத்தை, நீரை, இயற்கையைக் காப்பாற்றும் முயற்சி, தமிழியக்கம். தமிழ்க் குழந்தைகளின் கலைத்திறன் வளர்க்கும் முயற்சி தமிழியக்கம். தமிழ் உழவர்களின் ஆக்கத்திறன் வளர்க்கும் முயற்சி தமிழியக்கம். நம்மை அந்நியர்க்கு நாம் விற்றுக்கொள்ள முடியாது. நம் நாட்டை நம் இளைஞர்களை, நம் பெண்களை, நம்மை அயலாருக்கு, ஆதிக்கவாதிகளுக்கு விற்றுக்கொள்ள முடியாது. இவ்வாறெல்லாம் நூறு வகைகளில் நம்மைக் காத்துக்கொள்ளும் இயக்கம் தமிழியக்கம். வள்ளுவரும் இளங்கோவும் இறுதியாக பாரதிதாசனும் நமக்குள் தங்கியிருக்க, நாம் தமிழியக்கம் வளர்ப்போம். நன்றி!

---

குறிப்பு : மதுரைப் பல்கலைக் கழக வளாகத்தில் 27-5-'94 அன்று நடைபெற்ற அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் வெள்ளிவிழாக் கருத்தரங்கில் பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையின் சார்பில் நிறுவப்பட்ட அறக்கட்டளைச் சொற்பொழிவே இந்தக் கட்டுரை.

# 12

# பார்ப்பனியத்தின் வெற்றி

**- நூல் திறனாய்வு**

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் 'பார்ப்பனியத்தின் வெற்றி' என்ற இந்த நூல் தமிழுக்கு ஒரு புதுவரவு என்பதில் ஐயமில்லை. அம்பேத்சரின் ஆங்கில நடை ஒரு பேராறு போல பெருமிதமான நடை. இந்த நடையின் பெருமிதத்தை, தன் மொழி பெயர்ப்பில் குன்றாமல் கொண்டு வந்திருக்கிற நண்பர் கோவிந்தசாமியை நாம் மனமார பாராட்டலாம். தமிழ் ஆற்றல் மிக்க மொழியாக வளர்ச்சி பெற, டாக்டர் அம்பேத்கர் அவர்கள் நூல்களின் மொழியாக்கம் பெரிதும் பயன்படும். இத்தகைய நூலாக்கத்தில் ஈடுபட்டுள்ள தோழர் கருணாமனோகரன் அவர் களுக்கு நம் நன்றிகள் உரியவை.

மார்க்சியம் இன்று உலக அளவில் நெருக்கடிகளுக்கு உள்ளாகியிருக்கிறது. மார்க்சியத்திலிருந்து வேறுபட்ட அணுகல் முறையோடு இந்திய சமூகம் பற்றி பார்வைகள் இன்று தீவிர மாக முன் வைக்கப்படுகின்றன. இந்தியச் சமூகம் பற்றிய ஆய்வில் இத்தகைய தீவிரமான பார்வை கொண்டிருந்தவர் களில் மிக முக்கியமானவர் அம்பேத்கர். 'பார்ப்பனியத்தின் வெற்றி' என்ற இந்த சிறிய நூலைப் படிக்கும் பொழுது, மார்க்சியம் தனக்கென கொண்டுள்ள பார்வை என்ன ஆகிறது? என்ற உணர்வோடு இந்த நூலைப் படித்தேன். படித்து முடிக்கிறபொழுது, மார்க்சியப் பார்வையிலிருந்து, அம்பேத்கர் முன்வைக்கிற கருத்தாக்கத்தை எப்படி உள்வாங்கிக் கொள்வது என்ற முறையில் சிந்திக்கிற பொழுது, மார்க்சியத்தைப் பற்றிய என் பார்வை வலுப் பெறுகிறது. இது பற்றி நான் இங்கு சொல்ல வேண்டும்.

கடந்த சில பத்தாண்டுகளில் இந்திய வரலாற்றுச் சூழலில் நமக்கேற்பட்டுள்ள அனுபவங்கள் கடுமையானவை. இயந்திரத் தொழிலோடு கூடிய பாட்டாளி வர்க்கம், மார்க்சிய நோக்கி லான புரட்சியை செய்து முடிக்கும் என்ற நம் நம்பிக்கை நிறை வேறவில்லை. சோவியத் ரஷ்யாவில் 1917-ல் பாட்டாளி

வர்க்கம் புரட்சியில் வெற்றியடைந்தது என்பதனால், புரட்சிக் குரியது இந்த வர்க்கம்தான் என்ற மார்க்சிய வாய்ப்பாடு உண்மையில்லை. சீனத்தைப் பொருத்தவரை பாட்டாளி வர்க் கத்தின் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு, உழவர் களைத் திரட்டி மாவோ புரட்சியை முடித்தார். கியூபாவில் வேறு வகை அனுபவம். இவ்வகை வேறுபட்ட அனுபவங் களால் மார்க்சியம் பழுதுபடவில்லை.

இந்தியச் சூழலுக்கு வருவோம். கடந்த சில பத்தாண்டு களில் பசுமைப்புரட்சியின் விளைவாக கிராமப்புற உழவர்கள் பெருமளவு சுரண்டலுக்கு உள்ளாகினர். ஏகாதிபத்தியம்என்பது தன்னைப் பல களங்களில் உறுதியாக நிலை நிறுத்தி உள்ளது. இதன் காரணமாக கிராமப்புறங்களில் வறுமையும் ஒடுக்கு முறையும் உச்ச அளவில் செயல்படுகின்றன. உழவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், பிற்படுத்தப்பட்ட சமூகத்தினர், இவர் களோடு பெண்கள் - இவர்கள் எல்லோரையும் சேர்த்துக் கொண்டால் இந்தியாவில் 80 சதவீதத்தினர் இப்படி சுரண்ட லுக்கும் ஒடுக்குமுறைக்கும் உள்ளாகியிருப்பதை அறியலாம். சமூகத்தின் உயர் மட்டத்தில் இருக்கும் முதலாளிகள், அரசு அதிகாரிகள் இவர்களோடு நகர்ப்புறத்தில் வாழக்கூடிய நடுத்தர வர்க்கத்தினரைச் சேர்த்துச் சொன்னால், சுமார் 20 சதத்தினருக்காக, 80 சத மக்கள் அடிமைத்தனத்திலும் அறியா மையிலும், வறுமையிலும், நோய் நொடிகளிலும், சுரண்ட லுக்கும் ஒடுக்குமுறைக்கும் இடம் கொடுத்து வாழ நேர்ந்திருப் பதை அறியலாம். கடுமையான ஒடுக்குமுறைக்கும் கேவலத் திற்கும் உள்ளாகிய நிலையில் இவர்களை 'தலித்'கள் என்று கூட சொல்லலாம்.

இவர்களைத் திரட்டி செய்வதுதான் இந்தியாவை பொருத்த வரை புரட்சி. இதை எப்படிச் செய்வது என்பது பிரச்சினை. பூர்சுவா வர்க்கத்தின் ஒரு பகுதியாக மாறிக் கொண்டிருக்கிற இயந்திரத் தொழில் சார்ந்த பாட்டாளி வர்க்கத்தை எதிர் பார்த்து இருக்க வேண்டியதில்லை. பொருளாதார வாதத் திற்கும் தொழிற்சங்க வாதத்திற்கும், இவற்றோடு அரசியல் அதிகாரத்தை தங்கள் கைக்கு மாற்றிக் கொள்ளவேண்டும் என்ற கருத்தோட்டத்திற்கும் இரையாகியிருக்கிற கட்சிகளை நம்பிப் பலனில்லை. அநேகமாக தலித் நிலைக்குத் தாழ்த்தப் பட்ட உழவர்கள், தாழ்த்தபபட்டவர்கள், பிற்பட்ட சமூகத்தினர் பெண்கள், ஆதிவாசிகள், இவர்களுக்கானது புரட்சி. இந்தகைய

புரட்சிக்குரியதாக மார்க்சியம் தன்னை வளர்த்துக் கொள்ள முடியும். தலித் இயக்கத்தை மார்க்சியம் தனக்குள் காணமுடியும். இதற்கான கோட்பாடு என்ன? நடைமுறை என்ன? கட்சி அமைப்பு என்ன? இவை பற்றி மார்க்சியர் தீர்மானிக்க வேண்டும். புரட்சிக்கு வேறு நெறி இல்லை. இந்த நோக்கில் மார்க்சியம் தன்னை விரித்துக் கொள்ள வேண்டும். ஆழப் படுத்திக் கொள்ள வேண்டும். முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியம்தான் இப்பொழுது தகர்ந்திருக்கிறது. மார்க்சியம் தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ளவும், நிலை நிறுத்திக் கொள்ளவும், புதிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இத்தகைய கண்ணோட்டத்திலிருந்து விலகி, மார்க்சியத்தை பெருமளவு தவிர்க்கிற இன்னொரு கண்ணோட்டத்திற்குள் நாம் செல்ல வேண்டியதில்லை.

இந்த நூலில் அம்பேத்கர் தலித் மக்களின் பார்வையி லிருந்து இந்திய வரலாற்றைச் சொல்லுகிறார். இப்படி வரலாறு அடித்தள மக்களின் பார்வையிலிருந்து பொருள் படுத்தப்படுவதை மார்க்சியர் புரிந்து கொள்ள முடியும். இப்பார்வையை ஆழப்படுத்துவதன் மூலம் மார்க்சியன் தனக்குள் தலித் இயக்கத்தை, தன்னை வளப்படுத்திக் கொள்ள முடியும். மார்க்சியம் கூறும் வர்க்கப்பார்வை இதிலிருந்து வேறுபட்டதும் அல்ல. இந்தியாவில் வர்க்கங்கள் இல்லை. சாதிகள்தான் உண்டு என்ற கூற்று மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றலைப் புரிந்து கொள்ளாதவர் கூற்று.

பார்ப்பனியத்தின் வெற்றி என்ற நூல், சாதியின் தோற்றத் திற்கு அக மணமுறை என்பதை ஆதாரமாக்குகிறது. சமூக ஆய்வில் ஒரு கண்டுபிடிப்பு என்று மதிப்பிடத்தக்கது அம்பேத்கர் அவர்களின் இந்தப் பார்வை. ஆனால் சாதியத்தின் தோற்றத்தை இந்தக் கண்டுபிடிப்பு மட்டுமே, முழுமையாக விளக்கவில்லை. தோழர் கருணாமனோகரன் எழுதியுள்ள ‘சாதிய சமூக அமைப்பும் தமிழ் தேசிய இனப்பிரச்சினையும்’ என்ற தனது நூலில் சாதியத்தின் தோற்றத்திற்கு சில தொகுப் பான காரணங்களைக் குறிப்பிடுகிறார். (குணா அவர்கள் இது பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்) வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலும் வரலாற்றின் போக்கிலும் ஏற்பட்ட வேலைப் பிரிவினை, வேலைப்பிரிவினைக்குள் வந்த ஏற்றத்தாழ்வு என்பது ஒரு தொகுப்பு. தனிவுடைமை என்று தொடங்கி அரசு அதிகாரம் வரையிலான காரணிகள் இன்னொரு தொகுப்பு.

அகமணமுறை, மதம் என்பவை மேலும் இரு தொகுப்புகள். வேலைப்பிரிவினை, ஏற்றத்தாழ்வு, தனிவுடைமை, அரசு அதிகாரம், இவற்றோடு அகமணமுறை என்பதை வைத்துத் தான் சாதியின் தோற்றம் பற்றிப் பேச முடியும். இவற்றோடு வைத்துத்தான் மதம் பற்றிப் பேசமுடியும்.

மார்க்சியத்தின் வலுமிக்க ஒரு பகுதி அதன் வரலாற்றுப் பொருள் முதல்வாதம். எந்த ஒரு சிக்கலையும், அதன் வரலாற்றுச் சூழலில், பொருளியல் சூழலில் வைத்துத்தான் காணமுடியும். பொருளியல் என்பதனுள் இயற்கை, நிலம், தட்பவெப்பம், உற்பத்தி முறை, உற்பத்திக் கருவிகள் என்று தொடங்கி தனி உடைமை, குடும்பம், அரசு, வர்க்கம் என்று பலவற்றை உள்ளடக்கிப் பேசவேண்டும். ஒரு பிரச்சினையின் தோற்றம், வளர்ச்சி, தீர்வு என்பன அதற்கான பொருளியல் சூழலில்தான் நடைபெறுகின்றன. இந்தியாவில் மட்டுமே சாதி உண்டு என்று சிலர் அழுத்திச் சொல்கின்றனர். வேலைப்பிரிவினை, ஏற்றத் தாழ்வுகள், தனிவுடைமை, அரசு அதிகாரம் ஆகியவை உலகின் பிற பகுதிகளில் இருந்த போதிலும் சாதி அங்கு தோன்றவில்லை என்றும் சொல்கின்றனர். இக்கூற்றை நாம் மறுக்கவில்லை. அகமணமுறை இந்தியாவுக்கு மட்டுமே உரியது என்று சொல்ல முடியுமா என்பது பற்றி எனக்குத் தெரியவில்லை. இப்படி வைத்துக் கொண்டாலும், வேலைப் பிரிவினை-அரசு அதிகாரம் வரையிலான காரணிகளோடு தொடர்புபடுத்தாமல் அகமண முறையைச் ஆதாரமாகக் கொண்டு சாதியை விளக்க முடியாது. சாதியை நிலைநிறுத்து வதற்கு அரசு அதிகாரம் இல்லாமல் முடியாது. இப்படிக் காண்பது மார்க்சியப் பார்வை. சாதி என்ற இந்தப் பிரச்சினை யின் தோற்றம், வளர்ச்சி, தீர்வு என்பது பற்றிப் பேசும் பொழுது, இதற்குரிய பொருளியல் சூழலில் ஏற்படும் மாற்றங் களோடு வைத்தே பேசமுடியும். பொருளியல் சூழலின் செறிவு மிக்க ஓர் அம்சம், சமூகத்திலுள்ள பல பிரிவுகள். இவற்றுக்கு இடையிலான உறவுகள் / முரண்கள், மோதல்கள் / போராட் டங்கள். இப்படி ஒரு விரிவான வரலாற்றுச் சூழலில் வைத்து இந்தியாவில் சாதி தோன்றியது பற்றி டாக்டர் அம்பேத்கர் தன் நூலில் விவரிக்கவில்லை. பார்ப்பனர், சமூகத்தின் பிற பிரிவுகளிலிருந்து தம்மைத் தனிமைப்படுத்திக் கொள்ள, உயர்வுபடுத்திக்கொள்ள அகமண முறையைத் தோற்றுவித் தனர் என்று ஆராய்கிறார் அம்பேத்கர். இதைப் பார்ப்பனியத்

தின் வெற்றி எனக் குறிப்பிடுகிறார். சதி, விதவைத் திருமண மறுப்பு, குழந்தை மணம் ஆகிய செயல்பாடுகள் மூலம் அகமண முறையை நிலைநிறுத்தியதை அம்பேத்கர் சிறப்பாக விவரிக்கிறார். மதம் பற்றியும் சொல்கிறார். மனுதர்மம் செயல்பட்டதைக் குறிப்பிடுகிறார். பெண்ணை அடிமைப் படுத்தும் முறையில் ஆணாதிக்கம் செயல்பட்டதையும் அம்பேத்கர் தரும் விவரிப்புகளிலிருந்து நாம் புரிந்து கொள் கிறோம். வரலாற்றின் பொருளியல் சூழலிலிருந்து அம்பேத்கர் இவற்றை வளர்த்தெடுக்கவில்லை என்பதுதான் என் திறனாய்வு.

நூலின் இறுதிப்பகுதியில் பார்ப்பனர்களுக்கும் சத்திரியர் களுக்கும் இடையில் ஏற்பட்ட போராட்டம் பற்றி குறிப்பிடு கிறார். இந்திய வரலாற்றில் பார்ப்பனர்களும் சத்திரியர்களும், சில நூற்றாண்டுகளேனும் கடுமையாக மோதிக் கொண்டனர். ஒருவரை மற்றவர் அழித்துக் கொள்ளும் இத்தகைய போராட் டத்தின் போது இருசாராரும் ஓர் உண்மையைப் புரிந்து கொள்ளத் தொடங்கினர். இப்படி தாம் போரிட்டுக் கொண் டிருந்தால் தம் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் ஆதாரமாக இருக்கிற வைசியர்களும் சூத்திரர்களும் தம் அதிகாரத்திற்கு உட்படாமல் விடுதலை பெறுவர் அல்லது விலகிச்செல்வர். வைசியர்களையும் சூத்திரர்களையும் வைத்து தாம் செய்யும் சுரண்டல் ஒடுக்கு முறை மூலம்தான் தமக்கு வாழ்க்கை அமைகிறது. இப்படிப் புரிந்து கொண்ட பார்ப்பனரும் சத்திரியரும் தமக்குள் இணைந்து சமரசம் செய்து கொண்டதன் மூலம் பிற சமூகங்கள் மீது தம் சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் உறுதிப்படுத்திக் கொண்டனர். உண்மையில் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் இத்தகைய விவரிப்பிலிருந்துதான் தம் நூலைத் தொடங்கி யிருக்க வேண்டும். இங்கும் நாம் என்ன பார்க்கிறோம்? சத்திரியரின் அரசு அதிகாரமும், பார்ப்பனரின் கருத்தியலும் இணைந்து செயல்படுவதன் மூலம்தான் பிற சமூகங்கள் மீது தம் அதிகாரம் நிலைபெற்றது. நாளடைவில் வைசியர்களின் ஒரு பிரிவினராகிய வணிகர், அரசு அதிகாரத்தோடு இணைந்து கொண்டனர். சூத்திரர்கள் என்று இந்த நூலில் சொல்லப் படுபவர் யார் என்ற விளக்கம் இந்த நூலில் இல்லை. கைவினை ஞர்கள் சூத்திரர் என்று சொல்லப்பட்டிருக்கலாம். நாளடைவில் விவசாயிகளும் சூத்திரர் என்ற பிரிவுக்குள் அடங்கியிருக் கலாம்.

மீண்டும் மார்க்சியத்தின் வழியே நாம் தெரிய வந்திருக்கிற இன்னொரு உண்மையைப் பற்றி நாம் சொல்ல வேண்டியிருக்கிறது. வரலாற்றை மார்க்சியர் விளக்குகிறபோது, அரசு அதிகாரத்தை ஒரு முக்கியப் புள்ளியாக எடுத்துக் கொள்கின்றனர். அரசு அதிகாரம் என்பதனுள் இந்தியாவைப் பொருத்தவரை சத்திரியர்கள் என்பவர்களோடு நிலக்கிழார்கள், வணிகர்கள் ஆகியவரும் நாளடைவில் இணைந்து கொள்கின்றனர். அரசு அதிகாரம் என்பது இராணுவம், நிர்வாக இயந்திரம், அதிகாரவர்க்கம் முதலியவற்றின் மூலம்தான் தன்னை நிலைநிறுத்திக் கொள்கிறது என்பதில்லை. கருத்தியல் தளத்தில் அரசு அதிகாரம் தன்னைத் தொடர்ந்து நிலை நிறுத்தி கொள்ள முயற்சி செய்கிறது. வரலாற்றின் ஒரு கட்டத்தில் ஒரு கருத்தியல் மட்டுமே செயல்படுவதில்லை. ஆதிக்கக் கருத்தியல் என்று ஒன்றைச் சுட்ட முயன்றாலும், அதனோடு முழுவதும் ஒத்தும், அங்குமிங்கும் வேறுபட்டும் இயங்குகிற பிற கருத்தியல்களும் உண்டு. ஆதிக்கக் கருத்தியலோடு முற்றாக எதிர்நிலையில் செயல்படுகிற கருத்தியலும் உண்டு. இந்திய வரலாற்றில், எல்லாக் கட்டங்களிலும் பார்ப்பனியம் மட்டும்தான் ஆதிக்கக் கருத்தியலாகச் செயல்பட்டது என்று சொல்வதற்கு ஆதாரமில்லை. வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் பார்ப்பனியம் ஆதிக்கக் கருத்தியலாக இருந்தது என்பதை நாம் மறுபதற்கில்லை.

பகவத் கீதை வெளிப்படுத்தும் கருத்தியலை வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் ஆதிக்க / பார்ப்பனிய கருத்தியல் என்று சொல்ல முடியும். இதற்கான வரலாற்றுச் சூழல் பற்றி நமக்குத் தெரியவில்லை என்றாலும் டி. டி. கோசாம்பி அவர்களின் வரலாற்று ஆய்விலிருந்து ஒன்றைக் குறிப்பிடலாம். கி. பி. ஆறாம் நூற்றாண்டில் பாடலிபுத்திரம் தன் முன்னைய பெருமையிலிருந்து சிதைந்தது. முன்பு 60 சதுர மைல் பரப்பளவிலிருந்த பாடலிபுத்திரம் 6 ஆம் நூற்றாண்டுக்கு பிறகு ¹ சதுர மைல் அளவுக்கு குறைந்தது. கிராமப்புறங்களில் சிதைந்து கொண்டிருந்த வேளாண்மையை நிலைநிறுத்துவதற்காக நகர்ப்புறங்களில் குழுமியிருந்த கைவினைஞர்கள், நகர்ப்புறத்திலிருந்து வெளியேற்றப்பட்டு, கிராமப்புறங்களில் குடியமர்த்தப்பட்டனர். வேளாண்மைக்கு முற்றிலும் அனுசரணையாக இப்படி 12 வகையான கைவினைஞர்கள் குடியமர்த்தப்பட்டனர். அரசு அதிகாரம் இதைச் செயல்படுத்தியது.

நம் காலம்வரை நிலவிய கிராமப்புற சமூக அமைப்பு இவ்வாறு தொடங்கியது.

இந்திய வரலாற்றின் ஒரு கட்டத்தில் இப்படி நிச்சயம் நிகழ்ந்திருக்க முடியும். சமூகப் பிரிவுகள் பலவற்றுக்குள்ளும் ஏதோ ஒரு வகையில் இப்படி ஒரு இணைவு சாத்தியம். இல்லையென்றால் சமூக இயக்கம் (உற்பத்தி மற்றும் விநியோகம்) சாத்தியமில்லை. இப்படி இணைவு பெறுகிற சமூகப் பிரிவினுள் சமத்துவம் பற்றி நாம் பேசுவதற்கில்லை. மறு உற்பத்தி தொடர்ந்து நடைபெற இப்படி ஒரு இணைவு தேவை. வரலாற்றுக் காலம் முழுவதும் சமூக இயக்கம் இவ்வாறு வன்முறை கொண்டும் கருத்தியல் கொண்டும் ஒழுங்கு படுத்தப்படுகிறது. பகவத் கீதை வெளிப்படுத்தும் கருத்தியல் இப்படி ஓர் ஒருங்கமைப்பு. ஒவ்வொரு சமூகப்பிரிவும் அதனதன் இடத்திலிருந்து தனக்கென வகுக்கப்பட்ட தொழிலை / கடமையைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்க வேண்டும். எந்தப் பெயரில் இறைவனை வணங்கினாலும் எத்தகைய சடங்குகளை மேற்கொண்டாலும் அவை இறைவனுக்குப் போய்ச் சேரும். ஞான நெறியிலும் பிரம்மத்தை அடையலாம். கர்மம் அல்லது யோக நெறியிலும் பிரம்மத்தை அடையலாம். பார்ப்பனன், சத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகிய அனைவரும் தமக்குரிய பணியை வழிபாட்டைச் சரிவரச் செய்ய வேண்டும். இப்படித் தொடங்கி, பகவத் கீதை நிறைய சொல் கிறது. பகவத் கீதையின் எல்லைக்குள் சமூகத்தின் எல்லாப் பிரிவுகளையும் அடக்கிவிடலாம். எல்லாவகைக் கடவுளரையும் வழிபாட்டு முறைகளையும் சடங்குகளையும் அடக்கிவிடலாம், ஆத்திகனும் நாத்திகனும் பகவத்கீதையின் எல்லைக்குள் இடம் பெற முடியும். புத்தனுக்கும் சமணனுக்கும் இதற்குள் இடம் உண்டு. இப்படி உருவாக்கப்பட்டதுதான் இந்து மதம். வணிகர், நிலக்கிழார் முதலியவர்களின் ஒத்துழைப்பு இல்லாமல் இதைச் செயல்படுத்த முடியாது என்பதையும் நாம் இங்கு கவனிக்க வேண்டும். வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் வைத்து இத்தகைய கருத்தியலின் தோற் றத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். முன்னைய வரலாற்றி லிருந்து இப்போக்கின் முற்போக்குத் தன்மையையும் நாம் பேசமுடியும். இத்தகைய சமூக அமைப்பு இன்னொரு காலத்தில் வரலாற்றின் வளர்ச்சிக்குத் தடையாகவும் மாறிவிடலாம். மனுதர்மம் பற்றி மட்டுமே விரிவுரை நிகழ்த்துவதன் மூலம் இந்திய வரலாற்றை விளக்க முடியாது. மனுதர்மம் எல்லாக்

காலங்களிலும், எல்லாப் பிரதேசங்களிலும் முழு அளவில் செயல்பட்டதாகவும் சொல்ல முடியாது. இங்கு ஒன்றை உறுதியாகச் சொல்லலாம். வேலைப் பிரிவினையைப் பார்ப்பனர் தோற்றுவிக்கவில்லை ஏற்றத்தாழ்வை பார்ப்பனர் தோற்றுவிக்கவில்லை. தனி உடைமையை, குடும்பத்தை, அரசை, பார்ப்பனர் தோற்றுவிக்கவில்லை. அதேபோல மதம் என்பதனையும் பார்ப்பனர் தோற்றுவித்தனர் என்பதற்கில்லை அகமண முறை ஒரு வெற்றி எனவும், தோல்வியின் விளைவு எனவும் சொல்ல முடியும். சமூகத்தில் திணிக்கப்படும் அடிமை முறை, எந்தச் சமூகப்பிரிவுக்கும் என்றும் முற்றான அமைதி தருவதாகவும் இல்லை. அடிமைமுறை ஒடுக்குமுறை நிச்சயம் கலவரங்களைத் தொடர்ந்து தோற்றுவித்துக் கொண்டே இருக்கும். இத்தகைய கலவரங்களிலிருந்து சத்திரியராகட்டும் ' பார்ப்பனராகட்டும் தமக்கு முற்றாக அரண் செய்து கொள்ள முடியாது. உயர் சாதியினர் பெண்ணை அதிக அடிமைத்தனத்திற்கு உட்படுத்தினர். பெண்ணின் கலகக் குரல், என்றும் அவர்களின் நிம்மதியை அழித்துக் கொண்டே இருக்கும். வெறும் கருத்தியலுக்குள் தன்னைப் புதைத்துக் கொள்ள முடியாது. முரண்களோடு கூடிய வாழ்வியலுக்கு ஒருவர் வந்தாக வேண்டும். முரண்களின் நெருக்கடியிலிருந்து எவரும் தப்ப முடியாது. பார்ப்பனியமும் அரசு அதிகாரமும் அதிக அளவில் கைகோர்த்து கொண்டதன் விளைவுதான், இந்துமதம். கடவுளைத் தொடக்கத்திலிருந்தே மறுத்து வந்த சாங்கியம் நியாயம், வைசேசிகம், யோகம், மீமாம்சம் முதலிய தரிசனங்களையும், புத்த மதம் போன்ற கடவுள் மறுப்புப் போக்குகளையும் தனக்குள் உள்வாங்கிக் கொண்டதன் விளைவுதான், இந்துமதம். உள்வாங்கிக் கொண்டதன் மூலம் பலவற்றை அழித்தது என்றும் சொல்லலாம். இந்துமதம் இப்படி வேற்றுமைக்குள் ஒற்றுமை கண்டது. பிரம்மத்தின் தலையிலிருந்து பார்ப்பனனும், தோள்களிலிருந்து சத்திரியனும் ..இப்படியே வைசிகனும், சூத்திரனும் தோன்றினான் என்றவர்ணனை, ஒரு உருவகம் மட்டுமே. இந்த உருவகம் அதன் சாரத்தில் ஒரு கற்பனை. கற்பிதம். சாதியத்தைத் தாங்கும் ஆதாரங்களில் ஒன்றான மதம் என்பதை இப்படி ஒரு உருவகத்திற்குள் அடைக்க முடியாது. இந்த உருவகத்தைக் கடந்து இந்துமத உருவாக்கம் என்ற ஆதாரத்தில்தான் சாதியத்தை விளக்க முடியும்.

மதம் என்ற வடிவத்தில் கருத்தியலை மட்டும் மார்க்சியம் ஆராய்வதில்லை. மதம் என்ற வடிவத்தில் நடைபெற்ற வர்க்கப்

போராட்டத்தை நோக்கி மார்க்சியம் தன் கவனத்தைக் குவிக்கிறது. பார்ப்பனியத்தின் வெற்றி என்ற இந்த நூல் பௌத்த மதத்தை பார்ப்பனியம் எவ்வாறு அழித்து தன்னை நிலை நாட்டிக் கொண்டது என்பதை விரிவாகச் சொல்கிறது. கருத்தியல் அம்சங்களில் இவற்றுக்கிடையிலான முரண் பற்றி அதிகம் பேசும் அம்பேத்கர் அவர்கள், கருத்தியல் முரண்களுக்கு அடியில் இருக்கிற பொருளியல் அம்சம் பற்றி அதிகம் சொல்லவில்லை. பௌத்த மதத்தின் தோற்றத்திற்கோ பிறகு அழிவுக்கோ, காரணமான பொருளியல் அம்சங்கள் பற்றிச் சொல்வது முக்கியம். இதைப் போல பார்ப்பனியத்தின் தோற்றத்திற்கும் காரணமாக அமைகிற பொருளியல் அம்சங்கள், முக்கியம். பார்ப்பனரின் வேள்விகளில் கால்நடைகள் கொல்லப்பட்டன. வேளாண்மையின் வளர்ச்சிக்கு கால்நடைகள் தேவை. வேளாண்மை வளர்ந்து வருகிற காலகட்டங்களில், கால்நடைகளைக் கொல்லுகிற வேள்வி முறையை, பார்ப்பனர்களை, எதிர்க்கிற பௌத்தர்களுக்கு சமூகத்தில் செல்வாக்கு கிடைக்கும். மார்க்சிய வரலாற்றாசிரியர்கள், பவுத்தர் செல்வாக்குப் பெற்றதற்கான இக்காரணம் பற்றிக் குறிப்பிடுகின்றனர். பலவகை நாகரிகங்களுக்கிடையில் உறவு ஏற்படுத்துகிற வணிகர்களை பவுத்தம் போற்றியது. இதைப் போலவே பெண்களையும் தாழ்த்தப்பட்ட சாதியினரையும், பவுத்தமதம் ஏற்றுக் கொண்டது. இவை பற்றி அம்பேத்கர் குறிப்பிடுகிறார். நாம் இளமைக் காலத்தில் பாடநூல்களில், நோய்க்குக் காரணமென்ன, முதுமைக்கு என்ன காரணம்? மரணம் ஏன் ஏற்பட வேண்டும் என்பன போன்ற பிரச்சினைகளுக்கு விடை காண்பதற்காக அரண்மனை வாழ்வைத் துறந்து புத்தர் காடு சென்றார் என்று படித்திருக்கிறோம். 12 ஆண்டுக்காலம் புத்தர் துறவியரோடு பழகி விடைகான முயன்றார். இறுதியாக அவர் கண்ட விடை மையநெறி எனப்படுகிறது. புலன்களை வெறுக்கும் துறவு வேண்டாம். புலன்களை இன்பத்தில் மூழ்கடிக்கிற நுகர்வு வெறியும் வேண்டாம். கடவுள் உண்டு அல்லது இல்லை என்பதால் மனிதச் சிக்கல் தீராது. மனித விடுதலைக்கு இடைக்காலநெறி சங்கம். சாதி வேற்றுமை கூடாது. சங்கத்தினுள் வந்தவர்களைப் பொருத்தவரை தனிவுடைமை இல்லை. ஏற்றத்தாழ்வு இல்லை. சங்கம் முழுமுற்றான தீர்வு அல்ல. எனினும் புத்தரின் நெறி பழங்காலச் சூழலில் எதார்த்தத்திற்குப் பொருந்திய முற்போக்கான நெறி. இது மக்களைக் கவர்ந்ததில் வியப்பில்லை. இது முதற் கட்டம்.

செல்வர்கள் உள்ளே வந்த பொழுது சங்கத்திற்கு உடைமை சேர்ந்தது. அரசு அதிகாரம் புத்த மதத்தை ஏற்றுக் கொண்ட பொழுது, புத்த மதம் நிறுவனப்படுத்தப்பட்டது. பெரிய மடங்கள் தோன்றின. ஆயிரக்கணக்கில் மடங்களில் புத்தத் துறவிகள் வாழ்ந்தனர். தத்துவ ஆராய்ச்சி என்ற பெயரில் தர்க்கங்களின் நுணுக்கங்களில் அறிவாளிகள் தம்மைப்புதைத்துக் கொண்டனர். ஒரு கட்டத்தில் அவர்கள் கண்ட இறுதி உண்மை, சூன்யம், புத்த மதம், புத்தரை இறைவனென்றும் பேசியது. சடங்குகள் புத்தமதத்தை ஆக்கிரமித்துக் கொண்டன. தனி உடைமைக்கும் அரசு அதிகாரத்திற்கும் ஆதரவாகச் செயல் படுகிற புத்தமதம், மக்கள் மீது ஒரு பெரிய பாரம். வரலாற்றின் வளர்ச்சிக்கு இது ஒரு பெரிய தடை. இந்த மதத்தை இனி அழிக்க முடியும்.

இந்து மதம் இதைச் செய்தது. இது வரலாறு. (இது எனக்குத் தெரிந்த சுருக்கமான வரலாறு. வரலாற்றாய் வாளர்கள் இந்த வரலாற்றை தேவையான, விரிவான விவரங் களோடு சரியாகச் சொல்ல முடியும்.)

மதத்தின் தோற்றம் வளர்ச்சி அழிவு ஆகியவற்றை ஒரு மார்க்சியவாதி விளக்குவதைப் போல, டாக்டர் அம்பேத்கரிடம் நாம் எதிர்பார்க்க முடியாது. வரலாறு பற்றி மார்க்சியத்தின் பார்வை, அம்பேத்கரிடம் இல்லை. அல்லது செறிவு பெற வில்லை. அம்பேத்கரின் பிற நூல்களில், ஒருவேளை மார்க்சிய நோக்கிலிருந்து, இந்தக் குறிப்பிட்ட காலவரலாற்றை / சமய வரலாற்றை விளங்கிக் கொள்வதற்குத் தேவையான விவரங்கள் இருக்கக்கூடும். எனினும் முழு அளவில் மார்க்சியராக அவர் இல்லை என்பதைக் கொண்டு அம்பேத்கரை நாம் குறைத்துப் பேச முடியாது. டாக்டர் அம்பேத்கர் இந்தியாவின் மாபெரும் சிந்தனையாளர், சமுதாயப் போராட்ட வீரர். அடித்தள மக்களின் வரலாற்றை ஆதாரமாகக் கொள்கிற மார்க்சியம், டாக்டர் அம்பேத்கர் அவர்களைப் புரிந்து கொள்ளும். பெருமைப் படுத்தும். சாதி என்ற ஒற்றைக் கோட்பாட்டுக்குள் அம்பேத்கரை சிறைப்படுத்தவும் முடியாது. பார்ப்பனியம் பற்றி இன்று அழுத்தம் பெற்றிருக்கிற பெரியாரியப் பார்வையையும் அம்பேத்கரியப் பார்வையையும் ஒரு நிகராக்க முடியாது.

தோழர் கருணாமனோகரன் அடிக்கடி வற்புறுத்துகிற மாதிரி இன்றைய வரலாற்றுச் சூழலில் அடித்தள மக்கள் முன் செல்வதற்கான செயல் திட்டம் நமக்குத் தேவை. மார்க்சியத்திலிருந்தும் அம்பேத்கரியத்திலிருந்தும் பெரியாரியத்திலிருந்தும் இந்தச் செயல் திட்டத்துக்கான ஆதாரங்களைச் சேகரிக்க வேண்டும். பெண்ணியம், சுற்றுச்சூழல், ஆதிவாசிகள் பற்றிய பார்வை இங்கு இணைய வேண்டும். எப்படி என்பதுதான் இன்று நம்மை எதிர்நோக்கியுள்ள கடும் பிரச்சினை. ஒரு தலைச் சுமைக் கோட்பாட்டைவிட ஒரு கைப்பிடியளவு தெளிந்த சமூக அனுபவம் அடுத்த அடியை வைப்பதற்கான ஒளியை நமக்குத் தரும். இது நம் சூழல். இந்தச் சூழலில் மார்க்சியத்தைக் கைவிட வேண்டியதில்லை என்பது என் வேண்டுகோள். ஏகாதிபத்தியம், முதலாளியம், அரசு அதிகாரம் ஆகியவற்றின் சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் அடித்தள மக்கள்மீது செலுத்துவதற்கு ஊடகமாக / கருவியாக இருக்கும் நடுத்தர வர்க்கப் படிப்பாளிகளும் உயர் சாதியினரும் பார்ப்பனியம் என்று பேசி தம்மைப் புனிதப்படுத்திக் கொள்வது பற்றி அடித்தளமக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ●

---

பார்வைக்கு :

1. பார்ப்பனியத்தின் வெற்றி, ஆசிரியர் : டாக்டர் அம்பேத்கர், தமிழாக்கம் : கோவிந்தசாமி, வெளியீடு : சமூகநீதிப் பதிப்பகம், 54, கண்ணகி நகர், திருப்பூர்.

2. சாதிய சமூக அமைப்பும் தமிழ்த் தேசிய இனப் பிரச்சினையும் ஆசிரியர் : கருணாமனோகரன், வெளியீடு சமூகநீதிப் பதிப்பகம், திருப்பூர்.

# 13

# பெண்ணியம் -உலகை உய்விக்கும் மெய்யியல்

இன்று பெண்ணுரிமை என்றும், பெண் விடுதலை என்றும் தமிழகத்தில் பரவலாக குரல் எழுந்திருக்கிறது. இந்தக் குரலின் வழியே வெளிப்படும் நியாயங்களை நாம் ஒப்புக்கொள்ள முடியும். பெண்ணுக்கு உரிமை வேண்டும். விடுதலை வேண்டும். எத்தகைய சமூகச் சூழலில் இவை சாத்தியம் என்பது பற்றி இங்கு நாம் சிந்திக்க வேண்டும்.

இன்றைய சமூகச் சூழலில் ஆண்களுக்கு உரிமை உண்டா? விடுதலை உண்டா? என்ற கேள்வியையும் இங்கு உடனடியாக சேர்த்தே கேட்டுக் கொள்வோம். இப்படிக் கேட்பதனால் ஆண் தன் ஆதிக்கத்தைப் பெண்ணின் மீது செலுத்துவதில்லை என்று நாம் கூறுவதாக கருத வேண்டியதில்லை. குடும்பத்திலும் சமூக அளவிலும் ஆண்கள், பெண்களின் மீது கூடியவரை அதிக அளவில் ஆதிக்கத்தைச் செய்கிறார்கள் என்பதற்குச் சான்றுகள் தேட வேண்டியதில்லை. கல்வித் துறையிலும், நிர்வாகத் துறை யிலும் பெண் தனக்குப் போட்டியாக வந்திருப்பதை ஆண் இன்று நன்றாகவே அறிந்துள்ளான். பெண்ணின் சம்பாத்தியம் இல்லாமல் இன்று குடும்பம் நடத்த இயலாது என்பதையும் ஆண் உணர்ந்திருக்கிறான். குடும்பத்திற்குள் ஆணுக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் பெண் செய்துதருவதன் மூலம்தான் வெளி உலகத்தில் ஆண் குறைந்த அளவுக்கேனும் தன்னை நிலை நிறுத்திக் கொள்கிறான். இவ்வகையில் ஆணின் சம்பாத்தியத்தில் பெரும் பகுதிக்கு பெண்ணின் உழைப்பு காரண மாக இருக்கிறது என்பதையும் ஆண் இன்று உணரத் தொடங்கி யுள்ளான். பெண் இல்லாமல் இவனுக்கு வாழ்க்கை இல்லை என்பதையும் ஆண் சரியாகவே அறிந்திருக்கிறான். இன்றைய சூழலில் பெண்கள் ஆண்களைப் பெருமளவுக்கு கலவரத்துக்கு உட்படுத்த முடியும் என்பதும் நிதர்சனமாகி வருகிறது.

அப்படியானால் பெண்ணுரிமை, ஆண் ஆதிக்கம் என்னும் இவ்விரு போக்குகளை எதிர் நிலைப்படுத்தி இவற்றுக்கிடையில்

மோதலை உருவாக்குவதன் மூலம் பிரச்சினை தீருமா? என்பது பற்றியும் நாம் சிந்திக்க வேண்டும். சற்று ஆழ்ந்து பார்த்தால் பெரும்பாலான ஆண்கள், சமூகத்தின் பரப்பளவில் செயல்படும் ஆதிக்க சக்திகளின் கருவிகளாகத்தான் செயல்படுகிறார்கள் என்பதையும் இவ்வாறு கருவிகளாகச் செயல்படும் பொழுது ஆதிக்கவாதிகளின் தேவைகளுக்குகந்த முறையில் அவர்களுக்கான உணர்வுகளை ஆதிக்க உணர்வுகளை தமக்குள் சேகரித்துக் கொள்கிறார்கள் என்பதையும் நாம் புரிந்து கொள்ள முடியும். அரசு அதிகாரம் இன்றும் பெரும்பாலும் ஆண்களின் மூலம்தான் நடைபெறுகிறது. தனிச் சொத்துரிமை என்பது காலம் காலமாக ஆண்களிடம்தான் இருக்கிறது. அரசு, முதலாளி, நிலப்பிரபு, தனி உடைமையாளன் இவர்கள் பிற உழைக்கும் மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தாமல் தம்மை நிலை நிறுத்திக் கொள்ள இயலாது. ஆண்கள் செலுத்துவதாக நாம் அறிந்திருக்கிற ஆதிக்க உணர்வு இவ்வகையில்தான் செயல் படுகிறது. ஆண்கள் வழியே செயல்படுத்தப்படும் ஆதிக்கத்தின் மூலங்கள் என அரசு, தனி உடைமை, முதலாளியம் ஆகியவற்றை நாம் காணமுடியும். இந்த ஆதிக்கங்கள் தம்மை நிலைநிறுத்திக் கொள்ளவும், பெருக்கிக் கொள்ளவும், கூலி உழைப்பாளிகள்/ அடிமைகள் தேவை. இம்முறையில்தான் கூலிக்காரர்களும் தாழ்த்தப்பட்டவர்களும் உற்பத்தி செய்யப் படுகிறார்கள். இந்த வரிசையில்தான் பெண்கள் சேர்ந்திருக் கிறார்கள். காலம் காலமாக சமூகத்தில் நிலை நிறுத்தப்படும் அடிமைத்தனத்தின் ஒரு பகுதிதான் பெண் அடிமைத்தனம். முதலாளியம், அரசு அதிகாரம் இவற்றோடு இன்றைய சூழலில் புதிய காலனியம் ஆகிய ஆதிக்க சக்திகளுக்கு பெரும்பாலான ஆண்களும் தான் அடிமைப்பட்டிருக்கிறார்கள். ஆண்கள் தம் அடிமைத்தனத்தை உணரும் பொழுது, பெண் களையும் சேர்த்தே ஆதிக்க சக்திகளுக்கு தாம் அடிமைப்படுத்தி யிருப்பதை உணர்ந்து கொள்வார்கள். ஓர் அடிமை, தனக்கு இன்னொரு அடிமையைத் தேடக் கூடாது என்பதையும் ஆண் உணர்ந்து கொள்வான்.

இந்தச் சிக்கலின் இன்னொரு முக்கியப் பரிமாணத்தின் மீது நம் கவனம் குவிய வேண்டும். ஆதிக்க சக்திகள் இன்று தொடர்ந்து தம்மை வலுப்படுத்திக் கொள்கின்றன. இவற்றுக்குத் தம்மை உட்படுத்திக் கொள்வதன் மூலம் மனிதர் தம் படைப்புத் திறனை, ஆக்கத்திறனை இழக்கிறார்கள். தம் ஆளுமையை அழித்துக் கொள்கிறார்கள். உலகச் சந்தையோடு இன்று

இந்தியா இணைக்கப்படுகிறது. சந்தைப் பொருளாதாரம் என்ற முறையில் முதலாளியம் ஆக்கம் பெறுகிறது. நவீனத் தொழில் நுட்பங்கள் தொடர்ந்து இங்கு வந்து சேர்கின்றன. ஏற்றுமதிக்கு அதிக வாய்ப்புகள் இங்கு செய்யப்படுகின்றன. முதலாளியம் தொடர்ந்து பெருகுவதற்கான வாயில்கள் திறந்து வைக்கப்படுகின்றன. அரசு அதிகாரம் இன்று முழு அளவில் முதலாளியத்தோடு ஒத்துழைக்கிறது. இயந்திரங்களின் நுட்பங்கள் இன்று பெருகும்போது இயற்கை தொடர்ந்து அழிக்கப்படுகிறது. நீர் நிலைகளும் நிலமும் நாசமாகின்றன. மக்களின் உடல் நலம் கடுமையான பாதிப்புக்கு உள்ளாகிறது. வாழ்க்கை வசதிகள் என்ற முறையில் நுகர்வுத் தேவைகள் பெரும் எடுப்பில் ஊக்குவிக்கப்படுகின்றன. நுகர்வியம் இன்று எல்லோரையும் ஆட்கொண்டிருக்கிறது. கிராமங்கள் அழிகின்றன. உழவர்களின் வாழ்க்கை கடும் சிக்கலுக்கு உள்ளாகி இருக்கிறது. இன்றைய சூழலில் மனிதவாழ்க்கை வாழத் தகுந்ததாக இல்லை. வாழ்வில் தன்மானம், நேர்மை முதலியவற்றுக்கு இடமில்லை. அதிகாரம் எல்லோரையும் சிதைக்கிறது, நாசமாக்குகிறது. விடுதலைக்கான இயக்கங்கள், முயற்சிகள் ஒடுக்கப்படுகின்றன.

இந்தச் சூழல் தான் ஆண்களையும், அதே சமயம் பெண்களையும் கடுமையாகப் பாதித்திருக்கிறது. உரிமைகள் என்பவை இங்கு அரசு, முதலாளியம் ஆகியவற்றுக்குத்தான். ஆணுக்கெதிரான போர்க்குரல் எழுப்புவதைக் காட்டிலும், ஆண்களும் இன்று அடிமைப்பட்டிருப்பதை பெண் உரிமை இயக்கங்கள் பேசவேண்டும். காலங்காலமாக அடிமைத்தனத்துக்கு உட்பட்டிருக்கிற பெண்களின் நிலையில் தான் இன்று ஆண்களும் இருக்கிறார்கள் என்பதை ஆண்கள் இன்று உணர்ந்துகொள்ள வேண்டும். உண்மையில் இயற்கையும் வாழ்வுரிமைகளும் இவர்களிடமிருந்து பறித்துக் கொள்ளப்படுகின்றன. இவர்களின் படைப்புத்திறன்கள் பறித்துக் கொள்ளப்படுகின்றன அல்லது அழிக்கப்படுகின்றன. இவர்களுக்கு நிலம் சொந்தமில்லை. மொழி சொந்தமில்லை. அரசு சொந்தமில்லை. வாழ்வதற்கான உரிமைகள் இவர்களுக்கு இல்லை. இவையனைத்தையும் இவர்களிடமிருந்து பறித்துக் கொண்டவர்கள் ஆளும் சக்திகள். அவர்களுக்காக இவர்கள் தொடர்ந்து உழைப்பில் அகப்படுத்தப்படுகிறார்கள். இப்படி உழைப்பதால் இவர்கள் மேலும் மேலும், தம்மை, தம் வாழ்வை, தம் படைப்புத்திறனை அழித்துக்கொள்கிறார்கள். இவர்களிடம் அன்பு இல்லை. நேசம் இல்லை. தியாகம் இல்லை. பொய்யும், கோழைத்தனமும், போக்கிரித்

தனமும், வேசைத் தனங்களும் இன்று பெருகிவருகின்றன. வாழ்க்கை என்பது இன்று சாக்கடையாகிவிட்டது. சமூகத்தின் மேட்டுத் தளங்களில் கோலாகலங்களும், ஒளி வெள்ளங்களும் பெருகிவரும்போது இவர்கள் இன்னும் ஆழ்ந்த இருட்பள்ளங் களில் தள்ளப்படுகிறார்கள்.

இப்பொழுது பெண்ணியம் பற்றிப் பேசுவோம். அடிப் படையில் பெண்ணியம் என்பது இன்றைய சூழலில் உலகின் உய்வுக்கான மெய்யியல். உலகைப் புதிதாகப் படைப்பதற்கான சிந்தனைக்களம். இயற்கை செழிப்போடு இருக்கவேண்டும். ஆறும், கடலும் வானமும் வளமானதாக இருக்கவேண்டும். மனிதர் மத்தியில் ஏற்றத்தாழ்வு தேவையில்லை. சுதத்திரமான சூழலில் தான் மனிதர்க்குள் படைப்புத்திறன் மேம்படும். மனிதர்க்குள் அன்பு சுரக்கும். உழைப்பு எப்பாழுதும் மனிதனின் ஆற்றலை, ஆக்கத்திறன்களை தொடர்ந்து வளர்க்கும். சமத் துவம்தான் மனிதன் வாழ்வதற்கான ஆரோக்கியமான சூழல். உழைப்பின் மூலம்தான் மனிதன் சமூகத்தை தனக்குள் பெறு கிறான். சமூக உணர்வைப் பெறுவதன் மூலம் தான் மனிதன் வரலாற்றில் கலக்கிறான். மனிதன் தன்னைப் பிரபஞ்ச அளவில் விரிவுபடுத்திக் கொள்பவன். இவன் தனக்குள் விரிந்து செல்லும் எல்லைகளைச் சுருக்கமுடியாது. போர்கள் மனிதர்களுக்குத் தேவை இல்லை. ஆயுதங்கள் தேவை இல்லை. ஒரு செடி வளர்த்தவனுக்கு இந்த உண்மைகள் தானே புரியும். குழந்தை யைப் பெற்றெடுத்து வளர்க்கும் தாய்க்கு இந்த உண்மை புரியும். தன்னை இழந்து படைப்புகளை உருவாக்கும் பாரதி களுக்கு இந்த உண்மை புரியும். ஆதிக்கவாதிகளுக்கு இந்த சூழலில் இடமில்லை. மனிதனின் ஆக்கத்திறன்கள் தமக்குள் சேர்ந்திருக்கிற தொழில் நுட்பங்களை வைத்து ஆதிக்க சக்திகள், ஆக்கத்திறன்களுக்கு மூலமான மனிதர்களை அழிக் கிறார்கள். இவர்களிடமிருந்து மனிதன் தன்னை, தன் ஆக்கத் திறன்களை, கருவிகளை மீட்டுக்கொள்ள வேண்டும். பெண் களின் வழியே வெளிப்பட்டுத் தெரிகிற தாய்மை- காந்தி, மார்க்ஸ், ஏசு, வள்ளுவர் முதலிய சான்றோர்களுக்குள் இயங் கியது. சமூக வாழ்வின் மேம்பாட்டுக்காக தம்மை இணைத்துக் கொள்கிற அனைவர்க்குள்ளும் இயங்குவது இந்தத் தாய்மை தான். இயற்கையை, உயிர்களை, மனித வாழ்வை இன்று காப்பாற்றக் கூடியது இந்தத் தாய்மைப்பண்புதான். படைப்புத் திறன் மிக்க கவிஞர்கள், படைப்பாளிகள் இந்தத் தாய்மையை தமக்குள் இயல்பாக உணர்ந்திருக்கிறார்கள். பெண்ணியம்

# 15

# தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு

சங்க இலக்கியங்களை ஆதாரமாகக் கொண்டு நண்பர் ராஜ் கௌதமன் தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாட்டை மதிப்பிடுகிறார். சங்க காலத்தில் குறிஞ்சி, முல்லை, நெய்தல் ஆகிய நிலங்களில் வாழ்ந்த குறவர்கள், ஆயர்கள், பரதவர்கள் ஆகியவர்கள் தம் நிலம் சார்ந்த தொழிலில் ஈடுபட்டிருந்தார்கள். பாலை நிலத்தில் எயினர்கள் வாழ்ந்தார்கள். குறவர்கள், குறிஞ்சி நிலத்தில் இயற்கையாக விளைந்த உணவுப் பொருள்களை உண்டார்கள். தினை பயிரிட்டார்கள். விலங்குகளையும் பிடித்தார்கள். ஆயர்கள் மாடு மேய்ந்தார்கள். பரதவர்கள் கடலில் மீன் பிடித்தார்கள். இவர்கள் கிடைத்ததை தமக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள். இவர்களுக்குள் சாதி வடிவிலோ வேறு வடிவிலோ ஏற்றத்தாழ்வுகள் இல்லை. இவர்களுக்கு தெய்வங்கள் இருந்தன. தம் வாழ்க்கை நிலைக்கு ஒத்த தெய்வங்களை இவர்கள் வழிபட்டார்கள். எயினர்கள் வழிப்பறி செய்தார்கள். இவ்வாறு அவர்களைப் பொருத்தவரை இயல்பான வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார்கள். நிலம் யாருக்கும் உடைமையாகவில்லை. எல்லாமே பொதுவாக இருந்தன. இவர்கள் கள் உண்டார்கள். ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள். ஆண், பெண் உறவில் சமத்துவம் நிலவியது. இவர்களுக்குள் தனிவுடைமை இல்லை. அரசு அதிகாரம் இல்லை. இவர்களை ராஜ்கௌதமன் ஆதித் தமிழர் என்கிறார். இவர்களின் பண்பாட்டைப் போற்றுகிறார். இவர்களின் பண்பாட்டைத்தான் இன்று தலித் பண்பாடு என இனம் காண்கிறார்.

தொடக்கத்தில் உழவர் சமூகம் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தது. நெல் சாகுபடியான காலத்திலிருந்துதான் சமூகத்தில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. தனிவுடைமை, அரசு, நகரங்கள் ஏற்பட்டன. வடக்கிலிருந்து வைதிகப் பார்ப்பனர்கள் தமிழகத்திற்குள் புகுந்தனர். வடக்கத்திய தெய்வங்களைத் தமிழகத்திற்குள் புகுத்தினர். புராணக் கதைகள் சொன்னார்கள். மேல் உலகம் கீழ் உலகம் என்றார்கள். யாகம் செய்தார்கள். சடங்குகளை தாராளமாக ஏற்படுத்தினார்கள். அரசனை தெய்வம் என்றார்கள். அரசனுக்குப் பரம்பரைப் பெருமை

ம

கற்பித்தார்கள். வடக்கத்திய ஆறுகளைப் போல தெற்கத்திய ஆறுகளுக்கும் தெய்வத்தன்மை சொன்னார்கள். இப்படியெல் லாம் நிறைய விவரங்களை சங்க இலக்கியங்களிலிருந்து தொகுக்கிறார் ராஜ் கௌதமன். தனிவுடைமை, அரசு தேவைக் காகவே சாதி மதச்சடங்குகள், அரசனுக்கு தெய்வத்தன்மை கற்பித்தல் ஆகியன சொல்லப்பட்டன என்றும் சொல்லுகிறார். மேற்குடித் தமிழர்கள், வைதிகப் பார்ப்பனர்களின் செல்வாக் குக்கு உட்பட்ட பெரும்பாலான நிகழ்ச்சிகள் பரிபாடல், கலித் தொகைப் பாடல்களிலிருந்து கௌதமன் எடுத்துச் சொல் கிறார். இவ்விரு தொகை நூல்களும் சங்க இலக்கியத்தினுள் மிகப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவை. கி. பி. 6—8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. கௌதமன் இந்த விவரத்தை குறிப்பிடவில்லை.

வைதிகப் பார்ப்பனரின் கொள்கைகள் முதலியவற்றை ஏற்றுக் கொண்டவர்களை மேற்குடித்தமிழர் என்று கூறுகிறார். கௌதமன் பார்வையில் இவர்களும் தமிழர்கள்தான். வைதிகப் பார்ப்பனரோடு பவுத்தர், சமணர் ஆகியவர்கள் தமிழகத்துக்கு வந்து சேர்ந்ததையும் சொல்கிறார். இங்குதான் பெண் அடிமை யாக்கப்பட்டாள். நன்மை, தீமைகள் கற்பிக்கப்பட்டன. உடைமை புனிதப்படுத்தப்பட்டது. வணிகர் நேர்மையாளர்களா கச் சித்தரிக்கப்பட்டார்கள். மன்னர்களின் கொலை வெறியை, நாடு பிடித்தலைப் போற்றி புலவர்கள் பாடினார்கள்.

குறிஞ்சி, முல்லை, நெய்தல் ஆகிய நிலங்களில் வாழ்ந் தவர்களை இதுவரை யாரும் புலையர் என, இழிசினர் என இகழ்ந்ததில்லை. மருத நிலத்தில் துணி சுத்தம் செய்த பெண் புலைச்சி எனப்பட்டாள். தோல், பறை ஆகியவற்றோடு தொடர்புடையவர் புலையர் ஆயினர். ஈமச்சடங்கோடு தொடர் புடையவர் புலையர்கள். பாணர்கள் முன்னைய சமூகத்திலிருந்து விடுபட்டு இப்பொழுது தம்மை ஆதரிப்பவர் தேடி அலைந் தார்கள். தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே தூது போனார்கள். தலைவனை பரத்தையோடு கூட்டிவைத்தார்கள். இப்பொழுது இவர்களும் இழிந்தவர் ஆனார்கள். இதற்கான சூழலும் மருத நிலம்தான். இவை அனைத்தையும் வைதிகப் பார்ப்பனரோடு கௌதமன் தொடர்புபடுத்திச் சொல்கிறார்.

ஆதித்தமிழர்களிலிருந்து தான் மேற்குடித்தமிழர்கள் தோன்றியிருக்க முடியும். வேளாண்மைத் தொழிலைத்

தொடர்ந்து தான் மேற்குடித்தமிழர் தோன்றினர். தனிவுடைமையும், அரசும், நகரங்களும் இவர்களை மேற்குடி மக்களாக்கின. வேளாண்மை தோன்றாமலும், சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படாமலும் இருக்க முடியாது. வரலாற்றின் தொடக்கம் என இதைத்தான் குறிப்பிடுகிறோம். தனிவுடைமை, அரசு ஆகியவற்றோடுதான் வரலாறு தொடங்குகிறது. நாகரிகம் தொடங்குகிறது. தனிவுடைமையும் அரசும் தோன்றும்போதே, முன்னைய இனக்குழு சமூகங்களின் பொதுமையை மறுக்கத்தான் செய்யும். முன்னைய சமூகம், முற்றாக அழிந்துவிடுவதும் இல்லை. புதுவகைச் சமூகத்தினுள்ளும் முரண்பாடுகள் தொடரும். இந்தச்சமூகம், தனக்கான கருத்தியலைத் தொடர்ந்து உச்சரிக்கும். இதைத் தமிழ்ச்சமூகம் எனக் கொண்டால், தனி உடைமையும் அரசும் இங்கு தாமே தோன்றியவை தாம். இனக்குழுச் சமூகத்தின் எத்தகைய முரண்பாடுகளிலிருந்து தவிர்க்க இயலாமல் இந்தப் புதுச்சமூகம் தோன்றியது என்பது பற்றி கௌதமன் எதுவும் சொல்வதில்லை. மார்க்சியம் தெரிந்தவர் என்ற முறையில் இங்கு அவர் இது பற்றி பேசியிருக்க வேண்டும். தமிழ்ச் சமூகத்தினுள் தனி உடைமையும் அரசும் தோன்றியதற்கான ஆதாரங்களை சங்க இலக்கியப் பாடல்களிலிருந்து துல்லியமாகச் சொல்ல முடியுமா என்பதும் ஒரு கடுமையான சிக்கல்தான். எனினும் பொதுவிதியை இவர் குறிப்பிட்டிருக்க வேண்டும். வைதிகப் பார்ப்பனர் பற்றி தொடர்ந்து ஓயாமல் குறிப்பிடும் கௌதமன், தமிழகத்தில் தனிவுடைமை, அரசு ஆகியவற்றின் தோற்றத்திற்கு வைதிகப் பார்ப்பனர்தான் காரணம் என்று சொல்லவில்லை. பவுத்தர்களும் சமணர்களும் தமிழ்ச் சமூகத்தில் என்னென்ன தீமைகளைப் புகுத்தினார்கள் என்பதை இந்த நூலில் சொல்லவில்லை. ஒருவேளை நீதி இலக்கியம் பற்றிய அடுத்த நூலில் இவர் சொல்லலாம்.

வடக்கில் அரசும் நகரங்களும் தோன்றிய பிறகுதான் தமிழகத்தில் அரசுகள் தோன்றின என்றும் சொல்லுகிறார். சேரநாட்டில் பார்ப்பனர் பெருமளவு குவிந்ததைச் சொல்கிறார். பார்ப்பனியத்தின் தங்குமிடமாக, விளை நிலமாக மதுரை இருந்ததைச் சொல்கிறார். வைதிகப் பார்ப்பனர்கள் வந்தார்கள் தம் ஆதிக்கத்தை இங்கு தக்கவைத்துக் கொண்டார்கள். தனிவுடைமை, அரசு ஆகியவற்றின் பாதுகாப்புக்காக பல மூடக் கொள்கைகளைப் பரப்பினார்கள். இவற்றையெல்லாம் நாம் மறுக்கவில்லை. தனிவுடைமையும் அரசும் தமிழகச் சூழலில் தோன்றின என்றால், இவற்றின் தோற்றத்திற்கும்

ஆக்கத்திற்குமென கொள்கைகள் / மூடக் கொள்கைகள் இங்கேயே இல்லாமல் எப்படி இவை தோன்ற முடியும்? அப்படி யானால் தமிழகச் சூழலில் இருந்த இதற்கான கருத்திய லாளர்கள் யார்? கௌதமன் கண்டுபிடித்திருக்க வேண்டும். சும்மா கதைவிடக்கூடாது.

குறிஞ்சி, முல்லை, நெய்தல் ஆகிய நிலங்களிலேயே, தெய்வங்கள் சடங்குகள் என சிலவற்றைப் பார்க்கிறோம். இவை ஆதித்தமிழருடையவை. வைதிகப் பார்ப்பனரோடு இவற்றுக்குத் தொடர்பில்லை. அப்படியானால் வேளாண்மை, தனிவுடைமை, அரசு ஆகியவற்றின் சூழலில் தெய்வங்களும் சடங்குகளும் வளர்ச்சியடையாமல் இருக்க முடியுமா? தெய்வக் கதைகள் உற்பத்தியாகாதா? பெருகாதா? வைதிகப் பார்ப் பனரின் நுழைவு, ஒரு வேளை இந்தப் போக்கைத் தீவிரப்படுத்தி யிருக்கலாம். மேற்குடியினர்க்கு இந்தத் தீவிரப்படுத்தலும் தேவையாக இருக்கலாம். இந்தச் சூழலில் பார்ப்பனரை மட்டும் எப்படிக் குற்றவாளியாக்குவது? வரலாற்றுச் சூழலைப் புறக் கணித்துவிட்டு மார்க்சியமும் தெரிந்திருக்கிற கௌதமன், எப்படி இப்படிச் செய்ய முடியும்? பார்ப்பனியத்தை இன்று களைய வேண்டியது அவசியம்தான். தனிவுடைமை, அரசு ஆகியவற்றோடு சேர்த்து பார்ப்பனியத்தையும் களையத்தான் வேண்டும். இந்த உண்மை கௌதமனுக்கு நன்கு தெரிந்து தான் இருக்கிறது. மற்றவரைப் போல பார்ப்பனியத்தை மட்டும் களைந்துவிட்டு தனிவுடைமையையும் அரசையும் கௌதன் பத்திரப்படுத்தவில்லை.

ராஜ்கௌதமன் தரும் விவரங்களிலிருந்தே சுத்தம், அசுத்தம், தீட்டு ஆகிய கொள்கைகள் மற்றும் சாதி வேறுபாடு ஆகியவை இங்கேயே இருந்தன என்று நாம் கொள்ளத்தக்க முறையில் இருக்கின்றன. இவற்றோடு தேவைக்கு அதிக மாகவே வைதிகப் பார்ப்பனரை கௌதமன் தொடர்பு படுத்துகிறார் என்பதும் வெளிப்படையாகவே தெரிகிறது. சங்க இலக்கியப் பாடல்களுக்கு விளக்கம் தந்த உரை யாசிரியர்களும் பிற்கால இலக்கணிகளும் குறிஞ்சி, முல்லை, நெய்தலில் வாழ்ந்த மக்களை நிலமக்கள் எனவும் தலை மக்கள் எனவும் வேறுபடுத்திக் காட்டுகின்றனர். அகத் திணைப் பாடல்களில் தலைவன், தலைவி என வருபவர் இந்த தலை மக்கள் தான் எனவும் கூறுகின்றனர். சங்கப் பாடல்கள் இப்படி முற்றாகப் பொருள்படுத்த இயலாது

எனினும், இப்படிப் பொருள்படுத்துவதற்கான கூறுகள் அங்கங்கே இருக்கின்றன. அப்படியானால், ஆதித்தமிழர் சமூகமும் ஏற்றத்தாழ்வை உள்ளடக்கிய ஒரு வகையான மாற்றத்திற்கான போக்கில் இருந்தது என்றுதான் முடிவு செய்ய வேண்டும். குறிஞ்சி நிலத்திலிருந்து தான் வேளிர்கள் தோற்றம் பற்றிச் சொல்ல முடியும். இவையன்றியும் ராஜ் கௌதமன் கூறும் இந்த ஆதிச்சமூகம், எப்படித் தனக்குள்ளிருந்தே மேற்குடி சமூகத்திற்கு இடம் கொடுத்தது என்பதுதான் மிக முக்கியமான கேள்வி.

இவ்விரு சமூகத்திற்கிடையில் உள்ள உறவுபற்றி கௌதமன் சிலவற்றைக் குறிப்பிட்டாலும் இவ்விரு வகைச் சமூகங்களையும் பெரும்பாலும் பிரித்து வைத்தே பேசுகிறார். மருத நிலத்திலிருந்து தோன்றிய புதிய சமூகம், தன் ஆளுகையை மற்ற சமூகங்களில் விரித்துக் கொண்டிருந்தது என்பதற்கு அவர் சங்க இலக்கியத்திலிருந்து சான்று தர முடியும். முல்லை நிலத்திலிருந்துதான் உழவர்கள் தோன்றியிருக்க முடியும். வரலாற்றின் ஓட்டத்திற்குள் / வளர்ச்சியினுள் வராமல் எந்தச் சமூகமும் தனித்திருக்க முடியாது. ஆதித்தமிழரின் நிலங்களின் மீது மருதநிலத்து அரசுத் தமிழர்கள் ஆதிக்கம் செய்தார்கள். ஆதித்தமிழர்களின் நிலங்கள் மட்டுமல்லாமல் சுதந்திரமும் பறிபோயிற்று. வேளாண்மைக்கும் வேறு பல தொழில்களுக்கும் தேவையான உடலாற்றல் மிக்க உழைப்பாளிகளை ஆதித்தமிழர்களிடமிருந்துதான் இவர்கள் அபகரித்திருக்க வேண்டும்.

ஆதித்தமிழர்களின் முன்னைய உலகம் மிகக் குறுகியது. இப்பொழுது அவர்கள் மேலும் விரிந்த உலகத்திற்குள் வருகிறார்கள். சிலவற்றை இழந்தாலும் பலவற்றைக் கற்றுக் கொள்கிறார்கள். இந்த வரலாற்றிலிருந்து அவர்கள் தம்மைப் பிரித்துக்கொண்டு இனி போய்விட முடியாது. மருதநில சமூகத்தில்தான் இவர்கள் அடிமைகளானார்கள். தாழ்த்தப்பட்டவர் ஆனார்கள். உழவர் சமூகம் என்பதனுள் நம் அசலான உழவர்களைக் காண முடியுமா? இங்கெல்லாம் சில/பல சமூகப்பிரிவினைகள் ஏற்படுகின்றன. தன்னை உயர்ந்தவர் என்றும் பாரம்பரியப் பெருமை உடையவர்கள் என்றும் சிலர் சொல்லிக் கொள்கின்றனர்.

இவ்வாறெல்லாம் வரலாற்றில் சில போக்குகள் ஏற்படுவதை நாம் மறுப்பதற்கில்லை. இவற்றை வளர்ச்சி எனச்

சொல்கிறோம். சிலருக்கு கூடுதலான வளர்ச்சி. பலருக்கு குறைவான வளர்ச்சி. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுது நாம் என்ன பார்க்கிறோம்? தலித் மக்கள் வரலாற்று வளர்ச்சியில் தமக்குரிய பங்கைப் பெறவில்லை. வரலாற்றிலிருந்து ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள். ஒதுங்கியிருப்பதன் மூலம் வரலாற்றை இவர்கள் தம் நோக்கில் திருப்ப முடியாது. வரலாற்றுக்குள் இவர்கள் அத்துமீறி நுழையத்தான் வேண்டும். வரலாற்றின் அனைத்துப் பரிமாணங்களையும் இவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். சிலவற்றையேனும் கைப்பற்றவேண்டும். வரலாற்றுக்கு தாம் இன்றியமையாதவர்கள் என மெய்ப்பிக்கவேண்டும். சமூகத்தில் தம்மோடு ஒத்த சில பிரிவுகளோடு உறுதியாக உறவு கொள்ள வேண்டும். இன்றைக்கு தலித் மக்கள் தம்மை நிலை நிறுத்திக் கொள்வதை இப்படித்தான் செய்ய முடியும். தனி உடைமை வேண்டாம். அரசு வேண்டாம். ஆண், பெண் சமத்துவம் தேவை. பொதுமை/பொது உடைமை தேவை. இப்படி ஆதி தமிழர்களின் உணர்வுகளை தமக்குள் உறுதிப் படுத்திக் கொண்டு, இந்த உணர்வுகளுக்கு சோசலிசம் என்று பொருள் சொல்லி இவர்கள் முன்னுக்குவர வேண்டும். வைதிகப் பார்ப்பனர் மட்டுமல்ல, வைதிக உயர் சாதிகளும் இவர்களுக்கு எதிரானவர்கள்தான், அரசும் தனி உடைமையும் இவர்களுக்கு எதிரான சக்திகள் தான்.

ராஜ் கௌதமன் நூலின் இறுதிப்பாகம் மிகச் சிறப்பான பகுதி என மதிப்பிடலாம். அதிலும் இதன் இறுதிப்பகுதி முக்கியமானது. பெண் அறம், ஆண் அறம் என சரியாகவே பகுத்துப் பேசுகிறார். தனி உடைமையும் அரசும் ஆண்களின் அறம். இன்பம், அருள் ஆகியவை பெண்களின் அறம். இந்த அம்சங்களிலிருந்து இந்த அறப்பிரிவுகளை நாம் மேலும் ஆழப்படுத்திச் சொல்லமுடியும். ஆணுக்கு / தலைவனுக்கு, பெண் / தலைவி அறம் சொல்கிறாள். பொருள் முக்கியமில்லை. வாழ்க்கை முக்கியம். இளமை முக்கியம். இன்பம், குழந்தை முக்கியம். பிரிவு தேவையில்லை. வேற்றூர் வேண்டாம். இருப்பதை உண்போம். இந்த அறத்தை பெண் எங்கிருந்து எடுத்துக் கொள்கிறாள்? முன்னைய பழஞ்சமூகத்திலிருந்து பெண் இந்த அறத்தை எடுத்துக் கொள்கிறாள். இது மீண்டும் ஆதித்தமிழருடைய அறம் தான். தலைவன் மேற்தடித் தமிழனாகும் முயற்சியில் ஈடுபடும்பொழுது, இந்தப் போக்கு வேண்டாம். இவை தீங்கு தரும். நாம் ஆதித்தமிழராகவே இருப்போம் என்கிறாள் தலைவி.

கௌதமன் தன் பார்வையை மேலும் விரிவுபடுத்திப் பார்த்திருந்தால், இதற்கொத்த நீதியை புறநானூற்றுப் பாடல்களில் நிறைய கண்டிருக்க முடியும். மன்னர்களின் வேள்விகளை, வெற்றிகளைப் பாராட்டும் புலவர்களுக்கிடையில், வேறு பல அறங்களை வற்புறுத்தும் புலவர்களும் இருந்தனர். 'உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்', 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்', 'உண்டால் அம்ம இவ்வுலகம்', 'நான் வணிகப் பரிசிலன் அல்லன், எத்திசை செலினும் அத்திசைச்சோறே' இப்படி ஒரு நூறு பாடல்களையேனும் கௌதமன் கண்டிருக்க முடியும். இந்தப் பாடல்களின் பொதுக்கருத்து என்ன? முன்னைய சமூகத்தின் அறத்தை / பொதுமை அறத்தை இப் பாடல்கள் சொல்லுகின்றன. இவற்றைப் பாடியவர்கள் புலவர்கள் என்றாலும், இவர்களுக்குள் செயல்பட்ட கரு, ஆதித்தமிழருடையது என்பதில் ஐயமில்லை. இந்த ஆதித் தமிழர்களை குறவர், எயினர், ஆயர், பரதவர் என்று மட்டுமே வகைப்படுத்த முடியுமா? புராதனப் பொதுமைச் சமூகம் என்று நாம் பொதுப்பெயர் சூட்ட முடியாதா? ஆழ்ந்து பார்த்தால் வைதிகப் பார்ப்பனரின் அறத்திற்கெதிராக, தொடர்ந்து தமிழ்ச் சமூகத்தில் உறுதியாக நிலைபெற்று இருந்தது, இந்த ஆதித்தமிழருடைய அறம் தான். இந்த அறத்தை பவுத்தர்களும் சமணர்களும் வலுப்படுத்தினார்கள். இவர்களும் வைதிகப் பார்ப்பனர்களுக்கு எதிராக நின்றார்கள். தமிழகத்தில் தனி உடைமைக்கும் அரசுக்கும் ஆதரவான சக்திகளை வைதிகப் பார்ப்பனர் என்று ஒற்றைப் பரிமாணத்தில் சுருக்கும் பொழுது, பிற சக்திகளை நாம் தப்பவிடுகிறோம். விடாப் பிடியாக நாம் ஒரு கேள்வியைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஆதித்தமிழர்களின் அறக்கொள்கை பொதுவுடமை என்றால், மேற்குடித் தமிழர்களின் கொள்கை என்ன? இவர்கள் எத்துணை அளவில் தமிழர்கள்? இவர்கள் தமிழர்கள் தானா? கூடவே இன்னொரு கேள்வி. தமிழக வரலாற்றை, வரலாற்று வளர்ச்சியை இந்த மேற்குடித்தமிழர்களிடமிருந்து பிரித்துக் கான முடியுமா? இவர்கள் மூலமும் நாம் இன்றைய காலத்திற்கு வந்து சேர்ந்திருக்கிறோம். இவர்களோடு பல சமயங்களில் இருந்து, ஆணவமும் ஆதிக்கமும் செய்து, இவர்களோடு கலந்து, அப்புறம் பிரிந்து இன்றைய நிலைக்கு வந்து சேர்ந்திருக்கிறோம். ஆதித்தமிழர்களிலிருந்துதான் இவர்களும் தோன்றினார்கள். அப்புறம் தம் பாரம்பரியத்தை மறந்து இறுகி மேற்குடித்தமிழரானார்கள். இந்த மேற்குடித் தமிழர்கள் தமக்குள் ஆதித்தமிழர் இருப்பதை அல்லது புதைக்

கப்பட்டிருப்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இப்படிப் புரிந்துகொண்டால் மட்டுமே அவர்களுக்கு கண் திறக்கும். வரலாற்றுப் பார்வை கிட்டும். தம் விடுதலைக்கான நெறி துவங்கும். ●

---

○ 'தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு' கௌரி பதிப்பகம், 24வது குறுக்கு வீதி, அவ்வை நகர், இலாசுப்பேட்டை, பாண்டிச்சேரி 605 008.

# 16

# பின்னுரைக்குப் பதிலாக

1. இக் கட்டுரைத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிற பெரும்பாலான கட்டுரைகளும் கடிதங்களும் கடந்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்கு இடையில் எழுதப்பட்டவை. 'பெரியார் சிந்தனைகள்' என்ற கட்டுரை மட்டும் 'பரிமாணம்' இதழில் 81-ல் வெளிவந்தது. இக் கட்டுரைகளையும் கடிதங்களையும் தொகுத்து நண்பர் அறிவனிடம் கொடுத்தேன். அனைத்துக் கட்டுரைகளினுள்ளும் புதிய காலனியம் ஒரு ஆதாரக் கோட்பாடாக இழையோடுவதை அவர் சுட்டிக்காட்டினார். நம் காலத்துச் சூழலில் புதிய காலனியம் சமுதாயத்தின் அனைத்துக் களங்களையும் கட்டமைத்து வருவதை நான் இன்னும் கூடுதலாகப் புரிந்து கொள்கிறேன். என் கட்டுரைகளிலும் கடிதங்களிலும் என் கருத்துக்களை மிகவும் வெளிப்படையாகக் கூறியிருக்கிறேன். இப்படி மனம் திறந்து பேசுவது எனக்கு இயல்பு. இப்படிப் பேசுவதன் மூலம், வரும் எதிர்வினைகளிலிருந்து நான் எப்பொழுதும் கற்றுக் கொள்கிறேன். எனது படிப்பறிவோ, அனுபவங்களோ, சிந்தனைகளோ, முழுமையானவையாகவோ போதுமானவையாகவோ இல்லை என்பதும் இதற்குக் காரணம். எனக்குள்ளும் சில இறுக்கங்கள் இருக்கக் கூடும். என்னை நானே எப்பொழுதும் ஆராய்ந்து கொள்கிறேன். இறுக்கங்கள் மீது எனக்குப் பற்று இல்லை இறுக்கங்கள் என் சுதந்திரத்தை அழிக்கும். கட்டுரைகளோடு கடிதங்களையும் வெளியிடுவதற்கும் இதுதான் காரணம். திறனாய்வுகளின் மூலம் நான் வளர்ந்திருக்கிறேன். இப்பொழுதும் நண்பர்களின் திறனாய்வுகளை எதிர்பார்க்கிறேன்.

2. இக் கட்டுரைகளைத் தொடர்ந்து படிக்கிறபோது சில கருத்துக்களை நான் போதுமான அளவில் விளக்கவில்லை என்பதை அறிகிறேன். இவற்றில் ஒன்று, சாதி அல்லது பார்ப்பனியம் பற்றிய மார்க்சிய ஆய்வு முறை என்பது. சில குறிப்புகளை இங்கு சேர்த்துக் கொள்ள விரும்புகிறேன். எந்தச் சிக்கலையும் வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் வைத்து ஆய்வது மார்க்சிய முறை. அதாவது, எந்தச் சிக்கலின் தோற்ற

மும், வளர்ச்சியும், தீர்வுகளும், வரலாறு மற்றும் பொருளியல் சூழலோடு இன்றியமையாத உறவுடையவை. தீர்வு என்பது வரலாற்றுச் சூழலிலிருந்து தோன்றுகிற பொழுதே, வரலாற்றுச் சூழலுக்கு எதிர்வினையாகவும் அமையும். எதிர்வினை என்பதை மனிதர்கள் தான் செய்கிறார்கள். இது பொதுவான புரிதல். அவ்வப்பொழுது தனி விளக்கங்களும் தேவைப்படலாம்.

3. எடுத்துக்காட்டுக்கு மண்டல் குழு மூலம் வெளிப்பட்ட சிக்கலை எடுத்துக் கொள்ளலாம். அறுபதுகளில் சோசலிசம் பற்றி பெரிதாகப் பேசப்பட்டது. எழுபதுகளின் இறுதியில் சோசலிசம் கைவிடப்படுவது தொடங்கியது. சமூகநலத் திட்டங்கள் தொடர்ந்து கைவிடப்பட்டன. பொதுத்துறைகளில் வளர்ச்சி இல்லை. தனியார் துறைகள் தொடர்ந்து பெருகின. வேலை வாய்ப்புகள் குறைந்தன. அதாவது, சமூகத்தின் உற்பத்தி, சமூகம் முழுவதிலும் பரவலாக விநியோகம் செய்யப் படவில்லை. உற்பத்தியின் விளைவுகள் பெரும்பகுதி முதலாளி களிடமும் உயர்சாதிகளிடமும் குவிந்தன. அரசுத்துறைதான் மக்களுக்கு உரிய துறை. இருக்கிற குறைந்த அளவு வேலை வாய்ப்புகளில் தங்களுக்கு உரிய இடம் வேண்டும் என்ற கோரிக்கை இப்போது பிற்பட்ட சமூகங்களிடம் நியாயமாக எழுந்தது. இந்த அடிப்படையில் மண்டல்குழு தேவையாயிற்று. தனியார் துறைகளில் வேலை வாய்ப்புகளை உரிமையோடு இவர்கள் கேட்க முடியாது. சோசலிசத் திட்டங்கள் கைவிடப் பட்ட நிலையில் மேட்டுக் குடிகளின் தொடர்ந்த வளர்ச்சி, கீழ்நிலைப்பட்ட மக்களை அதிகமாக அழுத்தவும் செய்தது. வேலை வாய்ப்புகள் மட்டுமல்லாமல், அரசு அதிகாரத்தில் தமக்கான பங்கை உறுதிப்படுத்திக் கொண்டால் மட்டுமே எதிர் காலத்தில் அரசாக்கம், தொழில் பெருக்கம் மற்றும் விநியோகம் ஆகியவற்றில் தமக்கான பங்கைப்பெற முடியும் என்று பிற்பட்ட சமூகத்தினர் சார்பாக தீவிரமான இயக்கம் தோன்றியது. மேட்டுக்குடிகள் தீவிரமான எதிர்ப்பைக் காட்டுவார்கள் என் பதும் தெரிந்ததுதான்.

இதிலிருந்து என்ன தெரிந்து கொள்கிறோம்? சமூகத்தின் உற்பத்தியில் தமக்கான பங்கைப்பெற முடியாதபொழுது, பெறு வதற்குத் தடை ஏற்படுகிற பொழுது, இதனால் பாதிக்கப்பட்ட சாதிகள் அல்லது சமூகங்கள் கிளர்ந்தெழுவார்கள். இது சாதிப் பிரச்சினையாகத் தோற்றம் கொள்ளும், அடிப்படையில் இது

வரலாற்றோடும் பொருளியலோடும் தொடர்புடைய சிக்கல். சாதி என்பது அடிப்படையில் பொருளியலோடும் தொடர்புடையது. இது வெறும் சாதிப்பிரச்சினைதான் என்று சாதிக்க முடியாது. சோசலிசத்திட்டங்கள் கைவிடப்பட்டமை, தனியார்துறைப் பெருக்கம், இவற்றுக்கு அடியில் ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கம், இவற்றிலிருந்து பிரித்து இந்தப் பிரச்சினையைப் பார்க்க முடியாது.

4. வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் வைத்துத்தான் சாதி முதலிய சிக்கல்களை ஆராய வேண்டும் என்ற மார்க்சிய நெறிக்கு மேலும் ஒரு எடுத்துக்காட்டைத் தரலாம். இந்திய வரலாற்றில் 17—18 ஆம் நூற்றாண்டுகளைப் பற்றிய தீவிரமான ஆய்வுகளில் ஈடுபட்டவர்களில் ஒருவர் தரம்பால். 18-ம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட செங்கற்பட்டு ஆவணங்களை அடிப்படையாகக் கொண்ட அவரது நூல் அண்மையில் கிரியா வெளியீடாக வந்துள்ளது. செங்கற்பட்டு ஆவணங்களில் கண்டறிந்த செய்திகள், வரலாற்றாய்வில் மிக அடிப்படையான செய்திகள். தரம்பாலின் முக்கியமான முடிவுகளில் ஒன்று- இந்தியாவின் கிராமப்புறங்களில் நடைபெற்ற உற்பத்தி, சமூகங்களில் மூன்று பிரிவுகளுக்கிடையில் 8: 5: 73 என்ற விகிதத்தில் விநியோகம் ஆயிற்று என்கிறார். மேல் சாதிகள், இடைப்பட்ட சாதிகள், தாழ்த்தப்பட்டவர் என இப்பிரிவுகளைக் குறிக்கலாம். ஆங்கிலேயரின் ஆதிக்கம் நிலைபெறத் தொடங்கிய காலத்தில் மேட்டுக்குடிகள் கிராமத்தோடு முன்பு கொண்டிருந்த உறவுகளிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டனர். அதாவது ஆடம்பரப் பொருட்கள், நகர்ப்புற வசதிகள் முதலியவை கூடுதலாகிற விகிதத்தில்-கிராமப்புறங்களில் தமக்கான பங்கை இவர்கள் கோரினார்கள். முன்னைய விகிதங்கள் இனி மாறத்தான் செய்யும். கிராமப்புற உற்பத்தியில் மேல் சாதிகள் அதிகம் எடுத்துக்கொள்கிற போது, கிராமப்புறங்களில் 'அமைதி' குலையும். இப்பொழுது சாதியச் சிக்கல் எழும். தாழ்த்தப்பட்டவர்கள். ஒடுக்கப்படுவார்கள். 8: 5: 73 என்ற விகிதத்திலுள்ளும் ஏற்றத்தாழ்வு செயல்படுகிறது. இந்த விகிதம் 80:15:5 என மாறலாம். இன்றைய நிலையில் 80 என்பது நகரங்களையும் உட்படுத்திப் பார்க்கிற பொழுது 800 ஆகவோ 8000 மாகவோ இருக்கலாம். 5, 15 ஆகி அப்புறம் நாற்றைம்பது, முந்நூறு என்பதற்கு மேல் நகராமல் இருக்கலாம். மூன்று என்பது முப்பதுக்கு மேல் நகராமல் இருக்கலாம் (இதுபற்றிய புள்ளி விவரங்கள் தெரிந்தவர் சொல்ல வேண்டும்)

ஏற்றத்தாழ்வு இல்லாமல் உலகின் எந்த சமூகத்திலும் இயக்கம் இல்லை. சோவியத்யூனியனிலும் இத்தகைய ஏற்றத் தாழ்வுகள் இருந்தன. ஏற்றத்தாழ்வுகள் குறைந்த அளவு இருக்கும் சமூகம்தான் கூடியவரை ஆரோக்கியமான சமூகம். ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன என்பதனாலேயே, ஒட்டுமொத்த மான சமூகத்தையோ, ஒரு குறிப்பிட்ட பகுதி சமூகத்தையோ நாம் காயவேண்டியதில்லை. வரலாற்றின் இயக்கத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

தரம்பால் தரும் விவரங்களிலிருந்து நாம் என்ன புரிந்து கொள்கிறோம்? பிரிட்டிசார் வருகைக்கு முன்னர் இருந்த நிலவரங் கள் பிறகு முற்றாக மாறின. இந்திய சமூகத்தில் ஆங்கிலேயன் அடித்த கொள்ளை மற்றும் ஆதிக்கத்தின் விளைவாக சமூ கத்தின் உற்பதியில் கீழ் நிலையில் உள்ளவர்கள் பங்கு பெரிதும் குறைந்தது. நகரங்களும், அரசும் மேட்டுக்குடிகளும் உற்பத் யில் அதிகம் பங்கு கோரின. கொள்ளையிலும் அதிகம் பங்கு பெற்றனர். சமூகத்தில் நெருக்கடிகள் அதிகரித்தன. இதன் ஒரு பகுதி, சாதிப்பிரச்சினை. நாம் உறுதியாகச் சொல்லமுடி யும். ஆங்கிலேயர் வருகைக்குப் பின்னர்தான் சாதிச்சிக்கல் கடுமையாக வெடித்தது. இன்று, இந்த நிலைமை மேலும் கடுமையாகியிருக்கிறது. டங்கல் திட்டம் செயல்படுவதைத் தொடர்ந்து, தாழ்த்தப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட மக்கள் மீது நெருக்கடிகள் கடுமையாகத் திணிக்கப்படும். இந்தியாவில் சாதியம் மற்றும் பார்ப்பனியம் பற்றி விரிவாக எழுதியுள்ள எஸ்.வி.ஆர். அவர்கள் தரம்பாலின் ஆய்வுகளைக் கண்டு கொள்ளாதது வியப்புக்குரியதல்ல. தரம்பாலின் ஆய்வுகள் எஸ்.வி.ஆரை மறுக்கக் கூடியவை.

5. இந்த மார்க்சிய ஆய்வு நெறியைத்தான், சாதியத்தின் தோற்றம், வளர்ச்சி முதலிய எல்லாக் கட்டங்களுக்கும் நாம் கொண்டு செல்லவேண்டும். பெரியாரியத்தில் இதற்கான ஆய்வு நெறி இல்லை. பெரியாரியம் சாதி என்பதை நிரந்தரமான ஒன்றாகப் பார்க்கிறது. பார்ப்பனர் தோற்றுவித்தது என்கிறது. பகுத்தறிவு என்ற ஆய்வு முறை தன்னை விரித்துக் கொள் ளாததன் குறையை இங்கும் பார்க்கிறோம். பெரியாரியத்தைக் காட்டிலும் கூடுதலாக சாதியத்தின் தோற்றம் பற்றி அம்பேத்கர் ஆராய்ந்தார். (பார்ப்பனியத்தின் வெற்றி என்ற நூலில் இதுபற்றி நிறைய சொல்லுகிறார்) எனினும் இங்கும் மார்க்சிய ஆய்வு முறைதான் கூடியவரை சரியானதாகத்

தோன்றுகிறது. சாதியின் தோற்றம் அகமண முறையோடு மட்டும் தொடர்புடையதல்ல. மதம்தான் சாதியைத் தோற்றுவித்தது என்பதும் உண்மையல்ல, சமூகத்தில் வேலைப்பிரிவினைகள், இவற்றுக்கிடையில் ஏற்றத்தாழ்வுகள், அப்புறம் தனி உடைமை, அரசு ஆகியவற்றின் தோற்றத்திற்கிடையில் தான் சாதியை வைத்துப் பேச முடியும். அகமணமுறை போலவே மதமும் சாதியத்தின் வளர்ச்சிக்கு தன் பங்கைச் செலுத்தியிருக்கிறது. இவற்றோடு மேலும் சில காரணிகள் சேர்ந்திருக்கக் கூடும். வேலைப்பிரிவினைகள், தனி உடைமை, அரசு ஆகியவற்றைப் பார்ப்பனர் தோற்றுவிக்கவில்லை. மதம் என்பதைக் கூட பார்ப்பனர்தான் தோற்றுவித்தனர் என்பதும் உண்மையல்ல. கி.பி. எட்டாவது நூற்றாண்டில் தான் சாதிய முறை இறுகியது. இந்து மதம் என்ற போக்கு தொடங்கியது. இந்தியாவுக்கே உரிய கிராம சமூக முறை தோன்றியது. மையத்தில் வேளாண்மை. இதற்கு உதவியாக, கைவினைஞர்கள். இவர்களுக்கு வெளியில் பஞ்சமர். இவர்களுக்கிடையில் சில வகை ஒப்பந்தங்கள் உறவுகள். அரசு நீர்ப்பாசனத்தோடு தொடர்புடையது. கிராம சமூகத்தோடு அரசுக்கு நேரடி உறவு இல்லை. கிராமப்புறங்களில் உற்பத்தியும் விநியோகமும் இந்த அடிப்படையில் நடைபெற்றன. இந்த சமூக அமைப்பு/ உற்பத்தி முறை இந்தியாவில் நெடுங்காலம் நிலவியது. இதைத் தான் ஆசிய உற்பத்தி முறை என்றார் காரல்மார்க்சு. இதை நிலவுடைமைச் சமூகம் என்றோ, அடிமைச்சமூகம் என்றோ அவர் குறிப்பிடவில்லை. ஆங்கிலேயர் வருகைக்குப் பின்னர்தான் இந்தச் சமூகமுறை மாறியது. இன்றும் இதன் எச்சங்களைக் காண்கிறோம். இந்த எச்சங்கள் நமக்கு இன்று குரூரங்களாகத் தோன்றுகின்றன. கிராமப்புறங்களில் நிலவிய இத்தகைய சமூக முறை நகரங்களைப் பொருத்தவரை வேறுபட்டிருக்க வேண்டும். (இத்தகைய விளக்கங்கள் போதுமானவையல்ல. ஆனால் இவ்வகை விளக்கங்களை ஒதுக்கிவிட்டு இந்திய வரலாறு பற்றி பேசமுடியாது) இத்தகைய உற்பத்தி முறையை/ சமூக முறையை தோற்றுவித்ததில் அரசு மற்றும் நிலக்கிழார்களின் பங்கைத் தான் முதன்மையாகக் குறிப்பிட முடியும். இதற்கு ஒத்த கருத்தியல் பார்ப்பனர்களிடம் இருந்திருக்கக்கூடும். சாணக்கியர் காலம் தொடங்கி இந்த ஆய்வை நாம் செய்ய வேண்டும். திரும்பவும் இங்கெல்லாம் மார்க்சிய ஆய்வு முறை என்று தான் பேசமுடியும். இந்தியாவில் வர்க்கங்கள் இல்லை என்ற ஒற்றை

வாசகத்தைத் திரும்பச் சொல்லி மார்க்சிய ஆய்வை மறுத்து விட முடியாது. இப்படி மறுக்கிற போக்குதான் இங்கு பலரிடம் இருக்கிறது. இவர்களைத்தான் முதலாளிய கருத்தாக்க முடையவர்கள் என்று நான் குறிப்பிடுகிறேன்.

6. வரலாற்றின் முரணியக்கம் என்பது அடிப்படையானது. எதிர் நிலைகளுக்குக்கிடையில் முரணியக்கம்தான் வரலாற்றின் இயக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணம். எதிர்நிலைகள் ஒன்றினுள் ஒன்று ஊடுருவியிருக்கின்றன. ஒன்றின் இருப்புக்கு மற்றது ஆதாரமாக இருக்கிறது. எதிர்நிலைகளுக்கிடையிலான ஐக்கியம் தற்காலிகமானது. போராட்டம் நிரந்தரமானது. இப்படிச் சொல்கிறது மார்க்சிய இயங்கியல். இதுதான் வரலாற்றின்/ சமூகத்தின் இயங்கியல்.

போராட்டங்களின் மூலம் வளர்ச்சி என்பது மார்க்சிய இயங்கியலின் ஒரு முக்கியப்பகுதி. வளர்ச்சி என்பது முதலாளியக் கருத்து என்றும் சிலர் கூறுகின்றனர். அடிமைச்சமூகத்திலிருந்து நிலமானியச் சமூகமும் அதிலிருந்து முதலாளியச் சமூகமும் அதன் பிறகு சோசலிச சமூகமும் என்ற முறையில் வளர்ந்து செல்கிறது என்பது மார்க்சியரின் பொதுவான கருத்து. வளர்ச்சி என்ற கருத்தை மறுத்து விட்டால், அப்புறம் இயக்கத்தை விளக்குவது கடினம். இயக்கம் இல்லை என்றால் சமூகம், ஒரு சுழல் வட்டத்தினுள்ளேயே சென்று கொண்டிருக்கிறது என்று தான் சொல்ல வேண்டும். இன்றைய முதலாளியம்/ ஏகாதிபத்தியம்/ புதிய காலனியச் சூழலில் வளர்ச்சி என்பது சமூகத்தின் ஒட்டு மொத்தமான அழிவை நோக்கிச் செல்கிறது என்ற அடிப்படையில்தான் வளர்ச்சி என்பது ஒரு முதலாளியக்கருத்து என்று சொல்ல முடியும். இதுகாலம் வரையில், முதலாளியத்தைப் பொருத்தவரை, ஏற்பட்டது வளர்ச்சி என்று சொல்லலாம். இயற்கைச் சூழல் முதலியவற்றை அழித்தபிறகு முதலாளியத்திற்கு வளர்ச்சி இருக்க முடியாது. அப்படியானால் சமூக இயக்கத்திற்கான மார்க்சியக் கோட்பாடும் சிக்கலுக்குள்ளாகிறது.

எதிர்நிலைகளுக்கிடையில் முரணியக்கம் தான் வரலாறு என்று சொன்னோம். இந்தியச் சமூகத்தில், நிலவியது தேக்கம் போல் தோன்றினாலும் இயக்கம் இல்லாமல் முடியாது. கிராமியச் சமூகங்களிலும் முரண்பாடுகள் அவ்வப்பொழுது வெடித்தன. தமிழகத்தில் இடங்கையினர்க்கும் வலங்கையினர்க்குமிடையிலான போராட்டங்கள் பற்றி வரலாற்று ஆசிரி

யர்கள் விரிவாக எழுதியுள்ளனர். வேலைப்பிரிவினைகளும் சாதிகளும் தொடர்ந்து விரிவடைந்தன. சாதிகளுக்கிடையில் கலப்புகளும் நேர்ந்தன. உயர்சாதிக்கெதிரான குமுறல்களும் வெடிப்புகளும் இருந்தன. இந்தியாவில் தத்துவப் போர்கள் எப்பொழுதும் கடுமையாகவே இருந்திருக்கின்றன. உலகாய்த கருத்துக்கள் எத்தனையோ வடிவங்களில் தொடர்ந்து நிலவின. உற்பத்தியில்லாமல் சமூகம் நிலவ முடியாது. ஆகவே உலகாய்த கருத்துக்கு / வாழ்க்கை முறைக்கு அழிவு இல்லை. உற்பத்திக்கான உழைப்பிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டவர்கள் சிந்தனைக்குள், வாழ்வியக்கத்தைக் காண்பார்கள். இந்த இயக்கமும் பொருள் வகை உலகிலிருந்து தன்னை முற்றாகத் துண்டித்துக்கொள்ள முடியாது. தர்க்கத்தில் உயர் நிலை சாதித்தவர்கள் பவுத்தர்கள், தர்க்கநெறியில் இடையறாத இயக்கத்தின் இறுதியில் அவர்கள் சூனியத்தைக் கண்டார்கள். பவுத்தர்களிடமிருந்து சூனியத்தை இங்கு அபகரித்துக்கொண்டவன் சங்கரன். இதற்கு அவன் பிரம்மம் என்று பெயரிட்டான். சூனியத்தைப் போலவே பிரம்மத்தோடும் வாழ்க்கை நடத்த முடியாது. அரசுகள் மாறின. போர்கள் தொடர்ந்து நடைபெற்றன.

ஐரோப்பியர் இந்தியாவுக்கு வந்தபொழுது இந்தியாவின் வேளாண்மைமுறை கண்டு வியந்தனர். இந்தியாவில் அறிவியலும் தொழில்நுட்பமும் ஓங்கி வளர்ந்திருந்ததைக் கண்டனர். மருத்துவம், கல்வி ஆகியவற்றில் இந்தியாவின் சாதனைகள் அவர்களுக்கு வியக்கத்தக்கதாகத்தான் இருந்தது. முரணியக்கம் இல்லாமல் வளர்ச்சி இல்லை என்பதை இங்கும் ஆதாரமாக்கிப் பார்க்கலாம்.

சாதி, பார்ப்பனியம் என்பன கொண்டே இந்திய சமூகத்தை விளக்க இயலாது. ஏற்றத்தாழ்வு இல்லாமல் எந்தச் சமூகமும் இதுவரை இல்லை என்ற பொது உண்மையை நாம் மறக்க முடியாது. பார்ப்பனியம் பற்றியோ சாதியம் பற்றியோ நாம் இன்று உரக்கப் பேசுகிறோம். இதற்கான நியாயம், சமூகத்தில் ஏற்றத்தாழ்வு கூடாது என்பதாகத்தான் இருக்கமுடியும். சாதிய முறையிலான ஏற்றத்தாழ்வு வெறுக்கத்தக்கது என்பதில் ஐயமில்லை. பிரெஞ்சுப்புரட்சிக்கு ஆதாரமாகவும், விளைவாகவும் உலகம் முழுவதும் பரவிய கருத்துகள் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம் என்பவை. அன்றைய நிலையில் இவை முதலாளிய கருத்தாக்கங்கள்தான். இவ்வகைக் கருத்து

கள் 19 / 20-ம் நூற்றாண்டுகளில் பாவியபொழுதுதான் இந்திய சமூகத்தில் நிலவிய சாதி வகைப்பட்ட ஏற்றத்தாழ்வுகள், இந்தியாவின் படிப்பாளிகளைப் பொருத்தவரை, வெறுக்கத் தக்கவைகளாகத் தோன்றின. ஏற்றத்தாழ்வுகளை இன்றைய நிலையில் முதலாளிய எல்லைக்குள் அடக்கமாக வைத்துக்கொள்வது நமக்கு நோக்கமாக இருக்கமுடியாது. சுதந்திரம், சமத்துவம் ஆகிய கருத்துகளை சோசலிச உள்ளடக்கத்தோடு நாம் வளர்த்தெடுக்க வேண்டும். வரலாற்றில் நமக்குள்ளும் வளர்ச்சி தேவை. பார்ப்பனியம் மற்றும் சாதியம்தான் ஒழியவேண்டும் என்பது நம் கருத்தாக இருக்கமுடியாது. தனி உடைமை, அரசு ஆகியனவும் ஒழியத்தான் வேண்டும். தனி உடைமை, அரசு ஆகியவற்றை வைத்துக் கொண்டு பார்ப்பனியம், சாதி ஆகியவற்றை ஒழித்துவிடலாம் என்பது வரலாற்று இயக்கத்திற்கு பொருந்தாத கற்பனை. சாதிய ஒழிப்புக்கான போராட்டமும் தனி உடைமை ஒழிப்புக்கான போராட்டமும் ஒரு போராட்டத்தின் இருபக்கங்கள். இப்போராட்டத்தின் வேறு பக்கங்கள் என, பெண் விடுதலைக்கான போராட்டம் போன்றவற்றைச் சொல்லலாம். மீண்டும் இப்போராட்டங்களுக்கு இடையிலே கூட முரண்கள் இருக்கலாம். அந்த முரண்கள் பகைமுரண்கள் அல்ல. இவற்றைப் பகை முரண்களாக்குவதில் சிலர்க்கு ‘ஆக்கம்’ இருக்கிறது. இவர்கள் முதலாளியக் கருத்தாளர்கள். நாம் எச்சரிக்கையாகத்தான் இருக்கவேண்டும்.

மீண்டும் சொல்லலாம். மார்க்சியவர்க்கு வரலாறு என்பது ஓர் அடிப்படையான கருத்தாக்கம்; வரலாற்றுச் சூழலிலிருந்து யாரும் வெட்டிக்கொள்ள முடியாது. இதனால்தான் வரலாற்றுப் பார்வை முக்கியம் என அழுத்திச் சொல்கிறோம். பெண்ணோ, தலித்தோ அல்லது அடித்தள மக்கட்பிரிவோ அல்லது பாட்டாளி வர்க்கமோ, வரலாற்றுச் சூழலிலிருந்து தன்னைப் பிரித்துப் பார்க்கமுடியாது. இப்படிப் பார்க்கிற முயற்சிகள் தமிழகத்தில் இன்று பரவலாக உள்ளன. இவை பற்றி விரிவாகப் பேச வேண்டும். இது பற்றிப் பேச இங்கு இடமில்லை. பெரியாரியம் அல்லது அம்பேத்கரியத்தின் வரலாற்றுப் பார்வை என்ன என்ற கேள்வியோடு இனி அடுத்த சிக்கலுக்குச் செல்லலாம்.

7. பார்ப்பனியம் பற்றி இன்று நண்பர்கள் உரக்கப் பேசுகிறார்கள். பார்ப்பனியம் என்றால் என்ன என்பது பற்றி திட்டவட்டமான வரையறை நண்பர்களிடம் இல்லை. திட்டவட்டமான வரையறைகள் வகுக்க முடியுமா என்றும் உறுதி

யாகச் சொல்லமுடியாது. சில வரையறைகளேனும் நம்மிடம் இருக்கவேண்டும். சுரண்டல் மற்றும் ஒடுக்குமுறையின் ஓர் அம்சமாகப் பார்ப்பனியத்தைக் கருதலாம். பார்ப்பனியம்தான் நம் சமூகத்தில் ஒரே வகைச் சுரண்டல் அல்லது ஒடுக்குமுறை என இங்கு விவாதிக்க முடியாது. பார்ப்பனியம் என்பதன் சுரண்டலை எவ்வளவுதான் உயர்த்திப் பேசினாலும் முதலாளியச் சுரண்டலுக்கு அது நிகராக முடியாது. அதே போல பார்ப்பனியத்தின் ஒடுக்குமுறை அரசு அதிகாரத்தின் ஒடுக்குமுறைக்கு நிகராக முடியாது. சுரண்டல் என்று சொல்கிறபோது, பார்ப்பனர் தவிர பிற மேல் சாதியினரின் சுரண்டலை விலக்கி வைத்துப் பேசவும் முடியாது. சுரண்டலில் சாதிய அம்சத்தைக் காட்டிலும் தொழில் முறை, வணிகம், நவீன அறிவியல்தொழில் நுட்பம், ஏகாதிபத்தியம் என பலவற்றை நாம் பேசவேண்டும். இவற்றிலெல்லாம் பார்ப்பனியத்தின் சிறு இழையைக் கூட நாம் காணமுடியாது.

முதலாளியம் இன்று குரூரமான முறையில் சுரண்டுகிறது. தேசத்தின் வளர்ச்சி என்பது முதலாளிகளின் நோக்கம் அல்ல. தேசம் அல்லது மக்களை அழிப்பதன் மூலம் முதலாளியம் தன்னைப் பெருக வைத்துக் கொண்டிருக்கிறது. இது முதலாளிய வீக்கம். இதை வளர்ச்சி என்று சொல்லமுடியாது. இதை லும்பன் பூர்சுவா வளர்ச்சி என்று சிலர் கூறுவதை நாம் புரிந்து கொள்ள முடியும். அற உணர்வோ, தொழிலாளிகளிடம் அன்போ அற்ற இந்த முதலாளிக்குச் சேவகம் செய்ய இன்று படிப்பாளிகள் முந்துகின்றனர். ஏற்கனவே இந்தக் கூட்டத்தினரில் முந்தி இருப்பவர் பார்ப்பனர். கணக்கியல், நிர்வாகம் ஆகிய துறைகளில் இவர்கள் 'தேர்ந்தவர்கள்' இவர்கள் இந்தப் பொறுக்கி முதலாளிக்கு கூடியவரை 'உண்மை'யாக சேவகம் செய்கிறார்கள். முதலாளியத்தின் தீங்கு தரும் 'வளர்ச்சி' இவர்களால் சற்றுக் கூடுதலாகும். இந்த இடத்தில் இன்னொரு சாதியாரை அமர்த்தினாலும் அவரும் இதையே செய்வார். இந்தப் படிப்பாளிகளிடம் சோசலிச உணர்வு இல்லை. இவர்களது தன்னல உணர்வு எவ்வாறு இவர்களை ஆட்டிக்கொண்டிருக்கிறது என்பதை வேறு இடத்தில் விளக்கலாம்.

முதலாளியப் பெருக்கத்தோடு பார்ப்பனர் கொண்டுள்ள உறவு ஒரு இன்றியமையாத உறவு அல்ல. சில மாதங்களுக்கு முன்பு என் நண்பர் ரமேசு, பார்ப்பனர் ஒவ்வொரு நாளும் சொல்லும் காயத்ரி மந்திரத்தை தமிழில் மொழிபெயர்த்துச்

சொல்லும்போது நான் வியந்துபோனேன். (காயத்ரி பற்றி பிரேமிள் ஒரு பேட்டியில் கூறியிருப்பது இப்போது நினைவுக்கு வருகிறது) ஒளியை / சூரியனை நோக்கிச் சொல்வது காயத்ரி மந்திரம். மந்திரம் சொல்பவன் ஒளியை நோக்கி, ஒளிக்குள் தன்னை வைத்துச் சொல்கிறான். பிரபஞ்சம் முழுவதும் பரவியுள்ள ஒளியின் பகுதியாக இவன் தன்னைக் காண்கிறான். இந்த ஒளி என்பது ஒளி அல்ல. உயிரியக்கம் மற்றும் பார்வை. அப்படியானால் எல்லா உயிர்களோடும், உயிரற்ற பொருள் களோடும், இவற்றின் ஊடேயும் தன்னை வைத்து இவன் காண்கிறான். காயத்ரி மந்திரம் சொல்லும்பொழுது இத்தகைய உணர்வை ஒரு பார்ப்பனன் பெறவேண்டும். இப்படிப் பெறு பவன் சோசலிச உணர்வை முழு அளவில் தனக்குள் பெறு கிறான்.

சங்கராச்சாரியர் (பெரியவர்) உத்யோகங்களுக்குச் செல் பவன் பார்ப்பனனாக இருக்க முடியாது என்றார். அவன் வேதத்தின் வித்தாக, விளைநிலமாக இருக்கவேண்டும். சங்கராச்சாரியார் சொல்லி பார்ப்பனர் சமூகம் தன்னை மாற் றிக் கொள்ளவில்லை; மாற்றிக்கொள்ளாது. சங்கராச்சாரியார் இவர்களைத்தான் 'மகிமை' படுத்திக் கொண்டிருந்தார். இப்படி அவர் 'பெரியவர்' ஆனார். விவேகானந்தர் கண்ட மாதிரி அத் வைதத்துக்குள் அவர் சோசலிசத்தைக் காணவில்லை. இவரது அத்வைதத்துக்குள் மட நிறுவனம் இயங்கியது. தனிச் சொத்து மற்றும் சாதியும் இயங்கியது பட்டுப்பூச்சிகளைக் கொன்று தயாரிக்கும் பட்டாடைகளைப் பார்ப்பனப் பெண்கள் அணியக் கூடாது என்றும்தான் சொன்னார். இவர் சொல்லை யார் கேட்டார்கள்? வணிக நாகரிகம் / ஆடம்பரம் இவரைக் காட்டிலும் சக்தி மிகுந்தது தான்.

சரி, காலம் மாறித்தான் போய்விட்டது. பாரதி சொல்கிற படி, பார்ப்பனன் மூடனாகிவிட்டான். இவன் பணம் தேடி அலைகிறான். காயத்ரி மந்திரம் சொல்லும் இவன், முதலாளி யத்தோடு அரசு அதிகாரத்தோடு ஒத்துழைக்க முடியாது / கூடாது. தன்னலம் தான் இவனை ஆக்கிரமித்திருக்கிறது. முதலாளியத்தோடு ஒத்துழைக்கும் இவனை பார்ப்பனன் அல்ல என்று சொல்வது பொருந்தும். அல்லது முதலாளியத்தோடு ஒத்துழைக்கும் இன்னொரு சாதியானை நாம் பெருமைப்படுத் தவும் முடியாது. முதலாளியத்தோடு / அரசு அதிகாரத்தோடு

ஒத்துழைக்கிறவர்களை நாம் மதிக்க முடியாது. முதலாளியமோ அரசு அதிகாரமோ இல்லாமல் நாம் இன்று வாழ முடியுமா என்று கேட்பதன் மூலம் இவற்றின் அடியில் செயல்படும் அநீதியை நாம் நியாயப்படுத்த முடியாது.

இட ஒதுக்கீட்டில் அரசு பதவிகளுக்குள் சென்றவர்களை நோக்கி நாம் தொடர்ந்து முன்வைக்கும் கோரிக்கை இதுதான். ''தயவு செய்து உங்களை நாடி வரும் ஏழைகளுக்கு, தாழ்த்தப் பட்டவர்களுக்கு உடனடியாக உதவி செய்யுங்கள். மரியாதை கொடுங்கள். இவர்களை அவமதிக்கவேண்டாம். அரசின் விதி முறைகள் அனுமதிக்கும் அளவுக்கு இவர்களுக்கு தாராளமாக உதவி செய்யுங்கள். மேலதிகாரிகளை மறுக்கத்தான் வேண்டும் என்றால் அதைத் துணிவோடு செய்யுங்கள். இட ஒதுக்கீடு என்பதன் மூலம் பதவிக்கு வந்த நீங்கள் இப்படித்தான் மக் களுக்கு உதவி செய்ய வேண்டும்'' சமூக நீதி இயக்கங்கள் இப்படிச் சொல்ல வேண்டும்.

8. அறிவியலும் தொழில்நுட்பமும் இன்று அதிக அளவில் முதலாளியத்தால் உள்வாங்கிக்கொள்ளப்படுகின்றன. கணிதம், பொறியியல், கணிணி என்றெல்லாம் நுட்பங்கள் இன்று கூடுகின் றன. இவ்வகைத் தொழில்நுட்ப நிறுவனங்களில் பார்ப்பனர் தொகை கூடுதலாகத்தான் இருக்கிறது. பிற சாதிகளும் இவர்க ளோடு போட்டிபோட்டு இன்று முன்னேறி வருகின்றனர். அரசுத் துறை நிறுவனங்களில் இட ஒதுக்கீடு இருக்கிறது. இந்த அரசுத் துறை நிறுவனங்கள் இனி எவ்வளவு காலம் இருக்கும் என்பது கேள்வி. டங்கல் திட்டம் செயல்படுகிறபோது தனியார் துறை நிறுவனங்கள் பெருகும். அந்நிய நிறுவனங்களும் வந்து சேரும். பார்ப்பனர்களுக்கு இவற்றிலெல்லாம் வேலைவாய்ப்பு கூடுத லாக இருக்கும். இதை நம்மால் தடுக்கமுடியாது. பார்ப்பனர் அல்லாத பிற சாதியினர் போட்டி போட்டு முன்னேறுவது காலத்தின் கட்டாயம்.

கூடவே நாம் இன்னொன்றை அவசியம் சிந்திக்கவேண்டும் இவ்வகைத்தொழில் நுட்பங்களும், கணிணியும், முதலாளியமும், ஏகாதிபத்தியமும் கொஞ்ச காலம் படிப்பாளிகைத் தாங்கலாம். நாளடைவில் பெரும்பாலான உழைக்கும் மக்களை அழித்து விடும். இந்த முதலாளிய ஏகாதிபத்திய டங்கல் நாகரிகம் நம்மையும் அழிக்கும். இந்த அழிப்புச் செயலில் நம்மையும்

ஈடுபடுத்திக் கொள்வதில் என்ன போட்டி வேண்டியிருக்கிறது? இந்த நிலையில் நாம் என்ன செய்யவேண்டும்?

பார்ப்பனர்க்கு மனசாட்சி இல்லை. அற உணர்வு இல்லை என்று தொடங்கி நாம் பலவற்றை விவாதிக்கலாம். இவனுக்கு நிலத்தோடு உறவில்லை. கிராமங்களோடு உறவில்லை. உழைக்கும் மக்களோடு உறவில்லை. இவனுக்கு மக்கட் பற்றில்லை. இவன் இந்த நாட்டில் பிறந்தவன் மற்றும் வளர்ந்தவன் என்று நினைத்துக் கொள்வதில்லையா? தமிழ்நாட்டுப் பார்ப்பனர், காலம் காலமாக தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்தவர்கள் தானே! இவர்களின் பெரும்பாலானோர் தாய்மொழி தமிழ் தானே? மத்திய ஆசியாவோடு இவர்கள் எவ்வாறு உறவு கொண்டார்கள்? ஆங்கிலேயரோடு இவர்கள் எவ்வாறு உறவு கொண்டார்கள்? உடல் உழைப்போடு தொடர்பு இல்லை என்பதால் இப்படி நேர்ந்ததா? இப்படியெல்லாம் நூறு கேள்விகளை, இவர்களை நோக்கியும் நம்மை நோக்கியும் கேட்டுக் கொள்ளலாம். இந்தக் கேள்விகள் அவ்வளவும் பார்ப்பனரை நோக்கி மட்டும் கேட்கப்படும் கேள்விகள் அல்ல.

நமக்குள்ளும் பலர்க்கும் தமிழ்ப்பற்று இல்லை. உழைப்பாளி மக்களோடு உறவு இல்லை. நாமும் அரசைத் தாங்குகிறோம். முதலாளியத்தைத் தாங்குகிறோம். பணப்பற்று நம்மையும் ஆக்கிரமித்து இருக்கிறது. அதிகாரவெறி நம்மையும் ஆட்கொண்டுள்ளது. அருவச் சிந்தனைக்குள் நாமும் முடங்கித்தான் இருக்கிறோம். பெரியாரின் சாதி எதிர்ப்பை நாம் செயல்படுத்தவில்லை. வர்க்கப் போராட்டத்தில் நாம் நேரடியாக ஈடுபடவில்லை. உடல் உழைப்பில் நாமும் தான் ஈடுபடவில்லை. தலித் மக்களை, பெண்களை நாமும் தான் மதிக்கவில்லை. இப்படியெல்லாம் நேர்ந்ததற்கு என்ன காரணம்? இவையெல்லாம் அடிப்படையான மனித இயல்புகள்தானா? வரலாறு இவ்வாறுதான் நம்மை முடக்கியிருக்கிறது. பார்ப்பனர்களையும் முடக்கியிருக்கிறது. முடக்கம் தீர்ந்து மனிதராவது எப்படி? இப்படியெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும்.

9. பார்ப்பனர் இன்று அரசு அதிகாரம், தொழில் நிறுவனங்கள் ஆகியவற்றில் உயர் பீடங்களில் இருக்கின்றனர். இவர்களை நாம் அவ்விடங்களிலிருந்து அகற்றவேண்டும். இது எவ்வகையில் சாத்தியம்? திட்டித்தீர்ப்பதனால் அவர்களை நாம் இறக்கிவிட முடியுமா? முடியாது என்பது தெளிவு. நம் குழந்தை

களை உயர்பீடங்களுக்கு உரிய முறையில் நாம் தயாரிக்கவேண்டும். பெற்றோர் கடமை பெரிது. உயர்கல்வி, தொழிற்பயிற்சி என்றால் இனி லட்சக்கணக்கில் கொட்டவேண்டும். சாத்தியம் தானா? எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் ஊழலை ஒப்புக்கொள்ள வேண்டும். நமக்குள் நேர்மையை அழித்துக்கொள்ளவேண்டும். இதுவும் சாத்தியம் தானா? நமக்குள்ளும் முதலாளிய வெறி தலைக்கேற வேண்டும். தேவை தானா? ஆசிரியர்கள் அக்கறையோடு நம் குழந்தைகளுக்கு கற்பிக்கவேண்டும். வகுப்பறைகளில் சிறப்பாக கற்பிக்கவேண்டும். கற்பிப்பார்களா? தனிப்பயிற்சி என்று காசு பறிக்கக்கூடாது. ஏழை மாணவர்கள் முன்னேற நம் ஊதியத்தில் ஒரு பகுதியை யேனும் ஒதுக்கவேண்டும். நாடார் சாதியினர் செய்த மாதிரி ஒவ்வொரு சாதியினரும் தம் சாதி இளைஞர்கள் முன்னேற உதவவேண்டும். மீண்டும் சாதி நம்மைப் பற்றிக்கொள்ளும். 25 ஆண்டுகள் திட்டமிட்டு முயற்சி செய்தால் பார்ப்பனரை நாம் முந்திவிடலாம். உயர் பீடங்களை நம் மக்கள் அலங்கரிப்பார்கள். அப்பொழுதும் முதலாளியம் இருக்கும். அரசு அதிகாரம் இன்னும் குரூரமாகச் செயல்படும். இப்படியெல்லாம் செய்யலாமா? வேறு வழி என்ன? பார்ப்பனரைக் காய்ந்து நாம் எந்த நெறியைத் தேர்ந்தெடுகிறோம்? முதலாளியத்தை / அரசு அதிகாரத்தை வலுப்படுத்துகிற நெறியா? நாம் சிந்திக்க வேண்டும். ஒரு முரண் இயக்கத்திற்குள்தான் நாம் மாட்டிக்கொண்டுள்ளோம்.

10. முதலாளியமும் அரசு அதிகாரமும் அப்புறம் ஏகாதிபத்தியமும் விரித்து வைத்திருக்கிற இடங்களில்தான் பார்ப்பனர்க்கு வாய்ப்பு கிடைத்திருக்கிறது. திரும்பத் திரும்ப சொல்லலாம். பார்ப்பனர் முதலாளியத்தையோ, ஏகாதிபத்தியத்தையோ தோற்றுவிக்கவில்லை, உருவாக்கவில்லை. முதலாளியம் முதலிய மூன்றும் மூலசக்திகள். பார்ப்பனியம் துணைச்சக்தி. சில சமயங்களில் கருத்தளவில் செயல்படும் துணைச்சக்தி. முதலாளியம் முதலிய மூலசக்திகளுக்குத் துணையாகச் செயல்படும் கருத்தியல்கள் பலவகை. இவற்றில் ஒன்று பார்ப்பனியம். நெடுங்காலம் அரசு அதிகாரத்தோடு பார்ப்பனியம் சார்ந்திருந்தது என்பதன் காரணமாக, அரசு அதிகாரத்தோடுதான் பார்ப்பனியம் சார்ந்திருக்க முடியும் என்று விவாதிக்க முடியாது. பார்ப்பனர் உண்மையில், பார்ப்பனர் அல்ல என்றும் பார்த்தோம். இன்றைய தொழிற் பிரிவுகளில் இவர்களும் ஒரு பிரிவினர். தமிழகத்தில் ஆரியத்திற்கும் திராவிடர்க்குமான நெடுங்காலப் போராட்டத்தில் நம் கால வரலாறு ஒரு முக்கியக்

கட்டம். பெரியாராலும் மற்றவர்களாலும் இவர்கள் கடுமையாக தூற்றப்பட்டிருக்கின்றனர். இவ்வாறு தூற்றப்படுவதற்குக் காரணங்கள் உண்டு. மேல் சாதியினர் என்ற தன் முனைப்பு ஒரு காரணம். இவர்களில் சிலர் தமிழை இகழ்ந்தது ஒரு காரணம். அரசோடு ஒட்டியிருந்ததும் ஒரு காரணம். புரோகிதர்களாக இருந்து மூடநம்பிக்கைகளை இவர்கள் பரப்பினார்கள் என்பதும் ஒரு காரணம். இதனாலெல்லாம் இவர்கள் இகழ்ந்துரைக்கப் பட்டார்கள். இதன் ஒரு முக்கியமான விளைவு, இவர்கள் தமக்குள் சிதைந்தார்கள். மனநோயால் பாதிக்கப்பட்டதைப் போன்ற தீவிர உணர்வை இவர்கள் பெற்றார்கள். உள்ளுக் குள்ளேயே புழுங்கினார்கள். தம் 'எதிரி'களை எப்படி வெற்றி கொள்வது என்று சிந்தித்தார்கள். நேர்முகமாக இவர்களால் எதிர்க்க முடியாத பொழுது மறைமுகமாக எதிர்த்தார்கள். தமிழர்களுக்குத் தீங்கு செய்தார்கள். தன்னலத்திற்கு, ஆணவத் திற்கு கூடுதலாகப் பலியானார்கள். மொழிப்பற்று, மக்கள் பற்று அற்றுப் போனார்கள். பெரியாரியத்திற்கு இது வெற்றியா, தோல்வியா என்பது பற்றியும் நாம் சிந்திக்க வேண்டும்.

அசலான சாதிகள் என்று நாம் யாரையும் சொல்லமுடியாது. சாதிகள் இன்று மக்களின் உணர்வுகளில் தங்கி இருக்கின்றன. வேலை வாய்ப்பு, இட ஒதுக்கீடு ஆகிய இடங்களில் இருக் கின்றன. குடும்ப உறவில் சாதிகள் பேணப்படுகின்றன. தேர்தல் சாதியை ஊக்குவிக்கிறது. சுரண்டல் முறை சமூகத்தில் அதிகரிப் பதனாலும் சாதி உணர்வுகள் தூண்டப்படுகின்றன. மேல் சாதிகளைப் பொருத்தவரை, சாதி என்பது ஒரு பெருமை, தம் ஆதிக்கத்தைத் தக்கவைத்துக் கொள்வதற்கு ஒரு கருவி. ஆதாயத்திற்கான ஒரு வழிமுறை. ஆகவே மேல் சாதிகளுக்கு சாதி தேவை. தாழ்த்தப்பட்ட மக்கள் சாதிப் பெயர் சொல்லி ஒடுக்கப்படுவதனால், அவர்களிடம் சாதி உணர்வு தங்கியிருக் கிறது. கலப்புத் திருமணங்கள் சாதி உணர்வைச் சற்று தனிக் கின்றன. சாதி ஒழிப்புக்கான முயற்சிகளில் மார்க்சிய இயக் கமோ, திராவிட இயக்கமோ ஈடுபடவில்லை. இதற்கெல்லாம் ஆழமான காரணங்கள் இருக்கக்கூடும். தங்கள் தலைமைக்கு அரணாக இவர்களுக்கு சாதி பயன்பட்டது.

இந்திய சமூகத்தில் மார்க்சியம் வெற்றி பெறாததற்கு கட்சித் தலைவர்கள் பார்ப்பனர்களாக இருக்கிறார்கள் என்று காரணம் கூறுகிறார்கள். மார்க்சியம் இங்கு செல்வாக்குப் பெறாததற்கு பல முக்கியமான காரணங்கள் இருக்கின்றன,

சோவியத் யூனியனிலும் மார்க்சியம் தகர்ந்ததற்கு காரணங்கள் பல உள்ளன. காரணங்கள் தேடும் ஆய்வு விரிவானது. பார்ப் பனத் தலைமை என்ற ஒற்றைக் காரணத்தில் எல்லாவற்றையும் சுருக்கிவிட முடியாது. இப்படிச் சொல்வர்களுக்கு மார்க்சிய ஆய்வில் அக்கறை இல்லை. மார்க்சியத்தில் பற்றும் இல்லை. மார்க்சியத்தின் விரிவு, இவர்களுக்குள் அகப்படவில்லை. மார்க்சியர் உட்பட எல்லாரையும் சாதி உணர்வு, பாதித்திருக் கிறது என்பது உண்மைதான். பெரியாரியரும் இதற்கு விதிவிலக்கல்ல.

1. இந்தியாவில் ஒரு மனிதனை சாதிதான் நிர்ணயிக் கிறது என்பது உண்மையில்லை. பிறப்பைக் கொண்டே கல்வி வாய்ப்பு முதலியனவும் கிடைக்கின்றன என்பது உண்மை தான். இப்படியெல்லாம் சொல்லி ஒரு மனிதனை சாதிதான் நிர்ணயிக்கிறது என்கிற வாதம், விதைக்குள்ளே ஆலமரம் அடங்கியிருக்கிறது என்ற பழைய தர்க்கம்தான். விதைக்குள் ஆலமரம் இல்லை. விதை பல கட்டங்கள் தாண்டி, ஒரு கட்டத்தை இன்னொன்று மறுத்து, ஒன்று தொடர்கிறபொழுதே அதிலிருந்து விடுபட்டு - இப்படிப் பல பாய்ச்சலுக்குப் பிறகு ஆல்மரம் உருவாகிறது. இயங்கியல் முறையில் இப்படி விளக்கம் சொல்வது மார்க்சியம். விதைக்குள் ஆலமரம் என்பது பழங்கால தர்க்கமுறை. இப்படி எல்லாவற்றையும் மூலத்திற்குள் சுருக்குவது, இறுதி உண்மை தேடும் மத வகைப்பட்ட ஆய்வு முறை. இவ்வகை ஆய்வை பகுத்தறிவாளர் உட்பட, யார் செய்தாலும் அவரை அசலான பார்ப்பனர் என்று சொல்லி விடலாம். இன்றைய வரலாற்றுச்சூழல், இதில் நிலவும் குடும்ப முறை, தொழில் முறை, கல்வி முறை, முதலாளியம், நிர்வாக முறை, அரசு இப்படிப் பல சக்திகள் இன்று மனிதனை நிர்ணயிக் கின்றன. உண்மையில் இவற்றுக்கு இடம் கொடுத்து, அப்புறம் இவற்றின் முரணியக்கத்தின் மூலம், தனக்குள் வளர்ச்சி கண்டு, இதன் காரணமாக இவற்றுக்கு எதிர்வினை புரிபவன்தான் இன்றைய சூழலில் மனிதன். இன்றைய அறிவுக்கொத்த முறையில் இப்படித்தான் விவாதிக்க முடியும். இவற்றிலிருந்து சரிந்து சாதி என ஒன்றைக் காலில் நொண்டியடிக்க முடியாது.

இன்றைய சூழலில் நாம் மனிதராக வேண்டும். மனித ஆக்கத்திற்கான சூழல் இன்று இல்லை. மனித அழிப்புக்கான சக்திகள்தான் இன்று பல திசைகளிலும் திரண்டுள்ளன. நமக்குள் மனிதனைக் கண்டு அவனை வளர்த்தெடுக்க வேண்

டும். எல்லோரையும் மனிதராக்குவதைப் போல, பார்ப்பன ரையும் மனிதராக்க வேண்டும். வெறித்தனம், மனிதனை அழிக்கும். வர்க்கப் போராட்டம் என்பது மனிதனைப் படைக்கும் ஒரு தீவிரமான முயற்சி. வர்க்கங்களைக் கடந்து செல்வதன் மூலமே வர்க்கப் போராட்டம் நிறைவடையும். வர்க்கப் போராட்டத்தின் போது நாம் வெறித்தனமாகத்தான் செயல்பட முடியும் என்பவர், வர்க்கப் போராட்டத்தை நேரிய முறையில் நடத்தவும் முடியாது. இத்தகைய வர்க்கப் போராட்டம் திசை மாறி, மீண்டும் வர்க்க சமுதாயத்தையே உருவாக்கும். இதற்கு சோவியத் யூனியன் சான்று. சாதிகளுக்கிடையிலான போராட் டமும் சாதிகளைக் கடந்து செல்வதாக இருக்க வேண்டும். சாதி வெறி, சாதியத்தைக் கடந்து செல்ல பயன்படாது. பார்ப்பன எதிர்ப்பு என்பதும் பார்ப்பனியத்தை வளர்க்கும்.

2. புரோகிதர்கள் பற்றி இதுவரை நாம் பேசவில்லை. புரோகிதர்களும், சோதிடர்களும், மந்திரவாதிகளும், சுரண் டலும் ஒடுக்கு முறையும் நிலவுகிற நம் சமூகத்தில் தொடர்ந்து தேவைப்படுகிறார்கள். முதலாளியம், அரசு அதிகாரம் ஆகிய வற்றால் மக்கள் வாழ்க்கை கடுமையான சிக்கலுக்கு உள்ளா கிறது. வறுமை, நோய் நொடிகள், மனக்குழப்பங்கள், மனநோய்கள், அச்சம், கோழைத்தனம் ஆகியவை நம் சமூகத் தில் இடையறாது உற்பத்தி ஆகின்றன. முதலாளிகளைப் பொருத்தவரை, மதவாதிகள் தேவை. கோயில், சடங்குகள், திருவிழாக்கள் தேவை. மத நம்பிக்கைகளையும், மூட நம்பிக் கைகளையும் தக்கவைப்பதன் மூலம், தன் சுரண்டலை மறைக் கிறார்கள். சமூக இயக்கம் இவர்களுக்குத் தெரியாது. வருமான மும் இழப்பும் தேசம் மற்றும் உலக அளவிலான பொருளியல் விதிகளோடு தொடர்புடையவை என்பதை இவர்கள் அறிய மாட்டார்கள். ஆகவே விதி, நல்லூழ் ஆகியவற்றில் இவர்களின் நம்பிக்கை தொடர்கின்றது. அரசாங்கத்துக்கும் மதம் தேவைப் படுகிறது. தலைவர்கள், மதத்தலைவர்களைத் தேடி ஓடு கிறார்கள். புரட்சிகர இயக்கம், தன் ஆளுகைக்குள் சமூகத்தைக் கொண்டு வரவில்லை. மக்கள் வாழ்வின் அவலங்களை அடி யோடு ஒழிப்பதற்கான சமூக மாற்றங்கள் ஏற்படவில்லை. இத்தகைய சூழலில்தான் புதிய கடவுளர்கள், புதிய மதங்கள், மந்திரவாதிகள் மதத்தலைவர்கள் முதலியவர்கள் ஆக்கம் பெறு கின்றனர். இந்தச் சூழலில்தான் தியான முறைகள் கற்பிக்கப்படு கின்றன. தேவைக்கேற்றபடி குறைந்த விலைக்கோ அதிக விலைக்கோ விற்கப்படுகின்றன. கடவுள் நம்பிக்கை கூட

தேவைப்படாத தீயான முறைகளுக்கு இன்று மரியாதை பெருத்து வருகிறது. இன்று ஆயிரக்கணக்கானவர்கள் ரஜனீஷ் ரசிகர்களாகி வருகின்றனர். இவை நம் காலத்தின் கோலங்கள். இந்தச் சூழலை மாற்ற கடவுள் இல்லை என்றும் மூடநம்பிக்கைகள் பொய் என்றும் பிரச்சாரம் செய்வது போலவே நிலச் சீர்திருத்தம் முதலிய செயற்பாடுகளும் மிக முக்கியம். கல்வி வளர்ச்சி தேவை. அக் கல்வியும் சரியான கல்வியாக இருக்க வேண்டும்.

13. இந்திய சமூகத்தில் பார்ப்பனர்களுக்கு எவ்வாறு முக்கியத்துவம் கிடைத்தது என்பது விரிவான ஆய்வுக்கு உரியது. அரசோடு இவர்கள் ஒத்துழைத்தார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. சாதி மதங்கள் முதலியவற்றை இவர்கள் தோற்றுவிக்கவில்லை என்றாலும், இவற்றை நிலைநிறுத்தும் பணியில் இவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். அரசனுக்குப் போரில் வெற்றி தேவை. இவர்கள் வேள்வி செய்தார்கள். மழை பெய்ய வேண்டும். வெள்ளப்பெருக்கு ஏற்படக்கூடாது. புயல் வீசக் கூடாது. இயற்கை உற்பாதங்கள் நிகழக்கூடாது. அரசனுடைய மரபு தொடரவேண்டும். பகைவர் ஒழியவேண்டும். இவற்றுக் கெல்லாம் பார்ப்பனர் வேள்வி செய்தார்கள். தக்க பருவத்தில் வேள்வி செய்தால் மழை பெய்யும். அரசிக்கு குழந்தை பிறக்கும். இவையெல்லாம் வேள்வியின் ஆற்றல் என பார்ப்பனர் சொல்லிக் கொள்ளலாம். மற்றவர்களும் நம்பினர். கோயில்கள் எழுப்புவதன் மூலம் நாடு நலம் பெறும். திருவிழாக்கள் தேவை. பார்ப்பனர் மட்டுமல்லாமல் மற்ற மதக் குருக்களும் இதில் சேர்ந்து கொண்டார்கள். நல்வினை, தீவினை, மோட்சம் நரகம் எனப் பேசினார்கள். கோயில்களுக்கு நிலம் தேவை என்றார்கள்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே பலவகையான சடங்குகள் தொடர்ந்தன. புத்தர், சமணர், சாக்தர் எனப் பலரும் சடங்குகள் செய்தனர். பிறப்பு முதல் இறப்பு வரை சடங்குகள் தொடர்ந்தன. மனித வாழ்க்கையைக் கடவுளோடும் பேய், பிசாசுகளோடும், மோட்சம், நரகத்தோடும் இவர்கள் எல்லோருமே தொடர்புபடுத்தினர். சடங்கு செய்தால் வேளாண்மை பெருகும். விளைச்சலில் ஒரு பகுதியைக் காணிக்கையாகத் தரவேண்டும். தருவதும் நியாயம்தான். இந்தியாவில் சாங்கியம் முதற்கொண்டு புத்தம், சமணம் முதலிய அனைத்து வகைச் சமயங்களும் கடவுளை ஏற்றுக் கொண்டன. கடவுள் பற்

றிய 'ஆய்வு'கள் தொடர்ந்தன. பழங்காலச் சூழலில் இவ்வகைப் போக்குகளை நாம் மறுக்க முடியாது. மறுப்பவர்கள் அங்கங்கே இருந்தாலும் அவர்கள் தம் கொள்கைதான் சரி என மெய்ப்பிப்பதும் கடினம். விஞ்ஞானம் வளரவில்லை.

இவ்வகைச் சூழல்தான் பார்ப்பனர்களின் ஆக்கத்திற்கும் உதவியாக இருந்தது. இதற்கு மேலும் பார்ப்பனர்கள் சாத்திரங்களை உருவாக்கினார்கள். சில சமயம் அரசுத்துறை நிர்வாகங்களிலும் அமர்ந்திருந்தார்கள். அமைச்சர்களாக இருந்தார்கள். கள், படைப் பயிற்சி தந்தார்கள். இப்படியெல்லாம் பார்ப்பனர் தூதுபோனார்கள். தத்துவம், தர்க்கம், இலக்கணம், கற்பித்தார்கள். அன்றைய சமூகத்தில் தங்களை முக்கியப்படுத்திக் கொண்டார்கள். ஏமாற்றிப் பிழைத்தார்கள், சதி செய்தார்கள் என்ற இரண்டொரு காரணங்களினால் இவர்களின் முக்கியத்துவத்தை நாம் விளக்கிவிட முடியாது. இவர்கள் வேள்வி செய்துதான் மழை பெய்தது, வெற்றி கிடைத்தது என்றால் இவர்களுக்கு நிலபுலன்களை, ஊர்களை தானமாகத் தரலாம். இவர்களை நிரந்தரமாகத் தங்கவைத்து வேதம் ஓதச் செய்யவேண்டும். வேள்விகள் செய்விக்கவேண்டும். இப்படியெல்லாம் நடைபெற்றன. ஒருவகையில் இவை அறிவோடு கூடிய செயல். இன்னொருவகையில் அறிவற்ற செயல். நீர்ப்பாசனத் திட்டங்கள், அணை கட்டுதல் முதலியவற்றில் பார்ப்பனர்கள் ஈடுபட்டிருந்தார்களா என்பது தெரியவில்லை. கட்டிடக்கலை சிற்பக்கலை ஆகியவற்றில் இவர்கள் ஈடுபட்டிருந்தார்களா தெரியவில்லை.

பார்ப்பனர்கள் தான் அறிவாளிகளாக இருந்தார்கள் என்பது உண்மையில்லை. அரசு நிர்வாகத்தில் பார்ப்பனர்கள் தான் தேர்ந்திருந்தார்கள் என்பது உண்மையில்லை. இவற்றில் உயர் சாதியைச் சேர்ந்தவரும் ஈடுபட்டிருந்தனர். இந்தியாவில் வேளாண்மைத்துறையில் பல நூறு சாதனைகள் செய்யப்பட்டன இவற்றில் பார்ப்பனர்களுக்குப் பங்கில்லை. இதைப்போலவே, மருத்துவம், தச்சு, நெசவு, அணிகலன்கள் செய்தல் முதலிய பல நூறு தொழில்களில் மக்களின் சாதனைகள் வியக்கத் தக்கவை. இவற்றிலெல்லாம் பார்ப்பனர் பங்களிப்பு இல்லை. இந்தியச் சமூகத்தைப் பார்ப்பனர்கள் தான் நிர்வாகம் செய்தனர் என்பது உண்மையில்லை. அரசர்களில் சூத்திரர்களின் தொகை அதிகம். படைத்தலைவர்கள் மற்றும் அமைச்சர்கள் என்ற முறையில் பிற சாதிகளின் பங்கு அதிகம். நம் மக்கள்

அறிவுடையவர்கள் தான். தம் வாழ்க்கைச் சூழலில் தொழில் அனுபவங்கள் மூலம் விரிவான அறிவை இவர்கள் பெற்றிருந்தார்கள். அறிவுக்கே கொள்கலம் என பார்ப்பனர்க்கு நாம் முதன்மை தரத்தேவையில்லை. மறைதர்மம் தான் இந்தியாவை ஆட்சி செய்தது என திரும்பத்திரும்ப சொல்வதன் மூலம் இக்கூற்றை உண்மையாக்கிவிட முடியாது. கொள்ளைக்காரன் அரசனாகிறான். இனி நல்லவனாக தன்னைக் காட்டிக்கொள்ளவேண்டும். பார்ப்பனர்களுக்குப் பொன்னும் நிலமும் தருகிறான். அவர்கள் இவனுக்கு முடி சூட்டுகிறார்கள். இதில் பார்ப்பன ஆதிக்கம் எங்கே வந்தது?

பார்ப்பன ஆதிக்கம் எனப்பேசி நூறு களங்களில் அதைக் கண்டு பிடித்து நிலைநாட்டுவதன் நோக்கம் என்ன? நம் மக்கள் அறிவற்றவர்கள். அரசியல் முதலிய களங்களில் அறிவற்றவர்கள் இவர்கள் என நிலைநாட்டுவது எதற்காக? பார்ப்பனர்கள் அறிவில் தேர்ந்தவர்கள். அவர்களோடு நாம் போட்டியிட முடியாது என்று நம் மக்கள் முடிவு செய்துகொள்ள வேண்டுமா? இப்படியெல்லாம் நாம் சிந்திக்கத்தான் வேண்டும். பார்ப்பனரை இகழ்ந்து அவர்களை வெற்றிக்கொள்ள முடியாது. எந்தச் சக்திகளிடம் நம் வாழ்க்கை அகப்பட்டிருந்தாலும் நாம் மீட்டுக் கொள்ளவேண்டும். பார்ப்பனர்கள் சதி செய்தார்கள் என்று சொல்லி நாம் சதி செய்யலாமா? கூடாது.

பார்ப்பனப் புரோகிதர்களுக்கு இன்று மரியாதை இல்லை. பார்ப்பனச் சாதியைப் பொறுத்தவரை, புரோகிதர்கள் தாழ்ந்த சாதி, மரியாதை குறைந்தவர்கள். அடுத்த நூற்றாண்டில் புரோகிதத்துக்கு ஆள் கிடைக்க மாட்டார்கள். சாதி முறைப் பார்ப்பனரையும் தான் கடுமையாகப் பாதித்திருக்கிறது. பெண்களைப் பார்ப்பன சாதி மிகக் கேவலமான முறையில் அடிமைப்படுத்தி வைத்திருக்கிறது. உடல் உழைப்பிலிருந்து அவர்கள் விடுபட்டதன் விளைவாக அவர்களுக்கு வாழ்வியலின் பல கூறுகள் தெரியாது. நிலத்தோடு நீர்நிலைகளோடு இயற்கையோடு அவர்களுக்கு உறவு குறைவு. அருவச் சிந்தனைக்குள் மாட்டிக்கொண்டவர்கள் ஒருவகையில் அவலமானவர்கள். இதனாலெல்லாம் இவர்களுக்கு மேன்மை சொல்ல முடியாது. நிலத்தோடும் மக்களோடும் சேர்ந்து வாழ்வதில் தான் மனித வாழ்க்கை செழுமைப்படும். சாதி உயர்வு சொல்லி, சமூகத்திலிருந்து தம்மைப் பிரிந்துக் கொள்வதனால் தமக்குள்ளே

முடக்கம் கொள்ளநேரும். விரிந்த வாழ்க்கை இவனுக்குள் வராது. இவை பற்றி எல்லாம் பார்ப்பனர்கள் சிந்திக்க வேண்டும்.

நாட்டையும் மக்களையும் அழிக்கும் அசுரசக்திகளோடு இணைந்திருப்பதன் மூலம் இவர்கள் தம்மையும்தான் அழித்துக் கொள்கிறார்கள். இதனால் மக்களின் பகைவர்கள் ஆகிறார்கள். வரலாற்றின் வழியே பார்ப்பனர்க்கு வந்து சேர்ந்திருக்கின்ற மேன்மை என இன்று சொல்லிக் கொள்வதற்கு எதுவும் இல்லை. எனக்கு ஆசிரியர்களாக இருந்தவர்களில் பலர் பார்ப்பனர். கல்வியில் அவர்கள் நிறைகுடங்கள். அவர்கள் கற்றுத் தந்த அழகுக்கு நிகர் இல்லை. அவர்கள் மாணவர் மீது கொண் டிருந்த அக்கறைக்கு ஈடு சொல்ல முடியுமா? அவர்களில் சிலர் பார்ப்பனப் பையன்களிடம் அதிகம் அன்பு கொண்டிருந்தார்கள். எங்களிடம்வெறுப்புக்கொள்ளவில்லை. என்னைப் போலவேபலர்க் கும் இந்த அனுபவங்கள் உண்டு. அந்தப் பார்ப்பன சாதி மதிக்கத் தக்கது. இன்று அந்த நிலை இல்லை. திரும்பவும் சொல்லலாம். வரலாற்றின் வழியே வந்த மேன்மை எனச் சொல்லிக்கொள் வதற்கு இன்று பார்ப்பனரிடம் எதுவும் இல்லை.

இப்படிச் சொல்லும் பொழுது பாரதியை நினைத்துக் கொள்கிறோம். உ.வே.சாமிநாதய்யர், பரிதிமாற் கலைஞர், சீனி வாச அய்யங்கார் என்று தமிழறிஞர் பலரை நினைத்துக் கொள் கிறோம். சேஷ அய்யங்கார் முதலிய வரலாற்று அறிஞர்களை நினைத்துக் கொள்கிறோம். அரசியல் களத்தில் வைத்தியநாத அய்யர் முதலியவர்களை நினைத்துக் கொள்கிறோம். மேன்மைக் குரியவர். தமிழ் மக்களின் ஆக்கத்திற்காக இவர்கள் உழைத்தார்கள். இன்று பார்ப்பனச் சாதி தமிழ் மக்களுக்குச் செய்யும் தீங்குகளை நினைக்கிற பொழுது தமிழின் ஆக்கத்தோடு கலந்திருக்கிற பாரதியார் முதலியவர்களிடத்திலும் நம் இளைஞர் களுக்குச் சந்தேகம் எழுகிறது. அவர்களின் மேன்மையை நினைத்து நெஞ்சம் நெகிழ இவர்களுக்கு இயலவில்லை. இப்படி நம்மை இன்று ஆக்குபவர் பார்ப்பனர்.

இவர்களின் நுண் அறிவுத்திறம் இன்றும் வியக்கத்தக்கது தான். ஆனால் முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் தம் நுண்ணறிவின் மூலம் சேவை செய்து நம் வெறுப்புக்குரிய வர்களாக மாறுகிறார்கள். பொருள் ஈட்டுவதில் சாதிப்பெருமை சொல்லிக் கொள்வதில் முனைந்திருப்பதன் மூலம் அருவருக்கத்

தக்கவர் ஆகிறார்கள். இப்பொழுது இன்னொன்றையும் சேர்த்துச் சொல்லலாம். பார்ப்பனர் மட்டுமா இழிவுக்குரிய வர்கள்? இவ்வகை ஈனத்தொழில் செய்யும் எவரும் நம் வெறுப்புக்குரியவர்கள்.

14. முதலாளியமும் அரசு அதிகாரமும் இவற்றோடே செயல்படும் புதிய காலனியமும் நம்மை அழிப்பதில் முனைந்து செயல்படுகின்றன. இவற்றின் ஆக்கத்திற்கென உழைக்கும் படிப்பாளிகள் மூலம், இச்சக்திகள் மக்களை அழிக்கின்றன. இந்தப் படிப்பாளிகளோடுதான் நாம் சேர்ந்திருக்கிறோம். மக்களின் விடுதலைக்காகப் பாடுபடும் படிப்பாளிகள் / அறி வாளிகள் மதிக்கத்தக்கவர்கள். தம் அறிவை தம் தன்னலத் திற்காக செயல்படுத்தும் பார்ப்பனர் வெறுக்கத்தக்கவர். திரும்பவும் சொல்லலாம். பார்ப்பனியம் பற்றிய வரையறைகள் நம் கைகளுக்கு இன்னும் வசப்படவில்லை.

இப்படித் தொகுத்துச் சொல்லலாம்: புரோகிதர்களைக் காட்டிலும் வியாபாரிகள் நம்மிடம் பல நூறுமடங்கு அதிகம் காசு பறிக்கிறார்கள். ஒட்டுமொத்தமாக பார்ப்பனர் நம்மிட மிருந்து செய்யும் சுரண்டலைக் காட்டிலும் முதலாளிகளின் சுரண்டல் பல ஆயிரம் / பத்தாயிரம் மடங்கு அதிகம். பார்ப் பனர் பரப்பிய மூடநம்பிக்கைகளைக் காட்டிலும் அரசும், அறிவியலும், வணிக சக்திகளும் பரப்பும் மூடநம்பிக்கைகள் ஆயிரம் மடங்கு அதிகம். பார்ப்பனர் நம் சமூகத்தில் செயல்பட விட்ட ஒடுக்குமுறையைக் காட்டிலும் அரசு அதிகாரம் செய்யும் ஒடுக்குமுறைகள் அளவிலடங்கா. பார்ப்பனியம் என்று உரக்கப் பேசி முதலாளியம் அரசு அதிகாரம் முதலியவற்றை மறைத்துக் கொள்ளும் அரசியலுக்கு என்ன பெயர் சொல்லலாம்? இதை வாழாவெட்டி அரசு என்றால் தவறாகிவிடுமா? கடவுள் இல்லை என்று உரக்கச் சொல்லும் பலருக்கு காசும் பதவியும் எப்படிக் கடவுளாயின? விக்கிரக வழிபாட்டை மறுக்கும் நம்மவர்க்குள் தலைவர் வழிபாடு கட்சி வழிபாடு எப்படி உறுதிப்பட்டது? புரோகிதர்களை இகழ்ந்துரைத்துவிட்டு, வாயளவில் தமிழ்ப் பூசை செய்யும் பூசகர்களை நாம் எப்படி மதிக்க முடியும்? தமிழுக்கு விழா நடத்தி பட்டிமன்றங்கள் தோறும் முழக்கி, தமிழை வைத்துப் பிழைக்கும் வணிகர்களை எப்படி இன்னும் மதிக்கிறோம்? தமிழின் பெயர் சொல்லி அதிகாரத்தையும் செல்

வத்தையும் திரட்டிவைத்திருக்கும் தமிழினத் தலைவர்கள் தமிழ் மக்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கிறார்களா இல்லையா? இப்படியெல்லாம் நமக்குள் நூறு கேள்விகள் எழுகின்றன. தமிழனை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் சக்திகளில் பார்ப் பனியமும் ஒன்று என்பதை நாம் மறுக்கவில்லை. மீண்டும் சொல்லலாம். முதலாளியம் முதலிய மூலசக்திகளின் ஆதரவில் தான் பார்ப்பனியம் நிலைபெறுகிறது. மூலசக்தியோடு துணைச்சக்தியையும் அழிக்கத்தான் வேண்டும்.

15. இந்திய நாகரிகம் என்பதை இந்து நாகரிகம்தான் என்று சிலர் சாதிக்க விரும்புகிறார்கள். இந்திய நாகரிகம் என்பதை ஒற்றைப் பரிமாணத்தில் அர்த்தப்படுத்துவது சாத்திய மில்லை. இந்திய நாகரிகம் என ஒரு தொகுதி உண்டா என்ற கேள்விக்கும் இடம் தரலாம். அதே சமயம் இந்திய நாகரிகம் என்பது இந்து / ஆரிய நாகரிகம்தான் என்பதும் உண்மை யில்லை. இந்திய நாகரிகத்தின் ஆதாரத்தளம் என ஒன்றைச் சொல்ல முடியுமானால் அது திராவிட நாகரிகம்தான்.

ஆரியர் வருவதற்கு முன்பே இங்கு மொகஞ்சதாரோ நாகரிகம் இருந்தது. இந்தியா முழுவதும் பலநூறு இனக் குழுக்கள் இருந்தன. ஆரியர் வருகைக்கு முன் இந்தியாவில் இருந்த மக்களை நாகர்கள் என்று சொல்கிறார்கள். இவர்கள் திராவிடர்கள்தான். இப்படி அம்பேத்கர் உட்பட பலர் நிறுவி யுள்ளார்கள். ஆரியர் வருகை, திராவிடர்களோடு உறவு மற்றும் போராட்டம் ஆகியவற்றைத் தொடர்ந்து ஆரிய நாகரிகத்திற்கு தீவிரமான எதிர்வினை தரும் முறையில் பவுத்தம் மற்றும் சமணம் போன்ற ஆற்றல் மிக்க சமயங்கள் எழுந்தன. ஏற்கனவே சாங்கியம் முதலிய உலகாய்தம் சார்பான போக்கு களும் தீவிரமாக இருந்தன. ஆரிய நாகரிகத்திற்கும் திராவிட நாகரிகத்திற்கும் ஏற்பட்ட கலப்பு நாகரிகம்தான் இந்திய நாகரிகம் எனச் சொல்லப்படுகிறது. இந்தக் கலப்பு, முரண் களோடு கூடிய கலப்புதான்.

ஆரிய நாகரிகம் திராவிட நாகரிகத்தை முற்றாக வெற்றி கொள்ளவில்லை. ஆரியர்களின் கடவுளர்களாகிய இந்திரன், வருணன், பிரம்மா முதலிய கடவுளர்கள் பிறகு காணாமற் போனார்கள். சிவன், திருமால் ஆகிய திராவிடக் கடவுள்கள் இந்து சமயத்தின் ஆற்றல் மிக்க கடவுளாயினர். கவுரி, கணபதி ஆகிய கடவுளர்களின் ஆக்கத்தை ஆரியத்திற்கு முற்பட்ட

தொன்மைச் சமூகத்தோடு வைத்து தேவிபிரசாத் விளக்கியுள்ளார். திராவிடர்களின் கோவில், விக்கிரகங்கள் வழிபாடு ஆகியவற்றோடு ஆரியர்களின் வேள்வி முறை நிலைபெற்றது. பலநூறு இனக்குழு மக்களின் சடங்குகள், இந்து சமயம் என்ற பெரும் தொகுப்புக்குள் சேர்ந்திருக்கின்றன. திராவிடர்களின் பெண் தெய்வக் கோட்பாடு இந்திய சமூகத்தில் இன்று வரை உறுதியாக நிலை பெற்றிருக்கிறது. பவுத்தர், சமணர் ஆகியவர்களின் ஆற்றல் மிக்க மெய்யியலின் பலகூறுகள் இந்து சமயத் தொகுப்பினுள் வலுவான அம்சங்களாக இடம் பெற்றிருக்கின்றன. ஆரியர்களின் வர்ண முறையும், திராவிடர்களின் சாதி முறையும் கலந்துவிட்டன. மத்தியப்பிரதேசத்தில் இனக்குழுக்களுக்கு இடையில் ஏற்பட்ட மோதல்கள்தான், இராமாயணம் என்று பிறகு விரிவு பெற்ற இதிகாசத்தின் மூலக்கதை என்று அமிர்தலிங்க அய்யர் ஆராய்ந்திருக்கிறார். இராமாயணக் கதை வளர்ச்சிக்கு ஆரியரல்லாத பிற மக்கள் தந்த பங்களிப்பை நாம் மறுப்பதற்கில்லை.

திராவிட நாகரிகம்தான் இந்தியாவின் மூல நாகரிகம் என்பதற்கான ஆதாரங்கள் இந்தியாவினுள்ளும், இந்தியாவிற்கு வெளியிலும் பரவலாகக் கிடைக்கின்றன. வேதங்களின் ஆக்கத்தினுள்ளும் திராவிடக் கூறுகளைக் கண்டறிந்திருக்கிறார்கள். வியாசர், வால்மீகி, விசுவாமித்திரர் போன்றவர்கள் திராவிடர்கள்தான். ஆரியர்களின் மொழியை, திருத்தமான மொழியாக - சமக்கிருதமாக உருவாக்கியதில் திராவிடர்களின் பங்கை மறுக்க முடியாது. இந்து சமயம் என்பதன் ஆக்கத்தினுள்ளும் திராவிடர்களின் பங்கை நாம் ஒதுக்கிவிட வேண்டியதில்லை. இந்தியாவின் சமூக முறையையோ, சாதி முறையையோ உருவாக்கியதில் ஆரியரின் பங்குக்கே முதன்மை தருவது பொருத்தமில்லை. தமிழ், தமிழர் என்ற சொற்கள்தான் திராவிடம் மற்றும் திராவிடர் என ஆயிற்று என்பதை இங்கு விளக்க வேண்டியதில்லை.

இந்திய / இந்து நாகரிகத்தின் எத்தனையோ அம்சங்கள் இன்று நமக்கு உடன்பாடில்லை. சாதி, சடங்குகள் என்று தொடங்கி பலவற்றை நாம் மறுக்கிறோம். ஒரு சமத்துவமான சமுதாயம் என்ற இலக்கை நமக்குள் தாங்கி, இந்த இலக்குக்கு மாறான போக்குகளை நாம் மறுக்கிறோம். இந்தப் போக்குகளை முற்றாக நமக்குள்ளிருந்து களைந்து கொள்ள முடியுமா என்பதெல்லாம் நமக்குப் பிரச்சினை. மரபிலிருந்து எவற்றைத்

தக்க வைத்துக்கொள்வது, எவற்றை மறுப்பது, எவ்வாறு மறுப்பது என்பனவெல்லாம் சிக்கல்கள். இப்போது நிறைய முரண்பாடுகளை நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது. இதன் காரணமாகத்தான் இந்து நாகரிகம் என்பதே, இந்திய நாகரிகம் எனச் சொல்லி நாம் முற்றாக மறுக்கிறோம். எதிர்நிலைக்குச் செல்கிறோம்.

தமிழ்த் தேசிய இன உணர்வு என்பது நமக்குள் தீவிரமாகச் செயல்படுகிறது. இதன் காரணமாகவும் 'இந்திய' நாகரிகத்தை மறுக்கிறோம். இந்தியா ஒரு துணைக்கண்டம் என்பதில் நாம் ஒத்த கருத்துடையவர்கள். இந்தியாவில் இருப்பவை பல தேசிய இனங்கள். தேசிய இனங்களுக்குத் தன்னுரிமை தேவை. மைய அரசு தேசிய இனங்களின் தன்னுரிமையை ஒடுக்குகிறது / மறுக்கிறது. மைய அரசு இந்து மதத்திற்கு சார்பாக இருக்கிறது. இந்து மதம்தான் இந்தியாவின் ஆதிச்சமயம் என இந்து சமயப் பற்றாளர்கள் வெறித்தனமாகப் பேசுகிறார்கள். இவர்கள் பகுத்தறிவு வாதத்திற்கு எதிராக நிற்கிறார்கள். திராவிடர் தமிழர் நாகரிகத்திற்கு எதிராக நிற்கிறார்கள். ஆரிய நாகரிகத்தின் மேன்மை சொல்லுகிறார்கள். இந்தியாவின் மொழிகள் அனைத்திற்கும் சமக்கிருதம்தான் தாய்மொழி என பொய்யுரைக்கிறார்கள். சிந்துவெளி நாகரிகம் பற்றி மறுத்து உரைக்கிறார்கள். இப்படி பல காரணங்களினால், இந்து நாகரிகத்திற்கு / இந்திய நாகரிகத்திற்கு, நமக்குள்ளிருந்து தீவிரமான எதிர்க்குரல் எழுகிறது.

ஆரியர்கள் என யாரும் இன்று இல்லை. என்னும் ஆரியம் என்ற கற்பிதம் ஆற்றலோடு இன்றும் நிலவுகிறது. ஆகவே ஆரியத்தை எதிர்க்கிறோம். திராவிடர்களுக்குள்ளும் சமயம், சடங்குகள் முதலியன இருந்தன என்பதைக் கூட நாம் மறுக்கிறோம். சமய உணர்வுகளை நமக்குள்ளிருந்து முற்றாக களைந்துவிட முடியும் எனச் சொல்கிறோம். களைந்துவிட்டோம் எனவும் சொல்கிறோம். இக்கூற்றுகள் அதே வடிவில் உண்மையில்லை. சமயத்தை நாம் ஒப்புக் கொள்ளவில்லை என்பது உண்மைதான்- ஆனால் சமய உணர்வுகளை முற்றாக நமக்குள்ளிருந்து களைந்துவிட்டோம் என்பதும் உண்மை இல்லை. சமயம் எனச் சொல்லப்படுகிற சில உணர்வுகள் சமயத்தோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளன என்பதனாலேயே அவற்றை நாம் சமய உணர்வுகள் எனக் கருதவும் வேண்டியதில்லை. பகுத்தறிவு எனவும் அறிவு வாதம் எனவும் சொல்லி,

நம்மிடமிருந்து எல்லா உணர்வுகளையும் வெளியேற்றிவிடுவது சாத்தியமில்லை. உணர்வுகளின் ஆற்றலை நெறிப்படுத்துவது அவசியம்தான். இதற்கு மாறாக உணர்வுகளை அறவே ஒடுக்குவது, மனிதனை செயலூக்கம் அற்றவனாக, இறுதியில் அறிவு அற்றவனாகவும் ஆக்கிவிடும்.

16. இப்பொழுது மீண்டும் சொல்லலாம். இந்து சமயம் என அறியப்பட்டிருக்கிற தொகுப்பினுள் திராவிடக் கூறுகள் நிறைய கலந்துள்ளன. இவற்றிலிருந்து முற்றாக நம்மை விலக்கிக் கொள்ள வேண்டியதில்லை. அறிவார்ந்த முறையில் இங்கு நமக்கு ஆய்வுகள் விரிவடைய வேண்டும். இந்து சமயம் / இந்திய நாகரிகம் என்பதை ஆரியர்க்கு / பார்ப்பனர்களுக்கே நாம் விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை.

எஸ். வி. ஆர். 'இந்து இந்தி இந்தியா' என்ற தன் நூலின் இறுதிப் பகுதியில் ஒரு புதிய இந்தியா தேவை என்று சொல்லுகிறார். இந்தியத் தேசியம் என்பதை பார்ப்பனியக் கருத்துதான் என இறுதிவரை விடாப்பிடியாக சாதித்து வந்த எஸ்.வி.ஆர்., திடீரென முற்றாகத் திரும்பி நின்று ஒரு புதிய இந்தியா தேவை என்று சொல்கிறார். இந்த இந்தியா, எஸ். வி. ஆரைப் பொருத்தவரை பார்ப்பனிய / ஆரிய இந்தியாவாக இருக்க முடியாது. இந்தியா என்பது ஒற்றை தேசியமாக என்றும் இல்லை. இன்றும் உருவாகிவிடவில்லை என்ற உண்மை நமக்குத் தெரியும்.

எஸ். வி. ஆர். விரும்புவதுபோல உண்மையான கூட்டாட்சி என்ற அடிப்படையில் இந்தியாவை ஒருங்கிணைத்திருக்க முடியும். கூட்டாட்சி என்ற கோட்பாடு சரிவர நிலைபெறுவதற்கு சோசலிசம் இல்லாமல் முடியாது. பல தேசிய இனங்களின் கலாச்சாரப் பண்புகளில் வேறுபாடுகளை யாரும் மறுக்க வேண்டியதில்லை. ஒருங்கிணைந்த இந்தியாவினுள் இவை பல வண்ணங்களாக மிளிர முடியும். சமயத்தைக் கூட முற்றாக மறுக்க வேண்டியதும் இல்லை. இவையெல்லாம் எஸ்.வி.ஆரின் கருத்துக்கள் தான். நூலின் இறுதிப் பகுதியில் இப்படித்தான் சொல்லுகிறார்.

கூட்டாட்சி என்பதற்கான சாத்தியங்கள் இன்று பெரிதும் இல்லை. சில பத்தாண்டுகளாகக் கைவிடப்பட்ட சோசலிசம், மீண்டும் இந்தியாவில் / உலகில் என்று புத்துயிர்ப்பைப் பெறும்

என்பது பற்றி இன்று சொல்ல முடியாது. தேசிய இன உரிமைக் காக இன்று கடுமையாகப் போராட்டங்கள் எழுந்துள்ளன. அடக்குமுறைகளும் பல மடங்கு அதிகரித்துள்ளன. மையத்தில் இராணுவம் வலுப்படுத்தப்படுகிறது. மாநிலங்கள் தம் உரிமை களின் இழப்பைச் சகித்துக் கொள்கின்றன. டங்கல் திட்டம் செயல்படுகிற பொழுது, சிலவகைப் போக்குகள் தீவிரப்படும். ஆகவே இன்றைய சூழலில் கூட்டாட்சிக்கோ, சோசலிசத் துக்கோ, தேசிய இனங்களின் உரிமை மதிக்கப்படுவதற்கோ வாய்ப்புகள் குறைவு என்று சொல்வதைக் காட்டிலும், இல்லை என்றே சொல்லிவிடலாம். இந்நிலையில் நூலின் தொடக்கத்தி லிருந்து எஸ். வி. ஆர். மறுத்துச் சொல்லும் ஓர் 'இந்தியா' வுக்கான வாய்ப்புகள் இல்லை.

ஆனால் திராவிட இந்தியா என ஒரு கருத்தாக்கத்தை / கற்பிதத்தை நாம் இன்றும் கைவிட வேண்டியதில்லை. இன்றும் இந்தியா முழுவதிலும் ஆற்றல் மிக்க திராவிடக் கூறுகளை நாம் கண்டு தொகுக்க முடியும். இந்தியாவின் கலாச்சாரம், மெய்யியல், கலைகள் என்பனவற்றில் தொடங்கி நாம் விரிந்து பல களங்களுக்குள் செல்ல முடியும். திராவிடர் என்ற கருத்தாக் கத்தை இன்று நாம் கைவிட வேண்டியதில்லை. தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு ஆகிய மொழிகள் வழங்கும் தென்னிந்தியாவினுள் தான் திராவிடக் கூறுகள் செயல்படும் என்று நாம் கருத வேண்டியதில்லை. ஆரியரது வருகைக்கு முற்பட்ட திராவிடத்தை நாம் இந்தியா முழுவதும் இன்றும் கண்டெடுக்க முடியும். சமக்கிருதத்தின் ஆட்சிக் காக நாம் இந்தியாவை விட்டுக் கொடுக்க வேண்டிய தில்லை.

ஆரிய மயமாக்கப்பட்டதெனச் சொல்லப்படும் இந்து மதத் திற்கு நம்மை இழக்க வேண்டியதில்லை. இன்றும் இந்து மதம் வேறு, இந்துத்துவம் வேறு என நாம் விவாதிக்க முடியும். தோழர் ஆனைமுத்து அவர்கள் தொடர்ந்து வற்புறுத்திச் சொல்லும் ஓர் உண்மையை இங்கு நாம் மனத்தில் இருத்திக் கொள்ளவேண்டும். உத்திரப்பிரதேசத்தில் வாழும் உழவர் மத்தியில் விளக்கிச் சொன்னால், இந்திதான் இந்தியாவை ஆளவேண்டும் என்பதை அவர்கள் மறுக்கிறார்கள். மைய அரசு அதிகாரிகளுக்கோ, வணிகர்களுக்கோ, அரசியல்வாதி களுக்கோ இந்தி தேவைப்படலாம். மக்களுக்கு இது தேவை இல்லை. இந்தியா முழுவதும் பரவியிருக்கும் உழவர்கள்

மற்றும் தாழ்த்தப்பட்டவர்கள் - இவர்களுக்கு ஜனநாயகம் தேவை. இவர்களால் புரிந்து கொள்ள முடியுமானால் கூட்டாட்சி தேவை. சோசலிசம் தேவை. இராமன்தான் ஒரே கடவுளாக இருக்க வேண்டும் என்பதும் இவர்கள் கருத்தாக இருக்க முடியாது. சமக்கிருதம் இந்த மக்களோடு ஒட்டாத மொழிதான். தேசிய இன விடுதலைக்காகக் குரல் கொடுக்கும் அவ்வளவு பேரும் நம்மவர்கள்தான். இப்படியெல்லாம் நாம் ஆராய்ந்து கொண்டே சென்றால், ஆரியத்தால், பார்ப்பனியத்தால் மறைக்கப்பட்டிருக்கும் இன்னொரு இந்தியாவை நாம் கண்டுபிடிக்க முடியும். இது திராவிட இந்தியாதான். இந்த இந்தியாவை அரசியல் மற்றும் பொருளியல் வடிவத்தில் கண்டுபிடித்து உருவாக்குவதற்கான சாத்தியக்கூறுகள் இன்று இல்லை. எஸ்.வி ஆரின் புதிய 'இந்தியா'வுக்கான வாய்ப்புகள் அறவே இல்லை. ஆனால் திராவிட இந்தியா என்று கருத்தளவில் நாம் பேச முடியும். இந்தியாவை பார்ப்பனியத்துக்காக நாம் விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை. இந்தியாவை வெற்றி கொள்ளும் எண்ணம் நமக்கில்லை. நாம் கண்டுபிடிக்கும் திராவிட இந்தியா கூட்டாட்சியை ஒப்புக் கொள்ளும். சோசலிசத்தை ஒப்புக் கொள்ளும். தேசிய இனங்களின் கலாச்சாரம் முதலியவைகளை ஒப்புக்கொள்ளும். பெரும்பாலும் எஸ்.வி. ஆர். தன் நூலில் விவாதிக்காவிட்டாலும், அவருக்குள் ஆழமாக இந்த 'திராவிட இந்தியா' இருக்கக்கூடும். ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்க வல்ல இந்தியாவை அவர் நம் முன் நிறுத்துகிறார். தேசிய இனங்களுக்கிடையில் பகைமையைத் தோற்றுவித்து, தேசங்களை உடைக்கிற காரியத்தை எழுபதுகளுக்குப்பின் ஏகாதிபத்தியம் தொடங்கியது என்பதும் எஸ்.வி. ஆர். கருத்தாக இருக்க முடியும்.

இதன் காரணமாக ஒரு 'பெரிய' இந்தியாதான், அதாவது இராணுவ பலமும், பொருளாதார பலமும் மிகுந்த ஓர் இந்தியா தான், ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்கும் என நாம் நம்ப வேண்டியதில்லை. இராணுவ பலம் மிக்க 'பெரிய' இந்தியா நம்மை வாழவிடாது. இராணுவ பலம் மிக்க பெரிய இந்தியா ஏகாதிபத்தியத்தை உள்வாங்கிக் கொள்ளும். இந்த ஏகாதிபத்தியமும் வேண்டாம். இராணுவ பலம் நமக்கு வேண்டாம். பெரிய இந்தியாவும் நமக்கு வேண்டாம். ஏகாதிபத்தியத்தை எதிர்க்க இராணுவ பலம்தான் தேவை என்பதும் உண்மையில்லை. மிகச் சிறிய நாடும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்க முடியும். கியூபா, வியட்நாம் என்று சான்றுகள் தேட

வேண்டியதில்லை. ஏகாதிபத்தியம் நமக்குள் நுழைவதற்கு ஆயிரம் வழிகள் இன்று உள்ளன. ஏகாதிபத்திய நுழைவுக்கு நமக்குள் இன்று இடம் தரக்கூடாது. புதிய காலனியச் சூழலை நாம் புரிந்து கொண்டால் மட்டுமே ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பது பற்றிப் பேச முடியும்.

# பிற்சேர்க்கை :
## சில கடிதங்கள்

### சில குறிப்புகள்

இங்கே சில கடிதங்களைத் தந்திருக்கிறேன். தனிப்பட்ட முறையிலும் எழுதிய கடிதங்களில் நம் சமூகச் சிக்கல்களை விவாதித்திருக்கிறேன். இதன் காரணமாகத்தான் இந்தக் கடிதங்களை இங்கு தொகுத்துக் கொள்கிறேன்.

1. கோவையில் 93 மார்ச் இரண்டாவது வாரத்தில் நடைபெற்ற சில கூட்டங்களில் தோழர்கள் ஓவியா, பிரபஞ்சன், சுப. வீரபாண்டியன் ஆகியவர்களோடு நானும் கலந்துகொண்டேன். அவர்களோடு விவாதிப்பதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. என் கருத்துகளை எந்த அளவுக்கு அவர்கள் மதித்து விவாதிப்பார்கள் என்றும் தெரியவில்லை. ஆகவே அவர்களைத் தூண்டும் முறையில் கடிதங்கள் எழுதினேன். ஓவியா அவர்களிடமிருந்து மட்டும் பதில் வந்தது. அடுத்த முறை கோவைக்கு வரும்பொழுது உங்களைச் சந்திப்பேன் என்று அவர் பதில் எழுதினார். சுப.வீ., பிரபஞ்சன் ஆகியவர்களுக்கு நான் எழுதிய கடிதங்கள், அவர்களைச் சேர்ந்தனவா என்பது பற்றி எனக்குத் தகவல் இல்லை. இவர்கள் தமிழ் மக்களின் கருத்துக்களை உருவாக்கும் தீவிர சிந்தனையாளர்களாக, செயல்வீரர்களாக இருக்கிறார்கள். இவர்கள் தம் சிந்தனைகளை இன்னும் விரிந்த தளங்களில்செலுத்தவேண்டும். பெரியாரியத்தை பெரும்பாலும் இவர்கள் சார்ந்து நிற்கிறவர்கள். தமிழ் மக்களின் விடுதலையை உயிர் மூச்சாக இவர்கள் கொண்டிருக்கிறார்கள். இக் காரணங்களுக்காக இவர்களின் பார்வை இன்னும் ஆற்றல் மிக்கதாக உருவாக வேண்டும். இவர்கள் இடம் கொடுப்பார்களா என்பது பற்றி எனக்குத் தெரியாது. இக் கடிதங்கள் வெளியிடப்படுகிற பொழுது, அவர்களின் கவனம் மீண்டும் இக் கடிதங்களை நோக்கித் திரும்பலாம். இந்த நோக்கத்தோடுதான் இக் கடிதங்களை இங்கு வெளியிடுகிறேன். தத்துவம், வரலாறு ஆகியவற்றை நாம் காயப்படுத்தக் கூடாது என்பதில்தான் என் அக்கறை.

2. நண்பர் அக்கினி புத்திரன் அவர்களுக்கு நான் எழுதிய கடிதங்களுக்கான பின்புலம் முக்கியமானது. 1970 முதற் கொண்டு அவரும் நானும் 'நகமும் சதையும்' போல இணைந் திருந்தோம். 90-ன் தொடக்கத்தில் திடீரென அக்கினி எனக்குள் பார்ப்பனியத்தைக் கண்டுபிடித்து என்னைக் கடுமை யாகத் தொடர்ந்து மேடையில் தாக்கிப் பேசினார். இந்தக் கட்டுரைத் தொகுப்பில் உள்ள 'ஒரு வக்கிரமான போரில்' என்ற கட்டுரை ஈரோட்டில் நண்பர் குறிஞ்சி அவர்கள் ஏற்பாடு செய்த கருத்தரங்கில் வாசித்து முடித்த போது, இந்தக் கட்டுரைக்குள் பார்ப்பனியம் 'கண்டு' அக்கினி என்னை முதல் முறை தாக் கினார். 'இதுவரை ஞானி மார்க்சியத்தைத் தாக்கினார். இப் பொழுது திராவிட இயக்கத்தைத் தாக்குகிறார். ஞானிக்கே தெரியாமல் அவருக்குள் பார்ப்பனியம் வேரோடியிருக்கிறது' என்றார். எனக்குள் அவர் பார்ப்பனியத்தைக் 'கண்டுபிடித்து' சாடினார். நான் திகைத்தேன். அதன்பிறகு பலமுறை அவரிடம் விவாதித்தேன். அவரிடம் பதில் இல்லை. மேடை கண்ட பொழுது, ஆவேசம் ஏறியவரைப் போல அவரிடமிருந்து தாக்குதல்கள் என்னை நோக்கிக் கிளம்பின. இவற்றை விமர்சனங்கள் என்றார். நான் அவதூறுகள் என்றேன்.

நேரில் சண்டையிடுவதற்குப் பதிலாக அவருக்கு கடிதங்கள் எழுதினேன். ஒரு கடிதத்திற்குக் கூட அவரிடமிருந்து பதில் இல்லை. முதல் கடிதத்தை குணாவுக்கு அனுப்பியிருக்கிறேன். அவர் பதில் தருவார் என்றார். குணா எனக்கு எப்படிப் பதில் தருவார்? அக்கினியிடம் பதில் இல்லாத நிலையில் இக் கடிதங் களை இப்பொழுது வெளியிடுகிறேன். எழுத்து வடிவில் அக்கினி விரிவாக எழுத வேண்டும் என்பதுகூட, இக் கடிதங் களை வெளியிடுவதற்கான என் நோக்கம். அக்கினியிடம் எனக்குப் பகை இல்லை. இக் கடிதங்களில் அக்கினியின் குடும்பச் சூழல் உட்பட பலவற்றை விமர்சனம் செய்திருக்கிறேன், என்னையும் நான் விலக்கிக் கொள்ளவில்லை. நண்பர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

அக்கினியின் கடிதங்களில் முன்னும் பின்னுமாக பல வாச கங்களை நீக்கியிருக்கிறேன். இடையிலும் இரண்டொரு சொற்களில் திருத்தம் செய்திருக்கிறேன்.

1. மதிப்புக்கும் அன்புக்கும் உரிய தோழர் ஓவியா அவர்கட்கு

16-3-93

வணக்கம்.

இப்பொழுது, உங்களுக்கு என் கடிதம் சற்று வியப்பளிக்கக் கூடும். அவசியம் கருதி இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். ஒரு முக்கியமான இயக்கத்தின் மையத்திலிருந்து செயல்படுகிற உங்களோடு சிலவற்றை முன்பே விவாதித்திருக்க வேண்டும். இத்தகைய வாய்ப்பு முன்பு ஏற்படவில்லை. இந்த வாய்ப்பை இப்பொழுதாவது ஏற்படுத்திக்கொள்ளும் நோக்கில் இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

எங்கிருந்து தொடங்குவது என்று சிந்திக்கிறபொழுது, நீங்கள் எப்பொழுதும் அதிகம் விவாதிக்கும் குடும்பம், கற்பு என்பதிலிருந்து தொடங்கலாம் எனக் கருதுகிறேன். கற்பு பற்றியும் குடும்பம் பற்றியும் அநேகமாக உங்களோடு பெரிதும் நான் முரண்படவில்லை. ஆனால், இந்தப் பிரச்சினையை நீங்கள் எந்தத் தளத்தில் வைத்துப் பேசுகிறீர்களோ, அதற்கு அதிக அளவில் வித்தியாசப்படுகிற இன்னொரு தளத்திலிருந்து தான் இந்தப் பிரச்சினையைப் பார்க்கவேண்டும் என்பது என் கருத்து. கற்பு வேண்டாமென்று இன்று தமிழகச் சூழலில் சொல்கிறவர்களில் ஒருபகுதியினர், அமைப்பியலாளர்கள். இவர்களில் இரண்டொருவர் பின்-அமைப்பினர். இவர்களைப் பொருத்தமட்டில் கற்பு இல்லை. நன்மை தீமை இல்லை. தரவேறுபாட்டுக்கு அர்த்தம் இல்லை. அறம் இல்லை. பண்பாடு இல்லை. பொய் சொல்லலாம். உண்மை என்பது புனைவு. இப்படித் தொடங்கி வெகு தொலைவுக்கு இவர்கள் செல்கிறார்கள். இவர்களின் நிலைப்பாடு உங்களுக்கு உடன்பாடா என்று எனக்குத் தெரியவில்லை. ஓர் இயக்கத்தில் இருக்கிற ஒருவர் இத்தகைய நிலைப்பாடு எடுக்கிறபொழுது அவர் இயங்குவதற்கான பொருளியல் என்ற ஆதாரத்தளம் இல்லை என்று ஆகிவிடும். இந்நிலையில் வெறுமனே இந்தக் கருத்துநிலைகளை உடைத்துக் கொண்டிருக்கலாம். இப்படிப் பேச்சு அளவில் உடைத்துக் கொண்டிருக்கிற ஒருவர் தன்னை 'அனார்சிஸ்ட்' என்று சொல்லிக் கொள்ளலாம்.

பெரியாரியத்தை ஆதாரத்தளமாகக் கொண்டிருக்கிற நீங்கள், அவர் கருதிய பொருளியல் ஆதாரத்தளத்திலிருந்து விலகிக் கொள்ள இயலுமா? இறுதியில் பெரியார், தன்னை ஒரு 'அனார்க்சிஸ்ட்' என்று சொல்லிக் கொள்ளத்தான் விரும்புவார். ஆனால்

இடையிலுள்ள பொருளியல் தளத்தை எவ்வாறு கடக்கமுடியும்? கற்பு வேண்டாம் என்று சொல்கிறபொழுதே இதற்கிணையான கருத்துநிலைகள் எனத்தெரிகிற நேர்மை, உண்மை, நன்மை, முதலியவற்றையும் மறுத்துப்பேச வேண்டும். இவை வெறும் கருத்துநிலைகள்தான் என்றால், ஒரு விவாதத்தில் இவற்றை ஒன்றை அடுத்து இன்னொன்றாக மறுத்துக்கொண்டிருக்கலாம். ஆனால், இந்தக் கருத்துநிலைகள் நம் மனிதர்க்கான வாழ் நிலைகளோடு உறவு கொண்டிருக்கின்றன.

வாழ்நிலைகளை மாற்றுவது என்ற பிரச்சினையோடு இவை உறவு கொண்டிருக்கின்றன. இந்த வாழ்நிலைகளில் குடும்பம், தொழில், நிறுவனம், கல்வி, முதலிய பலவும் தொடர்புகொண் டவை. இவற்றிலுள்ள முரண்கள் இவற்றை எவ்வாறு எதிர்கொள்வது என்பதுதான் உண்மையில் நம் கவனத்திற் குரிய / செயல்பாட்டுக்குரிய சிக்கல்.

இதை இப்படி விவாதிக்கலாம். குடும்பம் என்று சொல்லும் பொழுது இதன் கட்டமைப்போடு தனியுடைமை, அரசு, தொழில்முறை இவற்றோடு மதம், விதி என்பனவும் சேர்ந்துவிடு கின்றன. குடும்பத்தை உடைப்பது என்று பேசும் அதே கணத்தில், தனி உடைமையை ஒழிப்பது, அரசைத் தகர்ப்பது, தொழில்முறையாக மாற்றுவது, மதம், சாதி, ஆகியவற்றை ஒழிப்பது என்று பேசவேண்டும். இப்படிப் பேசுவது ஒரு விவாத நிலை. செயல்முறை என்று வருகிறபொழுது, இதில் எத்தனையோ கட்டங்கள். விவாதத்தின் போது, இறுதிக்கட்டத் தில் கவனம் குவித்துப் பேசிக்கொண்டிருக்கலாம். இப்படிப் பேசுவதுதான், பகுத்தறிவாளர்களும் மார்க்சியரும் இவர்களைப் போலவே, காந்தியவாதிகளும் மேற்கொள்ளும் முறை. இந்த விவாதமுறை, ஆழ்ந்துபார்த்தால் இதற்குள் அறிவின் ஆதிக்கம், ஆணாதிக்கம் என்பது தெரியும். மத்தியதர வர்க்கம், படிப்பாளி களுக்கு, நகரவாசிகளுக்கு இந்த விவாதமுறை பெரிதும் இன் பமாக இருக்கும்.

உண்மையில், இந்த விவாதமுறையைச் சரியாகத் தொடர் வதென்றால் நம் படிப்பின் வழியே நம் மத்தியதர வர்க்கச் சார்பின் வழியே, வாழ்க்கை வசதிகளைப் பெறுகிற நம் மனப் பாங்கின் வழியே, நாம் முதலாளியத்தோடும், அரசு அதிகாரத் தோடும், இன்னும் ஆழ்ந்துபார்த்தால், ஏகாதிபத்தியத்தோடும் கைகோத்துக் கொண்டிருப்பது தெரியவரும். விடுதலை பற்றிப்

பேசுகிற நாம், நம்மை மீட்டுக்கொள்ள இயலாத அளவுக்கு, நம்மைச் சிறைப்படுத்தியிருக்கும் அசுரசக்திகளின் முன் நாம் நின்றுகொண்டிருப்பதைத் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கும். இப்படி நாம் விவாதத்தை எடுத்துச் செல்கிறோமா? ஒரு பெரியாரியவாதி அல்லது மார்க்சியவாதி என்பவர், இப்படித்தான் விவாதத்தை எடுத்துச் செல்லவேண்டும். குடும்பம், கற்பு என்று பேசுகிறபோது, சாதி, மதம் என்ற அளவில் விவாதத்தைச் சுருக்கி, அப்புறம் பார்ப்பனியம் என்று உரக்கச் சொல்லி விவாதத்தை முடித்துக்கொள்ள இயலாது. பெரியார் வழியில் வந்தவராகத் தம்மைக் கருதிக்கொள்ளும் பலர், இப்படி இடைவழியில் விவாதத்தை முடித்துக்கொள்வது பெரியாருக்கு இழிவு செய்வதாகும். தொடர்ந்து செல்ல இயலாதானால், பெரியாருக்குள்ளிருந்தே மார்க்சியம் பற்றி ஆழ்ந்த அக்கறையோடு பேசவேண்டும். நாம் தொடர்ந்து சுட்டிக்காட்டுகிறபடி தொழிற்சங்கவாதம், பொருளாதாரவாதம், அரசியல் அதிகாரவாதம் என்பனவற்றுள் தம்மை முடக்கிக்கொண்டவர் மார்க்சியர் அல்லர். இத்தகைய முடக்கத்தின் வழியே தீவிரமாகச் செயல்படுவது முதலாளியம்தான். சோவியத் யூனியனை நாசம் செய்தது இந்த முதலாளியம்தான். முதலாளியத்தைத் தனக்குள் உள்வாங்கிக் கொண்ட மார்க்சியம் பற்றித்தான் இங்கும் பலர் பேசுகிறார்கள். இவர்கள்தான் மார்க்சியத்தை அறிபவர்கள். இவர்கள் பார்வைக்குள் சாதி தெரியவில்லை என்பது மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றல் இவர்களுக்குத் தெரியவில்லை என்றுதான் சொல்லவேண்டும். தமிழ்நாட்டில் இப்படி சில மார்க்சியர், திடீரென மார்க்சியத்தைப் புறந்தள்ளி, தமக்குள் 'பெரியாரியத்தை' கண்டுபிடித்திருக்கிறார்கள். தோழர் வீரமணி அவர்களின் பெரியாரியம் 'முதலாளியத்தை முற்றாக உள்வாங்கிக் கொண்ட பெரியாரியம்' இந்தப் பெரியாரியம் தமிழ் மக்களின் வரலாற்றின் வளர்ச்சிக்கு உதவாது. சாதி, மதம், பார்ப்பனியம் என்று இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்கு இவர்கள் பேசிக்கொண்டே, இவர்கள் தம்மையும், மக்களை அடிமைப்படுத்தும் முதலாளியத்தையும் வளர்த்துக் கொண்டிருப்பார்கள். இந்த விவாதத்தை உங்கள் எதிர்வினை நோக்கி இத்துடன் நிறுத்திக்கொண்டு இன்னொரு பிரச்சினைக்குச் செல்கிறேன்.

தமிழினப் பெண்களின் சில பிரச்சினைகளை முன்னிறுத்தி நீங்கள் இப்பக்கம் அமைத்திருக்கிறீர்கள். இதில் ஒரு பகுதி பெண்களுக்கான வேலை வாய்ப்பு. குறிப்பாக, பெரிய வாகனங்

களை பெண்கள் ஓட்டுவது பற்றிய பிரச்சினை. உண்மையில் இந்தப்பிரச்சினை நோக்கி பெண்களின் கவனத்தைக் குவிக்கிற பொழுது, அவர்களுக்குள் அளப்பரிய சக்தி விடுபடும் எனக் கருதுகிறேன். மத்தியதா வர்க்கத்துப் பெண்களுக்கு வேலை வாய்ப்பு என்பது, திரும்பத் திரும்ப, முதலாளியம் / அரசு அதிகாரம் என்ற கட்டமைப்புக்குள் அவர்களைத் தள்ளி, அவர் களின் உணர்வுகளை நுட்பமாக்கி, அவர்களின் அழகுகளைப் பெருக்கி அவர்களின் விடுதலையை நெடுந்தொலைவுக்கு அப்பால் தள்ளிவிடும் போக்காகும். இதற்கு மாறாக, சமூகப் படி நிலைகளில் கீழ் இருக்கிற, உடல் உழைப்பைக் கொண்டு வாழ்கிற பெண்களின் பெரும்பகுதியான கூட்டத்தை நிமிர வைக்கின்ற ஒரு செயல்முறையாக, பெரிய வாகனங்களைப் பெண்ணும் இயக்கமுடியும் என்ற போக்கு ஏற்படுத்தும். உழைக்கிற பெண்களை சமூகத்தின் முன்நிலைக்கு இது கொண்டுவரும். தொடக்கத்தில் ஒரு குறியீட்டுச் செயல்முறை போல இது தோன்றினாலும், நாளடைவில் பெண்களின் ஆக்கத்திறனை ஒருமுகப்படுத்துவதற்கு இந்த இயக்கச் செயல் பாடு பெரிதும் பயன்படும். அலுவலக வேலை கொடு என்ற கோரிக்கையில் தொடங்கி, அரசு அதிகாரத்தோடு அல்லது முதலாளியத்தோடு ஒத்துச் செல்கிற மனப்பாங்கிலிருந்து பெண் களை விலக்கி, சமூக விடுதலைக்கான உணர்வில், அவர்களைப் பதப்படுத்தும் நோக்கில் இயக்கச் செயல்முறை அமைவதைப் பெரிதும் வரவேற்பேன்.

இடையில் விடுபட்ட ஒரு பிரச்சினை, கற்பு வேண்டாம் என்று ஆண்கள் மத்தியில் பேசுவதன் மூலம் ஆடவர் பலரின் உள்ளுணர்வில் பதிந்திருக்கிற - பெண்ணை தீனி எனக் கருதும் போக்கை, நாம் தட்டி எழுப்பிவிடக்கூடாது. கற்பு வேண்டாம் என்று சொல்வது ஆணுக்குத் தருகிற உரிமம் அல்ல என்று அழுத்திச் சொல்லவேண்டும். இது தவிர எப்பொழுதும் கற்பை எதிர்பார்த்து பெண்ணைத் துன்புறுத்துகிற கணவன்மார் பற்றி அதிகம் சொல்லவேண்டும். கற்பு தவறிவிட்டேன் என்று மனத்தில் குமைந்து கொண்டிருக்கிற பெண்களுக்கு ஆறுதல் சொல்லி அவர்களைத் திடப்படுத்த வேண்டும். ஏற்கனவே பல குடும்பங் களில் காலங்காலமாகத் தொடர்ந்து ஏற்பட்டிருக்கிற உடைசல் கள் பற்றி கவனமாகச் சொல்லி, இவற்றையெல்லாம் நீங்கள் ஏன் புரிந்துகொள்ளவில்லை என்று கேட்கவேண்டும். இன்னும் இப்படித் தொடர்கிற பிரச்சினைகள் பல இருக்கின்றன. உதாரணமாக வரதட்சணை என்ற சிக்கல் முதலாளியத்தோடு

வைத்துப் பேசப்படவேண்டும். முதலாளியத்திற்கும் வரதட்சணைக்கும் இடையில் உள்ள உறவு பற்றி நாம் பேசவேண்டும். குடும்பத்தை உடைக்கிறேன் என்று பேசுகிறபொழுது, உடைபடுகிற அந்தக் குடும்பத்தில் இன்றும் மாட்டிக் கொண்டிருக்கிற குழந்தையின் மனநிலை பற்றிப் பேசவேண்டும். (ருமேனியா அனுபவம் கொடுமையானது. இது உங்களுக்கு நினைவிருக்குமென நம்புகிறேன்.) இப்பொழுதைக்கு முடித்துக் கொள்கிறேன். இயலுமானால் மேலும் கேள்விகளோடு எழுதுங்கள்.

தங்கள்,

கி. ப.

2. மதிப்புக்குரிய தோழர் சுப. வீரபாண்டியன் அவர்களுக்கு

வணக்கம். 16 3-93

கோவையில் இரண்டு நாட்கள், சில மணிநேரம் உங்களோடு இருந்தது பற்றி மிக்க மகிழ்ச்சி. உரையாடிக் கொள்ள நமக்கு வாய்ப்புக் கிட்டவில்லை. சிலவற்றை நமக்குள் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பி இந்த மடல் எழுதுகிறேன். குறிப்பாக இரண்டொரு செய்திகள் / உண்மைகள் பற்றி மட்டும் இந்த மடல். 'இனி' என்ன செய்யவேண்டும் என்பது பற்றி என் கருத்தைக் கேட்டிருந்தீர்கள். அதைத் தெரிவிப்பதற்காகவும் தான் இந்த மடல்.

மாச்சம்பாளையம் கூட்டத்தில் முதலாளியம், அரசு அதிகாரம் இவற்றுக்குள் ஆழமாக ஊடுருவியிருக்கிற ஏகாதிபத்தியம்- இவற்றால் நமது பொருளியலும், அரசியலும்- அதே சமயம் நம் கல்வி, மருத்துவம், வேளாண்மை இறுதியில் நம் வாழ்க்கை முதலியவை எவ்வளவு கடுமையான முரண்களுக்கிடையில் சிக்கித் தவிக்கிறோம் என்பது பற்றி நான் பேசினேன். நிதானமாக, எல்லா அம்சங்களையும் தொட்டுப் பேசும் வாய்ப்பு இல்லை. 'இலக்கியப் பாசறை'யில் வந்த என் தொடர் கட்டுரையை அக்கறையோடு படித்தவர்கள், சற்று நிதானத்தோடும் வாழ்வியல் அனுபவத்தோடும் சிந்திப்பார்கள் என்றால், நான் முன்வைக்கிற சிக்கல்களின் மையத்தைப் பற்றிக் கொள்ள முடியும். இந்தச் சிக்கல் பற்றி நான் இந்த மடலில் உங்களுக்கு விரிவாக எழுதவேண்டியதில்லை.

எனது உரைக்குப் பிறகு நீங்கள் மறுமொழி தந்தீர்கள். 'இனி' இதழில் பொருளாதாரம் பற்றி, குறிப்பாக தமிழகப் பொருளாதாரம் பற்றி எழுதவேண்டுமென்பது என் விருப்பமென தெரிவித்தீர்கள். நான் கூறியது, ஒரு மாபெரும் தொகுப்பினுள், இன்று நமக்குள்ளும் நம்மைச் சூழவும் உள்ள சிக்கல்கள் எவ்வாறு இணைந்திருக்கின்றன என்ற பிரச்சினை. புறத்திலிருந்து ஒவ்வொன்றாக ஆய்ந்துகொண்டே சென்றால் இறுதியில் சமூக மனிதர்களாக உயர்கிற நமக்குள் எவ்வளவு நெருக்கடிகள் நம் ஆளுமையைச் சிதைத்திருக்கின்றன என்பதை நோக்கித்தான் என் கவனம் குவிந்திருக்கிறது. பொருளியல் என்று சொல்லுகிறபொழுது கூட, முதலாளியம், அரசு அதிகாரம், ஏகாதிபத்தியம் என்பதன் முழு வீச்சையும்தான் நான் குறிப்பிடுகிறேன். இந்த மாபெரும் தொகுப்பிலிருந்து தமிழ் எப்படி வாழும்? வளரும்? என்ற சிக்கலைத் தனியே பிரித்துப் பார்க்கிறபொழுது, முதலாளியம் என்ற பொருளியல் அமைப்பை ஏற்றுக் கொள்கிற ஒருவர் தமிழின் வளர்ச்சிக்கு எதிராகத்தான் இருக்கமுடியும். இதே போலத்தான் அரசு அதிகாரத்தினுள் தம்மை வைத்துக் கொள்கிற ஒருவர் தமிழின் ஆக்கத்திற்கு உதவ முடியாது. இதே போல ஏகாதிபத்தியத்தின் உற்பத்தி முறை, நவீன அறிவியல் தொழில்நுட்பம் முதலியவற்றை ஏற்கிறவரும் தமிழை அழிக்கத்தான் செய்வர். கடந்த ஒரு நூற்றாண்டுக்கு மேலாக மெல்ல மெல்ல கல்வி, மருத்துவம், ஆங்கிலம், அறிவியல், மக்களாட்சி, அரசு நிர்வாகம், தொழில் வளர்ச்சி, வாழ்க்கை வசதிகள், இறுதியாக பசுமைப்புரட்சி முதலியவற்றின் வழியாக நமக்கு பெரும்பாலும் தெரியாமலேயே நமக்குள் நுழைந்து நம்மை முழு அளவில் ஆக்கிரமித்திருக்கிற இந்த அசுர சக்திகளுக்கு எதிராக நாம் போரிடாமல் நமக்கு விடுதலை சாத்தியமில்லை. மத்தியதர வர்க்கத்துப் படிப்பாளிகளாகிய நம்மைப் போன்றவர்களுக்கு இந்த அசுர சக்திகள் மிக மிக நுட்பமாகவும் ஆழத்திலும் வேரோடி நம்மைப் பிணித்திருக்கின்றன. மார்க்சியரென தம்மைக் கருதிக் கொள்பவர், இந்த அசுர சக்திகளின் முழுவீச்சின் மேற்பரப்பைக்கூட காணவில்லை. தமிழறிஞர்களுக்கு இதைப் புரிந்து கொள்வதற்கான வாய்ப்புகள் இல்லை. தமிழ் இனத் தலைவர் என நம்மால் மதிக்கப்பட்டவர்கள், இந்த அசுர சக்திகள் எவ்வாறு ஒன்றோடொன்று கைகோத்துக் கொண்டிருந்தன என்பதைப் புரிந்து கொள்ளாதவர்களாகத்தான் இருந்தார்கள். இந்த நிலையில், விடுதலை என்பது பற்றிப் பேசுகிற எவரும், ஆழ்ந்த அக்கறையோடு இந்த மாபெரும் சிக்கல் தொகுப்புப் பற்றிய புரிதலை

அவசியம் பெறவேண்டும். பார்ப்பனியம் என ஒற்றை அம்சத்திலிருந்து இந்தச் சிக்கலின் தொகுப்பைக் கணிக்கமுடியாது.

அம்பேத்கர் பற்றி நான் பேசும்பொழுது, பிரெஞ்சுப் புரட்சியின் கோட்பாடுகளைத் தனக்குள் தாங்கி, இந்த இருபதாம் நூற்றாண்டிலிருந்து இந்து மதம் பற்றி அவர் விமர்சனம் செய்கிறார் என்று குறிப்பிட்டேன். அம்பேத்கரின் சமத்துவம் பற்றிய பார்வை பூர்சுவா சனநாயகம் என்பதற்கு மேல் செல்வதற்கில்லை. அவர் கருதிய சமத்துவம் என்பது சமதர்மம் அல்ல. இன்று சமதர்மம் என்ற பார்வையில் நாம் அனைவரும் மையம் கொண்டிருக்கிறோம். இதை வைத்து அம்பேத்கரை விமர்சனம் செய்யவேண்டும் என்று நான் கூறமாட்டேன். அம்பேத்கருடைய கோட்பாடு இன்று போதும் என்று கருதுகிறவர்களோடுதான் எனக்கு முரண்பாடு. மார்க்சியம் என்ற விரிந்த தளத்திலிருந்து அம்பேத்கரையும் பெரியாரையும் இணைத்துக் கொள்வது பற்றித்தான் நான் அதிகம் சிந்திக்கிறேன். சாதி என்ற மையத்தில் கவனம் குவித்து மார்க்சியத்தை ஓரத்தில் தள்ளும் சிலரது முயற்சி எனக்கு உடன்பாடில்லை இயலுமானால் பதில் எழுதுங்கள்.

தங்கள்,

கி. ப.

3. மதிப்பிற்குரிய நண்பர் திரு. பிரபஞ்சன் அவர்களுக்கு

வணக்கம். 16-3-93

இரண்டு நாட்கள் நீங்கள் கோவையில் தங்கியிருந்த போதும், விவாதித்துக்கொள்ள நமக்கு நேரம் கிடைக்கவில்லை. இப்பொழுதும் நான் அதிகம் விவாதிப்பதாக இல்லை. நேரில் நாம் நிறைய விவாதிக்க வேண்டும். பத்திரிகைகளோடும், மக்களோடும் பெரிய அளவில் தொடர்பு கொண்டிருக்கிற நீங்கள் உங்கள் கருத்துகள், இன்னும் விரிவான தளத்தில் இருக்க வேண்டுமென்ற விருப்பம்தான் என்னை உங்களோடு விவாதிக்கத் தூண்டுகிறது. அடுத்த முறை நீங்கள் கோவைக்கு வரும்பொழுது, அவசியம் சற்று நேரம் ஒதுக்குங்கள்.

இப்பொழுது ஒரு பிரச்சினை பற்றி மட்டும்தான் இக்கடிதம். அண்டைக்காலத்தில் சந்தைப் பொருளாதாரம் என்ற பெயரில் தூண்டுதல் பெற்றிருக்கிற முதலாளியத்தையும்,

இதற்குத் தேவையான முறையில் தன்னைத் தீவிரமாக தயார்ப் படுத்திக் கொள்கிற அரசு அதிகாரம் பற்றியும், சில பத்தாண்டு களாக வாழ்வின் அனைத்துக் களங்களுக்குள்ளும் ஊடுருவி ஊரமான தன் ஆதிக்கக் கரங்களை விரித்துக் கொண்டிருக்கும் ஏகாதிபத்தியம் பற்றியும் நான் அதிக அளவில் பேசுகிறேன். இவற்றின் ஆதிக்கம் எப்படியெல்லாம் உச்ச அளவில் செயல்படுகிறது என்பதற்கான ஆதாரங்களைத் தொடர்ந்து சொல்லி வரு கிறேன். தமிழகம் / இந்தியாவைப் பொறுத்தவரையில், ஒரு நூற்றாண்டுக் காலமாக தமிழினத் தலைவர்கள் என்று நமக்குத் தெரிய வந்திருக்கிற பெரியவர்கள், இந்த அசுரசக்திகளின் முழு வீச்சிலான ஆதிக்கத்தைப் புரிந்து கொள்ளவில்லை. மார்க்சியர் கடுமையாகத் தவறிழைத்த இந்தக் களத்தில், மற்றவரைக் குற்றம் சொல்ல வேண்டியதில்லை. தொழிற்சங்க வாதம், பொருளாதாரவாதம், அரசு அதிகாரவாதம் என்ற முறையில் மார்க்சியத்தைக் குறைத்தவர்கள் மார்க்சியர். உண்மையில் இது மார்க்சியமல்ல. முதலாளியத்தை முழு அள வில் தனக்குள் உள்வாங்கிக் கொண்டது இந்த மார்க்சியம். சோவியத் யூனியனில் மார்க்சியம் எனச் செயல்படுத்தப்பட்டது உண்மையில் முதலாளியம்தான். இராணுவம், கனரகத்தொழில், மையத்தில் குவிக்கப்பட்ட அரசு அதிகாரம், கட்சி அதிகாரம், புலனாய்வுத்துறை, நவீன அறிவியல், தொழில் நுட்பம், இவையெல்லாம் உழைக்கும் மக்களை உச்ச அளவில் சுரண்டி, அதற்காக ஒடுக்குமுறையை உச்ச அளவில் செலுத்தி, இவற்றின் விளைவாக மக்களிடமிருந்து விலகி, மக்களுக்குச் சுமையாகி, இறுதியில் இடிந்துவிழுந்து தகர்ந்தது. ஏகாதிபத்தியத்தின் சதி என்று ஒற்றைப் பரிமாணத்தில் இந்தத் தகர்வை அர்த்தப் படுத்துவது, மீண்டும் மோசடி அரசியல். இந்தியாவிலும் செயல் பட்டது, முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்டது, இந்த மார்க்சியம்தான். இதைத்தான் மார்க்சியம் எனக்கருதி பலர் இப்பொழுது கைவிடுகிறார்கள். மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றல்களை மீண்டும் கண்டறிந்து, மார்க்சியத்தை வளர்ந் தெடுக்க வேண்டிய அரிய சந்தர்ப்பம் வரலாற்றில் வாய்த்திருக் கிறது. மார்க்சியம் என்ற ஆதாரத்தளத்தைக் கைவிட்டு பெரியாரியத்தையோ, அம்பேத்கரியத்தையோ, முழுமையான தத்துவமென நாம் கொள்ளவேண்டியதில்லை. அம்பேத்கருக் கும், பெரியாருக்கும் மார்க்சியர் முழு அளவில் மரியாதை செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். அண்மைக் காலத்தில் பெரியாரும் அம்பேத்கரும் தந்த தூண்டுதல்களோடு மார்க்சியத் தினுள் செல்பவர், மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றல்களின்

சில பரிமாணங்களை அருமையாகக் கண்டு பிடிக்க முடியும். மார்க்சியத்தைத் தூரத்தில் தள்ளிவிட்டு பெரியார் அல்லது அம்பேத்கரை முதன்மைப்படுத்துவது தேவையில்லை. மார்க்சியம் என்ற ஆதாரத்தளத்தில் நின்றுகொண்டு, அம்பேத்கரையும் பெரியாரையும் நாம் தழுவிக்கொள்ள முடியும். சரியான ஒரு மார்க்சிய இயக்கம் செயல்படுமானால் மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின் என்ற வரிசையில் பெரியாரையும் அம்பேத்கரையும் சேர்த்துக் கொள்ள முடியும். தமிழகத்தில் இன்று மார்க்சியத்தை ஓரத்தில் தள்ளி, பெரியாரியம்தான் மார்க்சியம் என்று சொல்லி, அப்புறம் பார்ப்பனிய எதிர்ப்பு என்ற ஒற்றை அம்சத்தில் அடக்கிவிடுகிற போக்கு, இறுதியில் பெரியாரியக்கத்தைக் கூட அழித்துவிடுகிற போக்காகிவிடும். கூட்டம் சேர்ப்பதற்காக புராணங்கள் பற்றியும், பார்ப்பனர் பற்றியும் பேச நேர்ந்திருக்கிற செயல் பற்றிய சுயவிமர்சனம் கொண்டிருந்த பெரியார், இறுதியில் புரட்சிகரமான சமூக மாற்றம்தான் தன் குறிக்கோள் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். பெரியாரியத்தை சரியான முறையில் தோண்டிக் கொண்டே சென்றால் முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும், இப்பொழுது இவற்றைக் கட்டமைக்கிற ஏகாதிபத்தியத்தையும் ஒருசேர எதிர்க்கிற அழிக்கிற மார்க்சியத்தை பெரியாருக்குள்ளிருந்தே நாம் வளர்த்துக் கொள்ள முடியும். இப்படித்தான் பெரியாரியத்தையும் மார்க்சியத்தையும் நான் புரிந்து கொள்கிறேன்.

இங்கு பேசுகிற ஒரு சந்தர்ப்பத்தில், முதலாளியம்தான் பார்ப்பனியம்; அரசு அதிகாரம் தான் பார்ப்பனியம்; ஏகாதிபத்தியம் என்பது பார்ப்பனியம் என்று பார்ப்பனியத்திற்குள் ஆதிக்க சக்திகளைத் திணித்தீர்கள். ஒரு சிறிய பானைக்குள் யானையைத் திணிக்கிற சமாச்சாரம் இது. பார்ப்பனியம் என்பது ஒரு கருத்தியல். இன்றைய அரசு அதிகாரத்திற்குத் தேவைப்படுகிற கருத்தியல் தொகுதியில் பார்ப்பனியம் அடங்கும். இன்று அரசு அதிகாரத்திற்குத் தேவைப்படுகிற கருத்தியல்களில் மக்களாட்சி, சந்தைப் பொருளாதாரம், காந்தியம், மதம் என பல கருத்தியல்கள் தேவைப்படுகின்றன. விரிவான விவாதத்திற்கு உரியது இந்தப் பகுதி. நவீன அறிவியல், கல்வி, மருத்துவம், இராணுவம், தேசபக்தி, சட்டம், ஒழுங்கு, மக்கள் தொகை என்பனவற்றின் சார்பாக நிறைய கருத்தியல்கள் எழுப்பப்படுகின்றன. இவற்றினுள் வைத்து, பார்ப்பனியம் என்ற கருத்தியலின் இடத்தை நாம் பரிசீலிக்க வேண்டும். இந்தியா ஒரு தேசம் என்று பேசுவது முதலாளியத்திற்குத் தேவை. இந்தக்

கருத்தோடு ஒத்துச் செல்வது பரதகண்டம் என்கிற பார்ப்பனியம். உலகச் சந்தையோடு உறவு கொள்ளவேண்டும் என்ற முறையில் நவீன அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் இந்தியா தனக்குள் திணித்துக் கொள்ள விரும்புகிறது. கணிதம், கனிப்பொறி, விஞ்ஞானம் என்ற முறையில் பார்ப்பனர் இங்கு இடம் பெறுகின்றனர். பார்ப்பனியம் என்பதனுள் இதற்கான கோட்பாடு இல்லை. சமக்கிருதத்தைத் தொடர்ந்து ஆங்கிலத்தை இவர்கள் அணைத்துக் கொண்டார்கள். ஆங்கிலத்தின் வழியே இவர்கள் அரசு அதிகாரத்தினுள் நுழைகிறார்கள். பார்ப்பனியத்தை சதி என்று சுருக்கி, எல்லாவற்றையும் இயக்கும் சக்தி இது எனச் சொல்வதன் மூலம், வரலாற்று இயக்கத்தை விளக்க முடியாது. பார்ப்பனியம் அரசு அதிகாரத்தை தோற்றுவிக்கவில்லை. முதலாளியத்தையும் ஏகாதிபத்தியத்தையும் தோற்றுவிக்கவில்லை. பார்ப்பனியம் என்பதற்கு இத்தகைய ஆற்றல்கள் இல்லை. வரலாற்றில் குறிப்பாக இந்திய வரலாற்றில் பார்ப்பனியம் ஒரு முக்கிய சக்தியாக பல சமயங்களில் அழிவு சக்தியாக செயல்பட்டிருக்கிறது / செயல்படுகிறது என்பதைக் கொண்டு இந்திய வரலாற்றை விளக்கவும் முடியாது. அரசு அதிகாரத்தோடு சேர்த்துதான் பார்ப்பனியம், இந்திய மக்கள் மீது இறுக அமர்ந்தது. அரசு அதிகாரத்தை எப்பொழுதும் பார்ப்பனியம் ஆட்டி வைத்தது என்பது உண்மையல்ல. இப்படியெல்லாம் சொல்லி பார்ப்பனியம் ஒழிந்தால் மக்களுக்கு முழு அளவு விடுதலை கிட்டும் என்று சொல்வது வரலாற்றை மறுப்பதாகும். தத்துவத்தை அழிப்பதாகும்.

தங்கள்,

கி. ப.

**4. அன்பு நண்பர் அக்கினி அவர்களுக்கு**

7-9-91

உங்களிடம் சண்டைகளைத் தவிர்த்து, ஒழுங்கான விவாதங்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதற்காக இக் கடிதம். உங்களது சாதியக் கோட்பாடு பற்றி வெவ்வேறு சந்தர்ப்பங்களில் நான் எழுப்பிய கேள்விகளை இந்தக் கடிதத்தில் தொகுத்துத்தர விரும்புகிறேன். இதற்கு உங்களது பதில் தேவை.

1. பார்ப்பனிய எதிர்ப்பு என்ற நிலைப்பாட்டை நீங்கள் முன்வைக்கும் பொழுது தாழ்த்தப்பட்டவர் பார்வையிலிருந்து நீங்கள் வழுக்காடுவதாக சில சமயம் தோன்றுகிறது. உண்மை

யில் இடைப்பட்ட உயர்சாதியின் அல்லது பிற்பட்ட சாதியின் நிலைப்பாட்டிலிருந்துதான் நீங்கள் பேசுவதாக நான் நினைக்கிறேன். ஒவ்வொரு நிலைப்பாட்டுக்கும் ஒரு அரசியல் உண்டு என்ற அடிப்படையில் உங்கள் அரசியல் நிலைப்பாடு என்ன? அதாவது இடைப்பட்ட சாதிகளையும் இரண்டு வகைப்படுத்தும் சாத்தியம் இருக்கிற நிலையில் உங்கள் உயர்சாதி அல்லது பிற்பட்ட சாதி என்று வைத்துக்கொண்டு உங்கள் அரசியல் நிலைப்பாட்டை வைத்துச் சொல்ல முடியுமா? உங்கள் அரசியல் நிலைப்பாடும் தாழ்த்தப்பட்டவரின் அரசியல் நிலைப்பாடும் ஒன்றல்ல. அல்லது இவை ஒத்துச்செல்ல முடியாது. தாழ்த்தப்பட்டவரின் அரசியல் நிலைப்பாடு உங்களை முற்றாக மறுக்கும். தாழ்த்தப்பட்டவரின் அரசியல் நிலைப்பாடு என்னவாக இருக்க முடியுமென்று ஏற்கனவே நான் உங்களிடம் கூறியுள்ளேன். பார்ப்பனனை மட்டும் மறுக்கும் முறையில் பேசிவிட்டு தன் அரசியல் நிலைப்பாட்டைக்கண்டு கொள்ளாமல், வெளிப்படுத்திக் கொள்ள மாட்டாமல் இருப்பது இடைப்பட்ட சாதியின் அரசியல். இவர்கள் தாழ்த்தப்பட்டவர் மீதும் மறைமுகமாகவேனும் அடக்குமுறையைத்தான் செலுத்துகின்றனர்.

2. நாகராசன் விடாப்பிடியாகக் கேட்கிறார். பார்ப்பனியம் என்பதை எப்படி வரையறைப்படுத்துகிறீர்கள்? கூடியவரை இதுபற்றி கறாராகச் சொல்ல வேண்டும். அல்லது அடிப்படையான சில வரையறைகளையாவது முன்வைக்க வேண்டும். பார்ப்பனியம் என்று பேசுகிறபொழுதே புதிய பார்ப்பனியம் என்று தாவுவது, சிந்தனையிலும், அரசியல் நிலைபாடு எடுப்பதிலும் ஒரு குழப்பத்தைத்தான் ஏற்படுத்துகிறது. பார்ப்பனியம் என்று வரையறைகளை முன்வைக்கும் பொழுதே புதிய பார்ப்பனியம் பற்றிய வரையறைகளையும் தெளிவாக்கி விடவேண்டும்.

3. சாதீயம் பற்றிய ஆய்வைச் செய்வதற்கு உரிய அணுகுமுறை சாதீயக் கோட்பாட்டிற்குள் இல்லை. சாதீயம் பற்றிய ஆய்வுக்கு மார்க்சிய அணுகுமுறையைத் தான் ஆதாரமாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதாவது, சாதி என்ற பிரச்சினை எத்தகைய வரலாற்று, பொருளியல் சூழலில் எழுகிறது என்ற முறையில்தான் நாம் இதை அணுக முடியும். அதாவது பொருளியல் சூழலில் ஏற்படும் நெருக்கடிகளுக்கிடையில்தான் சாதிப் பிரச்சினை எழுகிறது / வெடிக்கிறது. பொருளியல் சூழல் என்ற வடிவத்

திற்குள் உடைமையும் அதிகாரமும் யாரிடம் சேர்ந்துள்ளன? அதிகாரத்தை நிலைநிறுத்துவதில் கருத்தியலின் பங்கு என்ன? உடைமையையும் அதிகாரத்தையும் கருத்தியல் தோற்றுவிக்க வில்லை. உடைமையையும் அதிகாரத்தையும் காப்பது / வலுப் படுத்துவது என்ற செயல்பாட்டின் ஓரம்சம் வன்முறை / ஆயுதங் களோடு கூடிய வன்முறை. இன்னோரம்சம் கருத்தியல். பார்ப்பனியம் என்பது கருத்தியல். அதிகாரத்திற்கு சேவை செய்வது இதன் குணம். இதற்கு மேல், வரலாற்றில் பார்ப் பனியத்திற்கு பங்களிப்பு வேறு சொல்ல முடியாது. இந்தி யாவின் வரலாற்றில் பார்ப்பனியத்தின் பங்கு பற்றி சரியான விவரங்கள் எனக்குத் தெரியாது. மனுதர்மம், நடைமுறைப் படுத்தப்பட்ட ஒரு அரசியல் கோட்பாட்டு நூல் என்று நான் நினைக்கவில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக நடை பெற்ற சில செயல்களை வைத்து, வரலாற்றில் இதைப் பொது மைப்படுத்த முடியாது. இதைப் பற்றிய சரியான விவரங்களை நீங்கள் தொகுத்துக் கொள்ள வேண்டும். பார்ப்பனியமோ, சாதிப் பிரச்சினைகளோ வரலாற்றில் எத்தகைய சூழலில் என்ன, யார் தேவைக்காக ஏற்பட்டன என்பது பற்றிய விவரங்கள் தேவை.

சாதியக் கோட்பாட்டை மார்க்சிய அணுகுமுறையில் நோக் காத நிலையில், நீங்கள் வெளிப்படுத்தும் சாதியக் கோட்பாடு மார்க்சியத்தை மறுக்கும் எதிர்நிலையில் நிற்கிறது. மார்க்சி யத்தை மறுப்பதற்காக சாதிக் கோட்பாட்டினை முன்வைப் பவரின் அரசியலுக்கு நீங்கள் இடம் கொடுக்கிறீர்கள். தி.க.வில் வலுவான ஒரு பிரிவினர் உடைமைவாதிகள், அதிகார வெறி யர்கள். மார்க்சியம் கூறும் முறையில் இங்கு வர்க்கம் இல்லை என்று சாதிப்பதன் மூலம் மார்க்சியத்தின் வரலாற்றியல் அணுகு முறையையும் இவர்கள் தூக்கி எறிகிறார்கள். தம் உடைமை களையும் கட்சி அமைப்பையும் நெடுங்காலத்திற்கு இருத்தி வைத்துக்கொள்வது இவர்கள் விருப்பம். சமூக மாற்றம் இவர் களுக்குத் தேவையில்லை. சாதி ஒழிப்பிலும் இவர்களுக்கு அக்கறையில்லை. பார்ப்பனியம் எந்த ஆதாரங்களில் நிலை பெறுகிறது என்பதைக் கூட இவர்கள் தெரிந்து கொள்ள விரும்பவில்லை. பூர்சுவா கருத்தியலின் ஒரு பகுதிதான் இவர் களுக்குள் இடம் பெற்றிருக்கிறது. மதம், புராணங்கள் பற்றிய இவர்கள் பார்வை தவறானது. தாழ்த்தப்பட்டவர்கள் என்ற மக்கள் தொகுதி இவர்களுக்குத் தேவை. இவர்களின் சாதியக் கோட்பாடு கடுமையான விமர்சனத்திற்குரியது. மார்க்சியத்தை

ஏற்றுக் கொண்ட உங்களைப் போன்றவரால் இந்தச் சாதியக் கோட்பாடு பெருமை அடைகிறது. இதுபற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும்.

4. தனிப்பட்ட முறையிலும் உங்களைப்பற்றி சில விமர்சனங்கள் சொல்ல முடியும். குடும்ப முறையில் உங்களிடம் சேர்ந்துள்ள சொத்தை மறைத்துக் கொள்ள முயற்சி செய்கிறீர்கள். இந்த உடைமையைப் பற்றி விமர்சனத்தோடு பேசி உங்களைத் தக்கவைத்துக் கொள்ள முடியும். உங்களது தனிப்பட்ட சாதியின் சில குணங்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன. உங்களிடம் உள்ள கரவுக் குணம், உடைமைப்பற்று அருவெறுக்கத் தக்கதாக உள்ளது. ஒரு பெரிய நகரத்தின் சிறுமைக் குணங்கள் உங்களை இறுக்கமாகப் பற்றிக் கொண்டுள்ளன. தனிப்பட்ட இந்தக் குறைபாடுகள் சமூக இயக்கங்களின் பின்னடைவின் விளைவாகப் பெரிதாகிவிட்டன. மேடைத் தோரணையில் அரட்டை அடிப்பதும் உரத்துப் பேசுவதன் மூலம் கருத்துக்களை நிலைநாட்டுவதும் உங்கள் குணங்களாகி விடுகின்றன. இவற்றுக்கு மத்தியிலும் அக்கினி என்ற மேலான மனிதனை நான் கண்டு நேசிக்கிறேன். இந்த அம்சத்தை நான் என்றும் குறை சொல்லமாட்டேன். இந்த அம்சத்தைப் பெருமைப்படுத்துவேன். உங்களிடம் சாதியக் கோட்பாடு வலுப் பெறுவதற்கும் உங்களிடம் உள்ள சில குணங்கள் காரணிகளாகியிருக்கின்றன. உங்களிடம் படிந்து வருவதாக நான் நினைக்கும் குணங்கள் கூட உங்கள் குணங்கள் அல்ல. இவையும் நம் சமூகத்தின் குணங்கள். இதுபற்றிய பார்வை இல்லாமையும் பார்வைக்குள் தெரிகிற வெளிச்சங்களை மறைப்பதும்தான் உங்களைப் பொருத்த குறைகள். இதேபோல என்னைப்பற்றி நீங்கள் விமர்சனம் செய்யலாம். பி. ஆர். சுப்புசாமி அவர்களுடன் இரவில் பேசி ஒன்றுபட்டு, பகலில் மேடையில் வைத்து என்னை நீங்கள் கேவலப்படுத்தியதை என்றைக்கும் நான் மறந்துவிட மாட்டேன். தமிழ் இலக்கிய விமர்சனம் பற்றி ஏற்கனவே நான் உங்களிடம் கூறியுள்ளேன். இவற்றையும் நீங்கள் முறையாகத் தொகுத்துத்தர வேண்டும்.

பல நாளும் எண்ணி இன்றுதான் இக் கடிதத்தை எழுதி அனுப்புகிறேன். பொறுப்புடன் இதற்கு பதில தருவீர்களென்று நம்புகிறேன். நேரில் நீங்கள் அரட்டை அடிப்பது வேண்டாம். உங்களது கருத்துக்கள் எழுத்தில் இருக்கட்டும்.

தங்கள்,

கி. ப.

**5.** 2-9-92

'கலை பற்றித்தான் சொல்கிறார்; அரசியல் பற்றிச் சொல்வதில்லை ஞானி; பார்ப்பனியத்தை ஆதரிக்கிறார்; இவை பற்றியெல்லாம் இனி எழுதுவேன்' என்கிறார் அக்கினி. அக்கினி எழுதவேண்டும். என்னுடைய பதிலோடு நானே வெளியிடுகிறேன். செலவில் சரிபாதியை அக்கினி ஏற்க வேண்டும். இருவர்க்கிடையில் வெட்டி வம்பு என்று இல்லாமல் விவாதம் தரமாக இருக்க வேண்டும். அக்கினியும் நானும் இணைந்திருந்தது ஒரு காலம். அப்பொழுது இருவரும் ஆக்கம் பெற்றோம். அக்கினி இப்பொழுது வேறொரு ஈர்ப்பு விசைக்கு ஆட்பட்டு தலை தெறிக்க ஓடுகிறார். அக்கினியிடம் நிதானம் இல்லை. என்னை அவமதிக்கிறார். என் அன்பை அக்கினி மறுக்கிறார். அக்கினி இனி தன்னைத் திருத்திக் கொள்வார் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வதில் அக்கினி முனைந்திருக்கிறார். தீங்கு தடுக்கும் திறம் எனக்கில்லை.

மேலும் சிலவற்றை இக் கடிதத்தில் சொல்ல வேண்டும். அக்கினியை முன்னிலையில் வைத்தும் படர்க்கையில் வைத்தும் இக் கடிதம் எழுதுகிறேன். தேவைப்பட்டால் இக் கடிதம் சில நண்பர்களின் பார்வைக்கு செல்ல வேண்டியிருக்கும். காரணம் அக்கினிக்கும் எனக்குமென தோற்றம் தரும் இப் பிரச்சினையில் வேறு பல நண்பர்களும் தொடர்பு கொண்டுள்ளனர். தவிர இப் பிரச்சினை நம் சமுகத்தின் ஒரு பிரச்சினையென கணிக்கத் தகும். சுரண்டலை எந்த வடிவத்திலும் நான் ஆதரிக்க மாட்டேன். அதேபோல ஒடுக்குமுறையையும் ஏற்கமாட்டேன். சுரண்டல் / ஒடுக்குமுறையின் பல வடிவங்களில் ஒன்று பார்ப்பனியம். இந்திய / தமிழகச் சூழலில் பார்ப்பனியன்தான் சுரண்டல் / ஒடுக்கு முறையின் ஒரே வடிவம் என்று அக்கினி கருதுகிறார். தவிர இன்றைய பொருளியல் / அரசியல் நெருக்கடி என்ற பொருளியல் சூழலில் பார்ப்பனியம் என்ற பிரச்சினை எப்படி முன்னுக்கு வந்திருக்கிறது என்று நாம் பார்க்க வேண்டும். மண்டல்குழு பற்றிய பிரச்சினையும் இந்தக் கண்ணோட்டத்திலிருந்து அணுகப்பட வேண்டும். ஆங்கிலத்தை ஒழிக்காமல் அக்கிரகாரத்தை ஒழிக்க முடியாது என்று நாகராசன் சொல்வது இப் பிரச்சினையின் ஒரு பரிமாணம். இதே போல பார்ப்பனியத்தின் அரசியல் பொருளியல் பரிமாணங்களும் ஆய்வுக்குரியவை. ஏகாதிபத்திய ஊடுருவலுக்கு, அரசு

அதிகாரப் பெருக்கத்திற்கு, சந்தைப் பொருளாதாரத்திற்கு பார்ப்பனியம்தான் காரணம் என்று எவரும் விவாதிக்க முடியாது.

மேலும் ஒன்று. இன்று நம் சமூகத்தில் நடைபெறும் சுரண்டல் / ஒடுக்குமுறை என்பது, நடுத்தரவர்க்கத்தின் மூலமும் தான் நடைபெறுகிறது. அடித்தள மக்கள் மீது நடுத்தர வர்க்கம் ஆதிக்கம் செலுத்துகிறது. நடுத்தர வர்க்க அறிவாளிகள் இதைப் புரிந்து கொள்ளவேண்டும். என்னைப் போலவே அக்கினியும் நடுத்தரவர்க்கத்தினர். என்னைக் காட்டிலும் சுரண்டலுக்கான வாய்ப்பு அக்கினிக்கு அதிகம். நாம் என்ன தான் விரும்பினாலும் இந்தச் சுரண்டல் சூழலிலிருந்து நம்மை வெட்டிக் கொள்ள முடியாது. குடும்பம், தொழில், வாழ்க்கை வசதிகள் என்பனவற்றின் மூலம் சுரண்டலின் தடங்கள் நமக்குள் ஆழமாக வேரோடியுள்ளன. இந்த வேர்களை நாம் களைந்து கொள்ள முடியாது. புரட்சிகர இயக்கத்தின் செயல்பாடு அதிகரிக்கிற சூழலில்தான் மெல்ல மெல்ல இந்த வேர்களி லிருந்து விடுபட முடியும். அன்றியும் இந்த விடுபடல் என்பது எந்த அளவுக்கு சாத்தியம், எவ்வளவு கால அளவில் இது சாத்தியப்படும் என்றெல்லாம் இப்பொழுது சொல்ல முடியாது. முதலாளியத்தை உள்வாங்கிக்கொண்ட மார்க்சியத்தின் பார்வை யில் இந்த விடுபடல் தேவையில்லை. அல்லது சாத்தியமில்லை. அக்கினியிடம் இருக்கிற மார்க்சியம், முதலாளிய மார்க்சியம். சுரண்டலோடு சம்பந்தப்பட்டிருப்பதைப் பற்றிய குற்ற உணர்வு எனக்கு இருக்கிறது. அக்கினி இதை மறைக்கிறார். பெரு நகர சூழலும், தன் குடும்பமும் தன்னைச் சிதைத்திருப்பதையும், தன் நல்ல குணங்கள் பலவற்றை அழித்திருப்பதையும் பற்றிய உணர்வு கொண்டவராக இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வரை அக்கினி தன்னைப்பற்றி வேதனையோடு சொல்லிக் கொண்டு இருந்தார். இப்பொழுது இம்மாதிரி குற்ற உணர்வு அவருக்கு இல்லை. என் குடும்பச் சூழல் என்னை எவ்வளவுதான் தொல்லைக்குள்ளாக்கினாலும் இன்று வரை என் குடும்பச் சூழலில் நான் பிரிந்தே இருக்கிறேன். கண் பார்வை அற்ற பிறகும் நான் நிமிர்ந்து நிற்கிறேன் என்ற முறையில் என்னை என் மனைவி தாக்குகிறாள். கண்பார்வை அற்ற இந்த நிலைமையில் நண்பர்களின் சிறு உதவியைக் கூட நான் கோருகிறேன். பெரிதாக எதிர்பார்க்கிறேன். நண்பர்களை இப்பொழுது நான் இழக்க விரும்பமாட்டேன். மார்க்சியத் தோடும் நண்பர்களோடும் இலக்கியத்தோடும் இடையறாத

உறவில் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் 'நிகழை' விடாப் பிடியாக நடத்துகிறேன். எஸ்.வி.ஆர். என்னை அவமதித்து பிரிந்து சென்றார். அதற்கான காரணங்கள் பற்றி நான் இங்கு பேசவேண்டியதில்லை. என்னைப் பிரிவது, எஸ்.வி.ஆருக்குத் தேவையாக இருக்கலாம். கடைசியாக எஸ்.வி.ஆரைச் சந்தித்த பொழுது என்னைப் பற்றி அவர் கோபத்தோடு கூறினார். ''நீ ஓர் இண்டலக்சுவல் இல்லை'' நான் இதை ஏற்கிறேன். என்னை ஓர் அறிவாளி என நான் என்றும் நினைத்ததில்லை. சில புத்தகங்கள் படிக்கிறேன். அவர்களிடமிருந்து கற்றுக் கொள்கிறேன். அவர்கள் அறிவாளிகள். நான் மாணவன். திறந்த மனத்தோடு படிக்கிறேன், கேள்வி கேட்கிறேன். என்னை நானே பலமுறை திரும்ப பார்த்துக் கொள்கிறேன் எனக்குத் தெரியாத ஒன்றைப் பற்றிப் பேச நேர்கிறபொழுது எனக்குள் தவிக்கிறேன். அறிவாளி என்று கிரீடம் வைத்துக் கொள்பவர்களின் ஆணவத்தை நான் வெறுக்கிறேன். தமிழகச் சூழலில் இந்த ஆணவத்தின் ஆதிக்கம் பெரிதாகத்தான் இருக் கிறது. எஸ்.வி.ஆர் இந்த ஆணவத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதில்லை. அக்கினியும் இப்பொழுது அறிவாளி என்ற கிரீடத்திற்காக அலைகிறாரோ என்னவோ தெரியவில்லை. என்னைச் சுற்றி ஒரு வளையம் எழுப்பி என்னைத் தனிமைப்படுத்த வேண்டும். தனிமைப்படுத்தி ஞானியை அடக்க வேண்டும். 'நிகழை' பறித்துக்கொள்ள வேண்டும். அக்கினி இவ்வாறு யோசிக்கலாம். இப்படித்தானா என்று கூட எனக்குத் தெரியவில்லை. அப்படி 'நிகழை' பறித்துக்கொண்டால் நிகழின் ஓர் இதழைக் கூட அக்கினியால் வெளியிட இயலாது. ஒவ்வொரு இதழுக்கும் ரூபாய் மூவாயிரத்து ஐநூறு என்ற செலவை அக்கினியால் சிந்திக்க முடியாது. ஜனநாயகம் என்று பேசி சிற்றிதழ்களில் இலவச மாக குதிரைச்சவாரி செய்யும் பலருள் ஒருவராகத்தான் அக்கினி இருக்கமுடியும். ஒரு சமயம் நண்பர் பழமலய் கூறினார். ''அக்கினிக்கு நீங்கள் மார்க்சியம் கற்றுத்தரவில்லை. இப்பொழுது அக்கினி தன் பழைய கோட்பாட்டுக்குள் சென்றிருக்கிறார்'' மார்க்சியப் பார்வைக்குள் ஆழ்ந்த படிப்போ, சுயமான சிந்தனையோ அற்ற நிலையில் அண்மைக்காலப் போக்குகள் பற்றி ஆழ்ந்தபார்வை இல்லாத அக்கினி மீண்டும் தி.க.வின் பார்வைக்குப் பலியாகி இருக்கிறார். நண்பர் பழமலயின் புரிதல் கூடியவரை ஏற்கத் தகுந்தது தான். இன்னொரு சமயம் நண்பர் பழமலய் எனக்கு எழுதினார். 'அக்கினியின் மீது நீங்கள் இவ் வளவு அன்பு வைத்திருக்கக்கூடாது. அதனால் தான்

இப்பொழுது தவிக்கிறீர்கள்.' எனக்கு இது புரிகிறது. கடந்த இரண்டு ஆண்டுகளாக அக்கினியால் பல்வகைத் தொல்லைகளுக்கு உள்ளாகிய நிலையில் அவரிடம் கொண்ட அன்பை விலக்கிக்கொள்ள இயலாமல் நான் பட்ட வேதனைகள் கொஞ்சநஞ்சமல்ல. ஆனால் அக்கினி தொடர்ந்து என்னைத் தாக்கியதன் மூலம், அக்கினியிடமிருந்து மெல்ல மெல்ல நான் விடுபட்டிருக்கிறேன். இந்த நிலையிலும் அக்னியிடம் எனக்குப் பகை இல்லை. பகை எனக்கு சாத்தியமில்லை. அக்கினியின் பெற்றோர், அண்ணன் தம்பிகள், அக்னியின் குடும்பத்தினர் குழந்தைகள் எவரிடத்தும் என் நேசம் குறையவில்லை. தீவட்டி ஏந்தித் திரியும் அக்கினியை என்னால் மதிக்க முடியவில்லை. 'மேடையேறினால் எனக்கு ஆவேசம் வந்து விடுகிறது. என்னை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லையா' இப்படி அக்கினி கேட்கிறார். உண்மைதான். மேடையேறி என்னைக் கேவலப் படுத்திப் பேசுவதை நான் என்னவென்று சகித்துக்கொள்வது? எப்படி புரிந்து கொள்வது? என்னிடம் அக்கினி எதைக் கேட்கிறார். எனக்குள் இவர் பார்ப்பனியத்தைக் காண்பதாக எப்படிச் சொல்கிறார்? பார்ப்பனியம் என்பது இன்று மிகக்கடுமையான வசைச்சொல். என் மீது இந்தவசைச்சொல்லை தூக்கி எறிவதை அணு அளவும் என்னால் ஏற்கமுடியாது. சுரண்டல் சமூகம் அக்கினியை தன் இறுக்கமான பிடிப்புக்குள் வைத்திருக்கிறது. இதை மறைக்க வேடம் தரித்து அக்கினி வெளிக்கிளம்புகிறார். ஆவேசமாகக் கத்துகிறார். தன்னைப் புனிதப்படுத்திக் கொள்ள முனைகிறார். அக்கினிக்கு அறிவுரை சொல்ல இனி என்னால் முடியாது. இனி அக்கினி பதில் எழுதட்டும். ○

6. 4-2-93

இது நான் உங்களுக்கு எழுதும் மூன்றாவது கடிதம். எனது இரண்டாவது கடிதத்தை இன்குலாப்பிடம் கொடுத்து அவர் தொலைத்து விட்டதால் பதில் எழுதவில்லை என்று நீங்கள் கூறியிருப்பதை நான் நம்பவில்லை. உங்கள் கடிதத்தில் கிளப்பியவற்றுள் சிலவற்றிற்கு என் பதிலை சுருக்கமாகத் தருகிறேன். இது பற்றி உங்கள் பதிலும் தேவை.

1. 'இலக்கியப் பாசறை'யில் வெளிவந்த என் கட்டுரையை உங்களால் புரிந்து கொள்ளமுடியாது. தமிழின் வாழ்வும் வளர்ச்சியும், முதலாளியம் அரசு அதிகாரம் ஏகாதிபத்தியம் ஆகியவற்றின் ஊடுருவலோடு செயல்படுபவர்களின் மூலம் நிறைவேறாது. இத்தகையவர் தமிழை அழிப்பவர். கவிதைக்கும், மேடைக்கும், தெருச்சண்டைக்கும், தேர்தல் சண்டைக்கும்

தமிழைப் பயன்படுத்துக் கொள்பவர். இவர்களின் செயல்பாடு களை தமிழின் வாழ்வென்றும் வளர்ச்சி என்றும் அறவே மதிக்க முடியாது. இதுதான் அடிப்படையான உண்மை. இதுபற்றி கருத்தெதுவும் சொல்ல திராணியற்றவர் நீங்கள். தமிழகத்தில் பார்ப்பனியம் பற்றி என் கருத்தைப் பலமுறையும் நேரில் கூறி யுள்ளேன். இன்குலாப் அவர்களுக்கும் மூன்று கார்டுகளில் சுருக்கமாக எழுதினேன். இக் கருத்துக்களை இன்குலாப் நேர் முகத்தில் எதிர் கொள்வதாகத் தெரியவில்லை. என் கருத்துக் கள் தனக்கு உடன்பாடில்லை என்பதை மட்டும் இன்குலாப் தெரிவித்தார். இங்கும் சுருக்கமாக என் கருத்துக்களை எழுது கிறேன். இதற்கும் உங்கள் பதில் தேவை.

2. இந்தியாவில் / தமிழகத்தில் முதலாளியம் கட்டற்ற வளர்ச்சி நோக்கி தன்னைத் திரட்டிக் கொண்டிருக்கிறது. அரசு அதிகாரம் இதற்கு முழு அளவில் ஒத்துழைக்கிறது. இவை இரண்டினுள்ளும் ஊடுருவி இவற்றைத் தன் ஆதிக்கத்திற்குள் கட்டுப்படுத்த முனைந்திருக்கிறது ஏகாதிபத்தியம். இவற்றின் கரங்கள் எல்லாக் களங்களிலும் ஊடுருவியுள்ளன. மத்திய வர்க்கத்தின் பெரும்பகுதி இந்த ஆதிக்க சக்திகளின் ஊடுரு வலுக்கும் அரவணைப்புக்கும் இடம் தந்திருக்கின்றன. இச்செய லின் மூலம் உழவர்கள், தாழ்த்தப்பட்டவர், பெண்கள் முதலிய உழைக்கும் மக்கள் மீது திணிக்கப்படும் சுரண்டலுக்கும் ஒடுக்கு முறைக்கும் இவர்கள் கருவிகளாகச் செயல்படுகிறார்கள்.

இது இன்றைய அரசியல் பொருளாதாரம். முதலாளியத் தையோ, அரசு அதிகாரத்தையோ ஏகாதிபத்தியத்தையோ தோற்றுவித்ததில் பார்ப்பனர்க்குப் பங்கு இல்லை. பிறகு எங்கே பார்ப்பனன் இடம் பெறுகிறான் என்ற கேள்விக்கு என் பதில் இதுதான். முதலாளிப் பெருக்கத்திற்கு / இதைப் போலவே அரசு, அதிகாரம், ஏகாதிபத்தியம் ஆகியவற்றின் பெருக்கத் திற்கு, இன்று தேவையான சாதனங்களில் முதன்மையானது நவீன அறிவியல், தொழில்நுட்பம்.

முதலாளியத்தின் ஆக்கத்திற்கு நவீன அறிவியல், தொழில்நுட்பம் ஆகியவற்றில் தேர்ந்த நுண்ணறிவாளர் தேவை. அறிவியலாளர், கணித வல்லுநர், கணிப் பொறி யாளர் என்று பலர் தேவை. இவர்களில் பெரும்பாலானோர் பார்ப்பன சமூகத்திலிருந்து வருபவர்கள். பல நூறு ஆண்டுகள்

நுட்பமான மூளைத்திறனோடு தம்மை வளர்த்துக் கொண்ட பார்ப்பனர்கள் இங்கு சரியாகப் பொருந்துகிறார்கள்.

திரும்பவும் சொல்கிறேன். இவர்கள் முதலாளியம், அரசு அதிகாரம் ஆகியவற்றின் ஆக்கத்துடன் ஒத்துழைக்கிறார்களே அன்றி, இவர்கள் முதலாளியத்தை தோற்றுவிக்கவில்லை. இரண்டு பார்ப்பனர் இருக்கும் இடத்தில் மூன்றாவது பார்ப்பனனையும் இவர்கள் சேர்த்துக் கொள்வார்கள். இவர்கள் சதிகாரர்கள். அங்குமிங்கும் சிலவற்றை தம் நெறியில் திருப்பிக் கொள்வார்கள், அவ்வளவுதான். இவர்களின் சதிச் செயலால் முதலாளியத்தின் பயணம் சற்று விரைவுபடும். வரலாற்றின் திசை வழியை சதிச்செயல் மாற்றுவதில்லை என்று எங்கல்சு நிறையவே எழுதியுள்ளார். வரலாற்றை இயக்கும் சக்திகளில் சதி ஒன்றல்ல.

3. பார்ப்பனியம், பனியா என்று ஒன்றுக்கொன்று இணையான இருபெரும் சக்திகளைக் குறிப்பிட்டு, இவைதான் இந்தியாவின் ஆதிக்கசக்திகள் என்று சிலர் காட்ட முனைந்துள்ளனர். பார்ப்பனியத்திற்கு பனியாவோ அல்லது பனியாவிற்கு பார்ப்பனியமோ நிகரான சக்தி என்று இவர்கள் வரிசைப்படுத்துவதிலிருந்து தெரிகிறது. பனியா என்றால் வணிகர்களைக் குறிக்கும். லேவாதேவிக்காரர்களையும் இச்சொல் அடக்கும். இதற்கு மேல் இச்சொல்லின் பொருளை நீட்ட முடியாது. முதலாளியத்தை, அப்புறம் அரசு அதிகாரத்தை, அப்புறம் ஏகாதிபத்தியத்தை இச்சொல்லுக்குள் திணிக்க முடியாது. தர்க்க நீட்சி என்று பெயர் சொல்லி, இம்மாதிரி அயோக்கியத்தனத்தைச் செய்ய முடியாது. நம் நண்பர்கள் இப்படிச் செய்ய முடியாது. இவர்கள் மார்க்சியத்தைக் குறுகத்தரிக்கிறார்கள்.

4. அரசு அதிகாரம் தன்னை நிலை நிறுத்திக் கொள்வதற்கும் பெருக்கிக் கொள்வதற்கும், பௌதிக ரீதியில் / பருண்மை வடிவத்தில் செயல்படுவதோடு கருத்தியல் தளத்திலும் தன்னைக் காத்துக் கொள்கிறது. அரசு அதிகாரத்திற்கு ஆதாரவான கருத்தியல் என்பது ஒன்றல்ல, பல. இவற்றில் ஒன்று பார்ப்பனியம். அரசு அதிகாரத்தின் காவலுக்கென நிற்கும் கருத்தியல்கள் பலவற்றுள் முதன்மையானது பார்ப்பனியம் என்பதும் உண்மையல்ல. இந்த அரசு அதிகாரம், மக்களாட்சி என்று கருத்தியல் சொல்லி தன்னைக் காத்துக் கொள்கிறது. சந்தைப் பொருளாதாரம் என்று பேசுகிறது.

இந்திய ஒருமைப்பாடு என்று முதலாளிய நோக்கில் பேசுகிறது. இன்னும் பலவற்றை இது சொல்லும். அரசு இல்லாமல் அரசின் வன்முறை இல்லாமல் முடியாது என்றும் இது பேசும். இப்படி அரசு அதிகாரத்தின் சார்பில் விரிந்து செல்லும் கருத்தியல்கள் பல. பார்ப்பனியம். இக்களத்தில் எங்கே என்ன சொல்கிறது? பாதகண்டம் என்று பார்ப்பனியம் சொல்லும். முதலாளியம் வேண்டும் என்று சொல்வது பார்ப்பனியத்திற்கு உகந்தது. ஆனால் இதுவே பார்ப்பனியம் அல்ல. மக்களாட்சி என்பது பார்ப்பனியக் கோட்பாடா? மக்களின் மீது ஒடுக்குமுறையைத் திணிக்க வேண்டும் என்று முதலாளிய சக்திகள் சொல்லும்போது பார்ப்பனியம் சேர்ந்து கொள்ளும். இங்கெல்லாம் அரசு அதிகாரத்துக்கான கருத்தியல்கள் பல. இவற்றில் பார்ப்பனியத்தின் முதன்மை பற்றி நாம் பேச முடியாது.

5. நம் சமூகத்தில் பிற்படுத்தப்பட்டவர்கள் - தாழ்த்தப்பட்டவர்களும் பெரும்பகுதியினராக உள்ளனர். இவர்களின் மீது காண்டலையும் ஒடுக்குமுறையையும் திணிப்பவர் எண்ணிக்கை அளவில் சிறுபான்மையினர் என்றாலும் இவர்கள் ஆதிக்கச் சக்திகள். கவுண்டர்கள், செட்டியார்கள் எனத் தொடங்கி இவர்களுக்கு சாதிப்பெயர் சொல்ல முடியும். இவர்களுக்கு சாதி என்பது ஆதிக்கத்திற்கான கருவி. லாபத்திற்கான கருவி. இவர்களுக்கு சாதி தேவை. சாதியைவிடச் சொன்னால் விடமாட்டார்கள். பிற்பட்ட மக்களுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் சாதி என்பது அதிகாரத்தையோ லாபத்தையோ தருவதில்லை. இவர்களிடம் சாதி உணர்வு இருக்கிறதே அன்றி, சாதியை இவர்களால் உதிர்த்துக் கொள்ள முடியும். நம் சமூகத்தில் செயல்படும் இந்தச் சாதியத்தை சிலர் பார்ப்பனியம் என்று சொல்வதைப் புரிந்து கொள்கிறேன். இங்கும்கூட சாதியத்தைப் பார்ப்பனர்தான் தோற்றுவித்தனர் என்பதை வரலாற்று ஆதாரங்களிலிருந்து மெய்ப்பிக்க முடியாது. மார்க்சியத்தை எதிர்க்கும் நோக்கில் பெரியாரியத்தினர் இப்படி கூச்சல் எழுப்புகின்றனர். (இவர்களில் நீங்களும் ஒருவர் என்பதில் எனக்கு இப்பொழுது ஐயமில்லை) இங்குகூட சாதியம் என்பது முதலாளியத்தோடும் அரசு அதிகாரத்தோடும் ஒத்தோடும் ஒரு சக்தியே அன்றி முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும் இது தோற்றுவிக்கவில்லை. சாதியம் என்பது இங்கு பொருட்படுத்த வேண்டிய ஒரு சக்தி என்பதற்கு மேல் முதலாளியத்திற்கும் அரசு அதிகாரத்திற்கும் நிகரான சக்தி இது என மதிக்க முடியாது. இவ்வளவும் சொல்லிவிட்டு

இப்பொழுது கேட்கிறேன். பார்ப்பனியத்தை எப்படி முதன்மையான சக்தி என்று கணிக்க முடியும். கலை இலக்கியம், கலாச்சாரம் என பிறகு பேசலாம். இதுவரை நான் சொன்னதற்கு உங்களிடமிருந்து நேர்மையான பதில் தேவை. 'தமிழரின் வாழ்வுரிமை மலரிலும்' 'இலக்கியப் பாசறையிலும்' 'அரங்கேற்றத்திலும்' நீங்கள் எழுதிவரும் கட்டுரைகளைப் படித்துக் கொண்டுதான் இருக்கிறேன். தாசிப்புயல் கிளப்பும் உங்களைப் போன்ற புழுதிகளின் ஆட்சி இங்கு தொடரத்தான் செய்யும். இதுபற்றி நான் இப்பொழுது கவலைப்படவில்லை. 'நிகழு'க்கு எதிராகவே என்னைத் திருப்பும் உங்களது கீழ்மைக்குணம், இதைவிட அடியாழத்திற்கு இனி செல்ல முடியாது. 'நிகழ் 23' தலையங்கத்தில் நான் எழுதியிருந்த வாசகம் உங்கள் கண்ணில் பட்டிருக்குமா? 'சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் எந்த வடிவிலும் நாம் ஏற்பதற்கில்லை' இந்த வாசகம் பார்ப்பனியத்திற்கும் எதிரானதுதான். ●

ஞானி
**என்ன சொல்கிறார் இந்த நூலில் ?**

புதிய காலனியத்திற்கு மார்க்சியம் முதலிய கருத்தியல்கள் எத்தகைய எதிர்வினை தரவேண்டும் என்பது பற்றியும் தன் சிந்தனைகளை முன் வைக்கிறார். மார்க்சியம் தனக்குள் இருக்கிற முதலாளியத்தைக் களைந்து கொள்ள வேண்டும். சாதி, மதம், பார்ப்பனியம் பற்றிய எதிர்ப்புணர்வில் மட்டும் மையம் கொள்கிற பெரியாரியம், முதலாளியப் பெரியாரியம். சமதர்மத்தில் மையம் கொள்கிறபொழுதுதான் பெரியாரியம் தனக்குள்ளிருந்து முதலாளியத்தைக் களைந்து கொள்ள முடியும். தமிழியல் ஆய்வுகளுக்குள்ளும், படைப்புகளுக்குள்ளும் படைப்பாளிகள் மற்றும் திறனாய்வாளர்களுக்குள்ளும் பதிந்திருக்கிற ஆதிக்க உணர்வை முதலாளியம் மற்றும் அரசு அதிகாரம் என்றுதான் கண்டு கொள்ள வேண்டும். ஆணாதிக்கம் என்பதனுள்ளும் தோண்டிக்கொண்டே சென்றால், நம் காலத்து ஆதிக்க சக்திகளின் வசப்பட்டிருக்கும் ஆண்களின் ஆதிக்கம் என்பதைப் புரிந்துகொள்ள முடியும். தலித் மக்களின் விடுதலை என்பது சாதியத்திலிருந்து விடுதலை பெறுவதாக மட்டும் இல்லை. இந்தச் சாதியம் முதலாளியத்திற்கு அரணாகவும் அமைந்திருக்கிறது. இவ்வாறெல்லாம் ஞானி விவாதிக்கிறார். மனித விடுதலை என்பது பற்றி இடையறாது பேசுகிறார். மார்க்சியர் மற்றும் பெரியாரியர் முதலியவர்கள் தமக்குள் இருக்கும் ஆதிக்கத் தடங்களை கண்டு கொள்வதிலிருந்து அவர்களின் விடுதலைக்கான போராட்டம் தொடங்கவேண்டுமென்கிறார் ஞானி. இத்தகைய போராட்டத்தில்தான் மனிதன் தனக்கான விடுதலையைப் பெறமுடியும். எல்லாக் கட்டுரைகளிலும் ஓயாது முழங்குகிறது இந்த விடுதலைக் குரல்.

—அறிவன்